# உலக வரலாறு

## ( 1650 - 1965 )

( For Madras and Madurai Pre-University Courses )

**பா. சூரியநாராயணன், எம்.ஏ.,எம்.ஏ.,எம்.லிட்.,**

அழகப்பா கல்லூரி, காரைக்குடி

**PUBLISHER :**

## AR. KUMARAPPAN

**KARAIKUDI**

# ஆசிரியர் குறிப்பு

இந்நூலில் உள்ள உலக வரலாற்றுக் கட்டுரைகள், சென்னைப் பல்கலைக் கழகத்தின் 1965-ம் ஆண்டு முன்னிலை வகுப்பு வரலாற்றுப் பாடத்திட்டத்தை ஒட்டி எழுதப்பட்டவை. சென்னை, மதுரை முதலிய பல்கலைக் கழகங்களின் முன்னிலைவகுப்புத் தேர்வுக்கு, வரலாற்றுப் பாடத்தைத் தமிழில் கற்கும் மாணவருக்கு இந்நூல் பயனுள்ளதாக இருக்கும். கல்லூரியில் பயிலும் மாணவர் வரலாற்றுச் செய்திகளை அவற்றுக்குரிய முழுவிளக்கங் களோடு அறிதல் வேண்டும். இம்முறையில் வரலாற்று நிகழ்ச்சிகள் தக்க விளக்கங்களோடு இதில் எழுதப் பட்டுள்ளன. மேலும், இந்நூல் பொதுவாகத் தமிழ் அறிந்த யாவருக்குமே உலகவரலாற்றின் ஒரு பகுதியைப் பற்றிய செய்தியைத் (1650–1965) தெரிந்து கொள்ளுதற்கும் துணைபுரியுமென நான் நம்புகிறேன்.

இதனை எழுதுவதற்கு உதவியாக இருந்த கீழ்க் கண்ட நூல்களின் ஆசிரியர்களுக்கு நான் நன்றி செலுத்துகிறேன்.

Word History–Carlton J. Hayes, Parker Thomas Moon and John W. Wayland.

A History of Europe, Part III–A. J. Grant.

Europe in the Nineteenth and Twentieth Centuries (1789 - 1950)—A. J. Grant and H. Temperley.

A Concise History of Great Britain-Robert M. Rayner

Indian Economy: Its Nature and Problems - Alac Ghosh.

A Political and Cultural History of India(Volume III) —Professor R. Sathianathaier.

இந்நூலை நான் எழுதுகையில் எனக்கு உதவி செய்த திருவாளர்கள் ஏ. ஜெகதீசன், எம். ஏ., ஏ. குழந்தைராஜ், எம். ஏ., டி. ஆர். இலட்சுமி நரசையா, எம். ஏ., புலவர் பூ. அமிர்தலிங்கன் ஆகியோருக்கும், மற்றுமுள்ள நண்பர்களுக்கும், இதனைப் பதிப்பித்த திரு ஏ. ஆர். குமரப்பன் அவர்களுக்கும், தென் இந்திய அச்சகத்தாருக்கும் எனது அன்பான நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

1—8—1966
காரைக்குடி-3.

பா. சூரியநாராயணன்.

# காணிக்கை

பிள்ளை தனின் இன்பம் பெறநோற்றுப் பெற்றாலும்
எள்ளளவும் என்கடமை ஏற்கிலராய்—துள்ளும்
இளம்பருவத் தேநீத்த எம்தந்தாய், ஈண்டு
வளம்பெறநீ, அம்பலவா, வாழ்த்து.

தந்தைகடன் மேற்கொண்டு தக்கோனாய் வாழவைத்த
எந்தாய் மகராசி இன்பமுற—மைந்தன்யான்
பேணி வழங்குகின்றேன், பேரன்பால் இந்நூலைக்
காணிக்கை யாகக் களித்து.

## பொருளடக்கம்.

# முன்னுரை

உலகவரலாறு என்பது மக்கள் சமுதாயம், பொருளாதாரம், அரசியல், ஆட்சி இயல், சமயம், இலக்கியம், அறிவியல், தொழில் நுட்பக்கலைகள், நுண்கலைகள் முதலிய துறைகளில் அடைந்துள்ள முன்னேற்றங்களையெல்லாம் கால அடிப்படையில் தொகுத்துக்கூறும் நூல் ஆகும். இது கடந்த காலத்தில் மனித இனம் இயங்கியதைக் காட்டும் அடிச்சுவடாக இருப்பதைப் போலவே எதிர்காலத்தில் அவ்வினம் இயங்கவேண்டிய நெறியைக் காட்டும் வழிகாட்டியாகவும் இருக்கிறது.

இங்கு வரையப்பெறும் கட்டுரைகள் கி. பி. பதினேழாம் நூற்றுண்டிற்குப் பிந்திய காலத்தின் உலக வரலாற்றைச் சுருக்கமாகக் கூறுகின்றன. எனவே, அவ்வரலாற்றைக் கூறுவதற்கு முன்னர், அதனை ஆக்குவதற்கு உதவியாக இருந்த பண்டைய வரலாற்றின் சில கூறுகளை இங்கு குறிப்பிடுதல் பொருத்தமுடையதாகும். அவையாவன: (1) கிரேக்க, ரோமானிய நாகரிகங்களின் சில இயல்புகள்; (2) கிறிஸ்தவ இஸ்லாமிய சமயங்கள்; (3) இலக்கிய மறுமலர்ச்சி; (4) புதிய நாடுகள் கண்டுபிடிப்பு; புதிய தேசிய நாடுகள் மேற்கு ஐரோப்பாவில் தோன்றுதல்; கிறிஸ்தவ சமயச் சீர்திருத்தம்; (5) இந்தியா முதலிய கிழக்கத்திய நாடுகளின் நிலை.

(1) கி. மு. 10-ம் நூற்றுண்டிலிருந்து கிரீஸ்நாட்டில் பல நகரங்களாகப் பிரிந்து சுய ஆட்சியில் வாழ்ந்துவந்த கிரேக்கரும், சிறப்பாக அதீனியரும், நடு இத்தாலியில் உள்ள ரோம் நகரரசை மையமாகக் கொண்டு ஓர் பேரரசை நிறுவிய ரோமானியரும் அரசியல் துறையில்

பல அரிய கருத்துக்களையும், செயல் முறைகளையும் நம் காலத்தவருக்கு விட்டுச் சென்றுள்ளனர். ஆரியராகிய இவ்விரு இனமக்களும், சட்டத்துக்குக் கட்டுப்பட்ட உரிமை வாழ்க்கையினை வாழும் முறையினையும், குடியாட்சி முறையின் நல்லியல்புகளையும், மனித ஆற்றல் எல்லாத் துறைகளிலும் முழுவளர்ச்சி பெறவும், பயனுள்ள வாழ்க்கை (good life) வாழவும் வழிசெய்வது தான் ஆட்சிமுறையின் நோக்கம், என்ற கருத்தையும், பேரரசுக்குகந்த ஆட்சிமுறையினையும் வகுத்தனர். இக்காலக் குடியாட்சிமுறை, உரிமை வாழ்க்கை பற்றிய கருத்து, சட்டத்தை அடிப்படையாகக் கொண்ட ஆட்சி முறை, சட்டவகைகளின் அடிப்படை ஆகியவெல்லாம் ஓரளவேனும் பண்டைய கிரேக்க ரோமானிய மக்களா

(2) ரோமானியப் பேரரசர் அகஸ்டஸ் சீசருடைய ஆட்சிக்காலத்தில் (கி. மு. 44 – கி. பி. 14) ரோமானிய மாகாணமாகிய பாலஸ்டைனில் பிறந்த இயேசு கிறிஸ்துவின் அருள் மொழிகள் இறைவனுடைய ஒருமைப் பாட்டையும், மக்களுடைய சகோதரத் தன்மையையும், அவர்களுடைய கடமையையும் வலியுறுத்தின. இவற்றைப் பரப்புவதற்காகத் தோன்றிய கிறிஸ்தவத் திருச்சபை மறைந்த பழைய ரோமானியப் பேரரசின் ஆட்சி அமைப்பைப் போன்றதொரு அமைப்பைஏற்படுத்தி, அரசர்களுடைய எதேச்சாதிகாரப் போக்கைத்தடுத்து, உலகியல் சமயநெறிக்கு ஏற்ப இருக்கும்படி நெடுங்காலமாகத் தொண்டாற்றியது. பதினாறும் நூற்றாண்டில், திருச்சபைத் தலைவரான போப்பிற்கு எதிராகச் சமயப்புரட்சி தோன்றி அதன்விளைவாகத் தேசியக் கிறிஸ்தவத் திருச்சபைகள் தோன்றின; எனினும் பண்டைய ஒரே திருச்சபை, சமுதாயம், பொருளியல், அரசியல், நுண்கலை ஆகியவற்றில்

சிறிது முன்னேற்றங்காண வழிசெய்தது; எனவே அதற்குச் செல்வாக்கும் பெருகி இருந்தது. கி. பி. ஆரும் நூற்ருண்டில் வடமேற்கு அரேபியாவில் பிறந்த தீர்க்க தரிசியாகிய முகமதுநபிநாயகமும் இறைவனுடைய ஒருமைப் பாட்டையும், மக்களின் சகோதரத் தன்மையையும், நல்ல உலகியல் நெறியையும், அருளினூர், இஸ்லாம் சமயம் அரேபியா, மேற்கு ஆசியா, பாரசீகம், ஆப்கானிஸ்தானம், சிந்துவெளி, வடஆப்பிரிக்கா, ஸ்பெயினின் தென்பகுதி ஆகியவற்றில் பரவிற்று. அராபியர்கள் பண்டைய கிரேக்க ஆசிரியர்களின் நூல்களைக் கற்றறிந்து, ஐரோப்பியருக்கு அளித்தனர்.

(3) இலக்கிய மறுமலர்ச்சி என்பது, ஐரோப்பாவில், சிறப்பாக இத்தாலிய நகரங்களில் பதின்மூன்ரும் நூற்ருண்டில், பண்டைய உயர்தனிச் செம்மொழிகளாகிய கிரேக்க, லத்தீன் மொழிகளிலெழுதப்பட்ட இலக்கியங்களின் உணர்வுகளையும், கருத்துக்களையும் கற்பதில் மக்கள் காட்டிய ஈடுபாடே ஆகும். இவ்விலக்கியங்களை எழுதிய பண்டைய ஆசிரியர்கள், சமயச்சட்ட முறை எதனையும் பின் பற்ருமல், மனிதனுக்குகந்த நல்வாழ்க்கையையே குறிக்கோளாகக் கொண்டு, மனித ஆற்றல் மனித உணர்ச்சி ஆகியவற்றைப் பின்பற்றியே எழுதினர். எனவே இக்கருத்துக்களின் வாயிலாக நூல்களையும் வரலாறுகளையும். திறனுய்வு செய்யும் முறையும், உலகியலின் பத்துக்குகந்த சிற்பம், ஓவியம், இசை முதலிய நுண்கலைகளைப் போற்றும் மனப்பான்மையும் கி. பி. 14–ம் நூற்ருண்டிலிருந்து வளரலாயின; இத்தகைய மனப்பான்மையே இக்காலப் போக்கு ஆகும். எதனையும் நம்பிக்கையின் அடிப்படையில் ஒப்புக்கொள்ளாமல், காரண காரிய அடிப்படையில் ஆராயும் திறமும் தோன்றிற்று.

(4) இப்போக்கே 1517–ல் மார்ட்டின் லூதர் என்ற ஜெர்மன் கிறிஸ்தவத் துறவி போப்பின் தலைமையை எதிர்த்துப் புரட்சி செய்யவும், அதன் விளைவாகத் தேசிய அரசாங்கங்களின் கட்டுப்பாட்டில் இயங்கும் தேசிய பிராடஸ்டென்ட் திருச்சபைகள் தோன்றவும் காரணமாக இருந்தது. கலைமறுமலர்ச்சி இயக்கமும், சமயச் சீர்திருத்த இயக்கமும்,யாவரிடத்தும் தன்னம்பிக்கையையும், தன்முயற்சியையும், உரிமை உணர்வையும், மிகுதியாக்கின. புதிய நாடுகளைக் கண்டுபிடிக்கும் ஆர்வமும் தோன்றிற்று. மேற்கு ஐரோப்பாவில் இங்கிலாந்து பிரான்சு, ஸ்பெயின், போர்ச்சுக்கல் முதலிய நான்கு இறைமை உடைய தனி அரசுகள் (Sovereign States) தோன்றின. நிலமானிய முறை நீங்கி, எல்லாமக்களும், ஒரே அரசாங்கத்திற்கும், சட்டமுறைக்கும் கட்டுப்பட்டு வாழ்தல் என்ற இக்கால அரசுமுறை, இறைமையுடைய அரசுமுறை ஆகும். இப் புதிய தேசிய அரசுகளே பிற் காலத்தில் குடியேற்ற நாடுகளை நிறுவுவதில் பெரும் பங்கு எடுத்துக் கொண்டன.

(5) இந்தியா முதலிய கீழ்த்திசை நாடுகள் தத்தம் பண்டைய நாகரிகங்களின் இயல்புகளைப் பின்பற்றி வந்தன. இந்தியாவில் பல இந்து அரசுகளும், முஸ்லிம் அரசுகளும் இருந்தன. சீன முழுமைக்கும் ஒரே அரசு இருந்தது. எனினும் இவற்றில் ஒற்றுமையும், வலிமையும் இல்லாததால், இவை குடியேற்ற நாடுகளை நிறுவ முயன்ற மேற்கத்திய நாடுகளுக்கு இடம்அளிக்க வேண்டிய நிலையிலிருந்தன.

# 1. ஐரோப்பாவில் எதேச்சாதிகார அரசர்களின் காலம்

## (அ) பிரான்சை ஆண்ட பதினான்காம் லூயி (1643–1715)

[1 முன்னுரை 2 பிரான்சில் எதேச்சாதிகார முடியாட்சி தோன்றுவதற்கு ஏற்ற சூழ்நிலைகள் 3 பதினான்காம் லூயியின் குணங்களும், நோக்கமும் 4 உள்நாட்டுக் கொள்கை 5 அயல்நாட்டுக் கொள்கை 6 லூயியின் எதேச்சாதிகார ஆட்சியின் விளைவுகள்]

1 இக்காலம் மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு, மக்களுக்குப் பொறுப்பான குடியாட்சி அரசாங்கம் நடைபெறும் காலம். இக்குடியாட்சி முறையும் முதலில் மன்னராட்சி (monarchy), பிரபுக்களாட்சி (aristocracy), செல்வராட்சி (oligarchy) முதலிய ஆட்சி வகைகள் மக்கள் சமுதாயங்களில் பல்வேறு காலங்களில் நடைபெற்றதற்குப் பின்னர், பல்வேறு சூழ்நிலைகளில் தோன்றியதாகும். மக்களுடைய பிரதிநிதிகளடங்கிய சட்ட மன்றத்திற்கோ வேறு எந்த அரசியல் நிறுவனத்திற்கோ பொறுப்பாக இல்லாமல், ஆளுபவருடைய விருப்பத்திற் கேற்பவே ஆட்சி அதிகாரமானது கையாளப் படுமாயின், அத்தகைய ஆட்சி எதேச்சாதிகார ஆட்சி (despotism) எனப்படும். எனவே எதேச்சாதிகார அரசாங்கம் அரசராலோ, அல்லது ஆளும் கட்சியிலோ நிறுவப்படலாம். ஐரோப்பாவில் குடியாட்சி முறை கடந்த இருநூறு ஆண்டுகட்குள்ளாகத்தான் தோன்றியுள்ளது. இத்தகைய ஆட்சி முறைக்கு முற்பட்ட காலத்தில் மன்னர்களே ஆட்சிப் பொறுப்பை ஏற்றிருந்தனர். பதினேழாம் நூற்றுண்டில் அறிவாளி-

களாகக் கருதப்பட்ட எதேச்சாதிகார அரசர்கள் (1) பிரான்சை ஆண்ட பதினான்காம் லூயி அரசரும் (1643 – 1715), (2) பிரஷ்யா நாட்டை ஆண்ட புகழ் பெற்ற இரண்டாம் பிரடரிக் அரசரும் (1740 – 1786), (3) ரஷ்யா நாட்டை ஆண்ட பேரரசர் பீட்டரும் (1682–1725) ஆவர்.

2 கி. பி. பதினான்காம் நூற்றாண்டிலிருந்தே ஐரோப்பிய நாடுகள் அனைத்திலும் எதேச்சாதிகார முடியாட்சி தோன்றுவதற்கு ஏற்ற சூழ்நிலைகள் காணப் பட்டன. (1) கி. பி. 1096 லிருந்து கி. பி. 1291 வரையில் ஐரோப்பிய கிறிஸ்துவ அரசர்களுக்கும் பாலஸ்டைனை ஆண்ட துருக்கிய முஸ்லீம் அரசர்களுக்குமிடையில் நடைபெற்ற சிலுவைப் போர்களின் விளைவாக, மேற்கத்திய அரசர்கள் கிழக்கத்திய நாடுகளிலுள்ள எதேச்சாதிகார அரசர்களைப் போல வரம்பற்ற அதிகார முடையவர்களாக ஆகும் மனநிலையில் அமைந்தனர். (2) இடைக்கால ஐரோப்பாவில் அரசர்களின் எதேச் சாதிகாரப் போக்கைத் தடுத்து வந்த கிருஸ்துவ திருச்-சபையும், பின்னர் அரசர்களுடைய அதிகார வளர்ச்சிக்கு ஆதரவளித்தது; ஏனெனில் உள்நாட்டுப் போர்-களுக்குக் காரணமாக இருந்த படைமானியப் பிரபுக்களை ஒடுக்குவதற்கும் அமைதியை ஏற்படுத்தவும் அரச-னுடைய அதிகாரம் தேவைப்பட்டது. மேலும் பிற் காலத்தில் பல்வேறு குறைபாடுகளினால் பலவீன-மடைந்த கிறிஸ்தவ திருச்சபை, அரசனுடைய அதிகார வளர்ச்சிக்கு இணங்கி இருந்தது (3) சமுதாயத்தில் நடுத்தர வகுப்பினர் அரசருக்கு அளித்த ஆதரவு அவரது அதிகாரத்தைப் பெருக்கிற்று. இவ்வகுப்பினர் பொருள் வளமும், அறிவுக் கூர்மையும் பெற்றுத் தொழிலும் வாணிபமும் பெருக்கி, அரசருக்கு வரிப்பொருளும், படைக்கு வீரரும், ஆட்சிக்கு வேண்டிய அலுவலரும்,

வழக்கறிஞரும் அளித்தனர். அவர்களுக்கு அரசரது பாதுகாப்புத் தேவைப்பட்டது. எனவே இவர்களால் ஆதரிக்கப்பட்ட அரசருடைய அதிகாரம் வளர்ந்தது. (4) பதினைன்காம் நூற்றாண்டிலிருந்தே பல்வேறு நாடுகளிலுள்ள ஐரோப்பிய மக்கள் தத்தம் நாட்டின் மொழி, இலக்கியங்கள் ஆகியவற்றை வளர்க்கவும் தேசீயப் பற்றை வளர்க்கவும் தலைப்பட்டனர்; இவற்றில் படைமானியப் பிரபுக்களின் ஆட்சியை நீக்கி, நாடு முழு-வதையும் ஒரே ஆட்சியில் கொண்டுவரும் அரசர்களிட-த்தில் பற்றுறுதி காட்டினர். இவ்வியல்பில் அரசருடைய அதிகார வளர்ச்சிக்குத் தடை ஏதும் இல்லை. (5) பண்டைய ரோமானியச் சட்டத்தின் படி நாட்டின் சட்டத்தைச் செய்யவோ, மாற்றவோ, கூடிய அதிகாரம் நாட்டை ஆளும் அரசரிடமே இருந்தது. இச் சட்ட-மானது 14-ஆம் நூற்றாண்டில் கற்கப்பட்டது. எனவே சட்ட அறிஞர்கள் அரச அதிகாரம் ஒன்றையே செல்லு-படியாகக் கூடியதென ஒப்புக்கொள்ளவே, அரச அதிகாரம் வளர்ந்தது. (6) மன்னர்கள் நாட்டின் சட்டங்களுக்கும், பாராளுமன்றங்களுக்கும் மேலானவரென்பதாக மக்கிய வெல்லி என்ற இத்தாலியர் ஒரு கருத்தைத் தான் எழுதிய 'இளவரசர்' (Prince) என்ற நூலில் வெளியிட்டார். இதை ஏற்றுக் கொண்ட நாடுகளில். இது அரசரின் அதிகார வளர்சிக்கு வழி வகுத்தது. (7) துப்பாக்கி மருந்து கண்டுபிடிக்கப்பட்டது. இதனைக் கொண்டு அரசர்கள் காலாட்படைகளைப் பெருக்கி நில மானியப் பிரபுக்களுடைய குதிரை வீரர்களை அடக்கித் தமது அதிகாரத்தை நிலை நாட்டினர். இத்தகைய பொதுவான காரணங்களோடு பிரான்சில் எதேச்சாதிகார முடியாட்சி தோன்றுவதற்கு வேறு சில சூழ் நிலைகளும் இருந்தன. (1) பிரான்சை ஆண்ட போர்போன் குடும்பத்தில் அடுத்தடுத்துத் திறம் மிக்க

பல அரசர்கள் தோன்றினர். நான்காம் ஹென்றி, பதின்மூன்ரும் லூயி (1610–1643), பதினான்காம் லூயி முதலியோர் திறம் மிக்கவர். (2) பிரான்சில் எதேச்சாதிகார முடியாட்சியை நிறுவ கார்டினல் ரிச்சலு என்ற அமைச்சரும், கார்டினல் மாசரின் என்ற அமைச்சரும் பல செயல்களைச் செய்தனர். அரசருடைய அதிகாரத்திற்குத் தடையாக இருந்த பிரஞ்சு பிராட்டஸ்டண்டுகளின் கோட்டைகள் அழிக்கப்பட்டன. பிரபுக்கள் அரசரை எதிர்க்க முடியாதபடி ஒடுக்கப்பட்டனர். அரசருடைய அதிகாரத்தைத் தடுக்கக் கூடிய பிரஞ்சுப் பாராளுமன்றமாகிய ஸ்டேட்ஸ் ஜெனரல் (States General), 1614-ஆம் ஆண்டிற்குப் பின்னர் அரசர்களால் கூட்டப்படவே இல்லை. ஏனெனில் அதனைக் கூட்டி அதன் உடன்பாட்டைப் பெருமலேயே அரசர் படை முழுவதையும் தன் கட்டுப்பாட்டில் வைத்திருக்கவும், தன் விருப்பம் போல் சொத்து வரியை விதிக்கவும் கூட்டவும் 1439–லும் 1445–லும் அதிகாரங்களைப் பெற்றிருந்தார். (4) இங்கிலாந்தில் நடுத்தர வகுப்பினர் தங்களுடைய உரிமைகளைப் பாதுகாத்துக் கொண்டு, அரசரின் எதேச்சாதிகாரப் போக்கை எதிர்த்து இருக்க, பிரான்சில் உள்ள நடுத்தர வகுப்பினர் அரசருடைய எதேச்சாதிகார ஆட்சி நிலை பெற்றிருப்பதற்கு உதவியாக அவருடைய ஆணைகளை நிறைவேற்றும் அலுவல்களை ஏற்றனர். 14–ம் லூயி 1661–ல் தனக்கு 18–வது வயது வந்ததும் ஆட்சிப் பொறுப்பு முழுவதையும் தானே ஏற்று அரசாங்கத்தை நடத்தினர். அவர் தனக்கென முதல் அமைச்சர் எவரையும் அமர்த்தாமல், தானே அதிகாரத்தைச் செலுத்தி, தான் கடவுளால் அமர்த்தப்பட்ட அரசராகையால் தான் மக்களுக்குப் பொறுப்பானவரில்லை எனக் கருதித், தனது ஆணைகளை நிறைவேற்றுதற்கு நடுத்தர

வகுப்பிலிருந்து அலுவலரை அமர்த்தி ஆண்டார். அவருக்கு உதவியாக இருந்த ஒரு அரச மன்றம், அவர் பல தீர்மானங்களைச் செய்ய உதவிற்று. அவருடைய அதிகாரமானது பாராளுமன்றத்தாலோ, திருச்சபையினாலோ வரையறுக்கப்படாமல், அவருடைய ஆட்சி மக்களுக்கும் பொறுப்பாக இல்லாமல் அமைந்திருந்ததால், அது எதேச்சாதிகார முடியாட்சி (Royal Despotism) ஆகும். அவரே "அரசு என்பது என்ன? நானேதான் அரசு" என்று ஒரு முறை கூறியதும், அவருடைய ஆட்சியின் இயல்பைக் காட்டுகிறது.

3 லூயி ஐரோப்பிய நாடுகளில் நிலவிய நிலைமையை நன்கு அறிந்தவர்; அரசியல் சூழ்வலி (இராஜதந்திரம்) உடையவர்; திறமை மிக்க போர் வீரர் அல்லராயினும், அவர் முற்றுகைப் போர் முறையில் வல்லவர். 'எனினும் போர்த்திறமையினாலோ அரசியல் திறத்தினாலோ அல்லாமல் அவர், ஐரோப்பிய வரலாற்றில் 'மாட்சி மிக்க அரசர்' (grand monarch) என்று அழைக்கப் படுவதற்கு, அவர் இக்கால முடி-யாட்சியின் மிக உயர்ந்த, புகழ் மிக்க நிலைமையில் விளங்கியதே காரணம்' என வரலாற்றுப் பேராசிரியர் ஏ. ஜே கிராண்ட் கூறுகிறார். மற்ற அரசர்கள் எல்லாம் அவரையே ஒரு எடுத்துக் காட்டாகவும், பிரான்சை ஒரு எடுத்துக் காட்டாகவும் கருதினர், அவருடைய நோக்கம் பிரான்சை ஐரோப்பாவிலேயே ஆற்றல் மிக்க நாடாக ஆக்குவதாகும்.

4 (1) கலை, இலக்கிய வளர்ச்சி: லூயியின் அவைக் களத்தில் அவருடைய ஆதரவைப் பெற்றவரும் பிரஞ்சு நாடகாசிரியருமான புகழ் பெற்ற கார்னீல், ரேசின்,

மோலியர், முதலியோர் இருந்தனர். தத்துவ ஆசிரியர்களாகிய டெஸ்கார்ட்டஸ், பாஸ்கல் முதலியோரும், சமய நூலாசிரியர்களாகிய போசே, பெனிலன் முதலியோரும் இருந்தனர். எனினும் உயர் சுவைத்திறமோ, நாணயமோ, ஒழுக்கமோ அவைக்களத்தில் காணப்படவில்லை என்பதும் அதிலிருந்த செயின்ட் சைமன் என்பவரெழுதிய வாழ்க்கைக் குறிப்பிலிருந்து தெரிகிறது. பாரிஸுக்கு அருகிலுள்ள வெர்சேய்ல்ஸில் கண்ணாடி மாளிகையை லூயி கட்டினார். விஞ்ஞானம் கட்டிடக்கலை, இசை ஆகியவற்றை வளர்க்க அவர் கழகங்கள் (academies) அமைத்தார். (2) அரசருக்கு டுரீன், கோண்டி என்ற சிறந்த படைத் தளபதிகளும், வாபான் என்ற இராணுவப் பொறியாளரும், லொவெய் என்ற போர் அமைச்சரும் சிறந்தபணிகளைச் செய்தனர். (3) தொழில், வாணிபம், நிதிமுதலியவற்றில் அரசருக்கு உறுதுணையாயிருந்து பணிசெய்தவர், கோல்பர்ட் என்ற பொருளியல்அறிஞராவர். நடுத்தர வகுப்பினராகிய இவர், நிதி அமைச்சராக அமர்ந்து அரசாங்கத்தின் நிதி நிலைமையைச் சீர்திருத்தினார். வரி தண்டுபவர்களைக் கண்காணித்தும், வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி ஆகும் பொருள்களின் மீது உயர்ந்த சுங்கவரிகளை விதித்தும், பிரஞ்சு அரசாங்கத்தின் வருமானத்தைப் பெருக்கினார். இங்கிலாந்து, ஹாலந்து, இத்தாலி முதலிய நாடுகளிலிருந்து பட்டாடை, நெசவு, கண்ணாடி முதலிய தொழில்களில் சிறந்தவர்களை வரவழைத்தும் பிரான்சில் அத் தொழில்கள் வளர்ச்சியடைய வழி செய்தார்; பால்டிக், மத்திய தரைக்கடல் நாடுகளிலும், இந்தியாவிலும், அமெரிக்காவிலும் பிரஞ்சு வாணிபம் நிலை பெறுவதற்காக வாணிபக் கழகங்களை நிறுவினார். அவருடைய முயற்சியால் வட அமெரிக்காவிலும், இந்தியாவிலும், இந்தோ–சீனாவிலும் பல சிறிய

பிரஞ்சு குடியேற்ற நாடுகள் தோன்றின. உள்நாட்டு வாணிப வளர்ச்சிக்காகச் சாலைகளும், கால்வாய்களும் அமைக்கப்பட்டன. கப்பல் படை ஒன்றும் அமைக்கப்பட்டது. இவையெல்லாம் அரசரின் எதேச்சாதிகாரத்தில் விளைந்த சில பயன்களைக் காட்டுகின்றன. (4) அரசருடைய சமயக்கொள்கையும் அவருடைய அதிகார விருப்பத்தைக் காட்டுகிறது. அரசருக்கும் போப்புக்குமிடையே தோன்றிய சில வேறுபாடுகளை ஒட்டி, போப்புக்குச் சமயத்துறைகளில் மட்டுமே அதிகாரம் உண்டு எனவும், அரசருடைய அதிகாரம் போப்பைச் சார்ந்திருப்பது அன்று எனவும், போப்புக்கு அரசரை ஆட்சியினின்றும் நீக்கவோ, குடிமக்களை அரசருக்குக் கீழ்ப்படிதலினின்றும் மாற்றவோ, உரிமையில்லை என்றும், அரசருடைய ஆலோசனைக் குழுவின் ஒப்புதலின் பேரில்தான் போப்புக்குப் பிரஞ்சுத் திருச்சபையின் மீது முடிவான அதிகாம் உண்டு எனவும், லூயி சில விதிகளை வகுத்தார். இவற்றுக்கு காலிக்கன் லிபர்ட்டிஸ் என்று பெயர். கத்தோலிக்கத் திருச்சபையில் சில சீர்திருத்தங்களைக் கொண்டு வருவதற்காக ஜேன்ஸன் என்ற பிஷப்பினால் தோற்றுவிக்கப்பட்ட இயக்கத்தை, லூயி தனது அதிகாரத்திற்குத் தடையாகக் கருதி அதை ஒழித்து விட்டார். இதைவிட அவருடைய அதிகார வெறியையும், குறுகிய சமயப் பற்றையும் காட்டும் செயல் என்னவெனில், அவர் பிரஞ்சுப் பிராட்டஸ்டண்டுகளாகிய ஹ்யூகனட்டுகளுக்கு அரசர் நான்காம் ஹென்றியினால் 1598-ம் ஆண்டில் நான்ட்டிஸ் ஆணையின் மூலமாக (Edict of Nantes) வழங்கப்பட்ட சமய உரிமையை 1685-ல் நீக்கியதாகும். முன்பு ஹ்யூகனட்டுகள் அரசருடைய எதிரிகளெனக் கருதப்பட்டாலும், அவர்களுக்குச் சமய உரிமையும், வழிபாட்டு உரிமையும் இருந்தன. அவர்கள் வாணிபத்திலும்,

தொழிலிலும் சிறந்து விளங்கி, நாட்டின் வருமானத்துக்கு உதவினார்கள். லூயி அவர்களெல்லோரும் கத்தோலிக்கராதல் வேண்டுமெனக் கருதினார். எனவே அவர்களுக்களிக்கப்பட்டிருந்த சமய உரிமைகளை 1685-ல் நீக்கினார். சமய மாற்றத்தை விரும்பாத ஏறக்குறைய 300,000 ஹ்யூகனெட்டுகள் தங்களுடைய தொழில், வாணிபத் திறமைகளோடும், முதலோடும் பிரான்சை விட்டு வெளியேறித் தங்களை வரவேற்ற ஹாலண்ட், இங்கிலாந்து, பிரஷ்யா முதலிய நாடுகளில் குடியேறி, அவ்வந்த நாடுகளைத் தொழிலிலும், வாணிபத்திலும் வளப்படுத்தினர். இவ்வாறு லூயியின் அதிகார வெறி பிரான்சை நல்ல தொழில் திறமை மிக்க ஹ்யூகனட்டுகளின் சிறந்த பணியை இழக்கச் செய்தது.

5. பண்டைய ரோமானியப் பேரரசில் கால் (பிரான்சு) நாட்டுக்குக்கு இருந்ததைப் போலவே, இப்போதும் அதனை பிரனிஸ், ஆல்ப்ஸ் மலைகள், மத்திய தரைக்கடல், அட்லாண்டிக் கடல், ரைன் ஆறு ஆகிய "இயற்கை எல்லைகளுக்கு" விரிவாக்குதல், பிரஞ்சு அரசர் குடும்பத்தினருக்கு உயர்தர அலுவல்களும், அரசுரிமைகளும் கிடைக்கச் செய்தல், ஐரோப்பாவில் பிரஞ்சு அரச குடும்பத்துக்கு எதிரியான ஆஸ்திரிய ஹாப்ஸ்பர்க் அரசர்களைப் பலங்குன்றச் செய்தல் ஆகிய இம்மூன்றும் அவருடைய நோக்கங்களாகும். எனவே அயல்நாட்டு உறவிலும் லூயியின் போக்கு பெரும் போர்களையும், பிரான்சுக்கு இழப்பையும் தந்தது. அவர் ஐந்து போர்களை நிகழ்த்தினர். (1) 1665 முதல் 1668 வரை அவர் ஸ்பெயின், இங்கிலாந்து, ஹாலந்து, ஸ்வீடன் ஆகியவற்றோடு போரிட்டார். தனது ஸ்பானிஷ் மனைவியாகிய மரியதெரிசாவுக்கு சீதனமாக ஸ்பானிஷ் நெதர்லந்தை

அவர் கேட்டதும், அதை ஸ்பானிஷ் அரசர் இரண்டாம் சார்லஸ் தரமறுத்ததுமே இப்போருக்குக் காரணம். முதலில் சிறிது வெற்றி பெற்ற லூயி எய்லா சேப்பல் என்ற இடத்தில் உடன்படிக்கை செய்து ஸ்பானிஷ் நெதர்லண்டில் சில இடங்களைப் பெற்றார். (2) டச்சுக் காரர்களுடன் போர் (1672—1678) முந்தைய போரில் டச்சுக்காரர்கள் லூயியிக்கு எதிராக ஸ்பெயினோடு சேர்ந்து போரிட்டதும், டச்சுக்காரரின் நிலத்தைக் கைப்பற்றி பிரான்சின் வடவெல்லையை ரைன்வரை விரிவாக்க லூயி விரும்பியதும், வாணிபத்தில் பிரான்சிற்கு எதிரியான ஹாலந்தை அழிக்க லூயி எண்ணியதும் இதற்குக் காரணங்களாம்.. லூயி இங்கிலாந்தின் அரசர் இரண்டாம் சார்லசோடு 1672-ல் டோவர் இரகசிய உடன்படிக்கை செய்தும், ஸ்விடனோடு உடன்படிக்கை செய்தும் ஹாலந்தைத் தனியே பிரித்துத் தாக்கினார். பிரஞ்சுப்படை பல நகரங்களையும், கோட்டைகளையும் கைப்பற்றிற்று. வீரத்துடன் போரிட்ட டச்சுக் காரரின் தலைவர் வில்லியம் ஆரஞ்சு, கடல் அணைகளை வெட்டிவிட்டும், ஹாலண்டுக்கு உதவியாக ஸ்பெயினையும், பிராண்டன் பர்க்கையும் பெற்றும் போரை நடத்தினார். நிமீகன் உடன்படிக்கையின் மூலம் பிரான்சுக்கு பிரான்ச்-காம்ட்டே என்ற மாநிலம் ஸ்பெயினால் கொடுக்கப்பட்டது.

(3) சில இணைப்புக்கள் (Reunions): போருக்குப் பின்னர் அமைதிக் காலத்தில் 1681-ல் லூயி புனித ரோமானியப் பேரரசிலுள்ள சுதந்திர நகரமாகிய ஸ்டிராஸ் பர்க்கின் மீது உரிமை கோரி, அதனைக் கைப்பற்றினார். அதே போல அவர் லக்சம்பர்க் என்ற நகரத்தையும் வட இத்தாலியிலுள்ள காசேல் நகரத்தையும்

கைப்பற்றிஞர் இச்செயல்களினால் அவருக்கு ஆஸ்திரியா, ஜெர்மனி, ஹாலந்து ஆகியவை பகைவராக ஆயின.

(4) பாலட்டினேட் போர் அல்லது ஆங்கில அரசுரிமைப்போர் (1688-1697) : 1688-இல் லூயி ஜெர்மனியிலுள்ள கொலோன் நகரத்தைக் கைப்பற்ற முயன்ருர்; இந்நகரம் ரைன் ஆற்றைத்தாண்டி ஹாலந்துக்குச் செல்லும் சாலையிலுள்ளதாகையால், இந்நகரத்தைப் பிரான்சு தன் வசம் வைத்திருத்தல் வேண்டுமென எண்ணினர், மேலும் இங்கிலாந்தின் அரசுரிமையானது பிராட்டஸ்டண்டு சமயத்தவரும், டச்சுக்காரரும், இரண்டாம் ஜேம்ஸின் மருமகனுமான வில்லியம் ஆரஞ்சு என்பவருக்கு 1688 ஆம் ஆண்டில் இங்கிலாந்தில் நடைபெற்ற புரட்சியின் விளைவாக மாறிவிட்டது. எனவே இங்கிலாந்தும் ஹாலந்தோடு சேர்ந்து பிரான்சை எதிர்த்தது. லூயி வில்லியத்தை இங்கிலாந்தின் அரசராக ஒப்புக் கொள்ளாமல், இரண்டாம் ஜேம்சுக்கு ஆதரவளித்தார். இக்காரணங்களினால் போர் தொடங்கிற்று. இங்கிலாந்து, ஹாலந்து, பேரரசர், ஸ்பெயின், பிரான்டன்பர்க், டென்மார்க், ஸ்வீடன் முதலிய எல்லாம் ஒரு பெருங்கூட்டாக (Grand Alliance) பிரான்சுக்கு எதிராக அமைக்கப்பட்டன. பிரான்சின் படைவலி மிக்கோங்கியிருந்தது. பல முற்றுகைகளைப் பிரஞ்சியர் வெற்றியாக நடத்தினர். 1690 ல் பீச்சிஹெட் கடற்சண்டையில் பிரஞ்சுக் கப்பற்படையும், 1692-ல் லாஹோக் கடற்சண்டையில் ஆங்கிலக்கப்பற்படையும் வெற்றி பெற்றன. இரண்டாம் ஜேம்ஸ் அயர்லாந்துக்குச் சென்று தனது உரிமையை நிலைநாட்ட முயன்ருர். ஆனால் அவர் பாயின் சண்டையில் 1690-ல் வில்லியத்தால் தோற்கடிக்கப்படவே, அவருடைய முயற்சி வெற்றி பெறவில்லை. ரிஸ்விக் (Ryswick) அமைதி

உடன்படிக்கையின்படி லூயி, ஸ்டிராஸ்பர்க், அல்ஸேஸ் ஆகியவைகளைத் தவிர தான் கைப்பற்றிய மற்ற இடங்களைத் திருப்பிக் கொடுத்தார். அவர் மூன்றாம் வில்லியத்தை இங்கிலாந்தின் அரசரென ஒப்புக் கொண்டு தான் இனி இரண்டாம் ஜேம்ஸ் என்ற ஸ்டுவர்ட் குடும்பத்தவரை ஆங்கில அரசுரிமைக்கு ஏற்றவரென ஆதரிப்பதில்லை எனவும் வாக்குறுதி கொடுத்தார்.

(5) ஸ்பெயின் அரசுரிமைப் போர் (1704-1711): லூயி செய்த போர்களுள் இதுவே மிகப்பெரியது. இதன் காரணங்களாவன: ஸ்பெயின் அரசராகிய இரண்டாம் சார்லசுக்குப் பின் தோன்றல்கள் இல்லாமையால், அவர் ஆண்டுவந்த ஸ்பெயின், வட இத்தாலி, பெல்ஜியம் என்றழைக்கப்பட்ட ஸ்பானிய நெதர்லாந்து, அமெரிக்காவிலுள்ள ஸ்பானிய குடியேற்ற நாடுகள் ஆகியவற்றுக்கெல்லாம் அவருக்குப் பின் ஆட்சி உரிமையை ஏற்கக் கூடியவர் எவர் என்ற கேள்வி எழுந்தது. ஸ்பெயினுக்கு அரசராக வரக்கூடிய உரிமையை உறவின் மூலம் கோரியவர் சார்ல்ஸின் மைத்துனரான (தமக்கையின் கணவர்) பிரஞ்சு அரசர் பதினான்காம் லூயி, அல்லது அவருடைய இரு பேரன்களில் ஒருவர், பவேரியாவின் அரசராகிய இம்மானுவல் அல்லது அவருடைய பட்டத்து இளவரசன், ஆஸ்திரியாவின் பேரரசராகிய லியோபால்ட் அல்லது அவருடைய மகன் சார்லஸ் ஆகியோர் ஆவர். இவருள் எவரும் ஸ்பெயினுக்கும் அதற்குரிய நாடுகளுக்கும் மட்டுமே அரசராக வந்தால்தான், ஸ்பெயின் பிரான்சோடு இணைக்கப்படாமலிருக்கும். எந்த ஒரு நாடும் மற்றவற்றைவிட வலிமிக்கதாக ஆதல் கூடாது, என்ற சக்தி சமநிலைக் கொள்கையை (Balance of Power) நிலைநாட்ட

இங்கிலாந்து முயன்றது. எனவே இக்கேள்வி அரசியல் முக்கியத்துவம் வாய்ந்த ஒன்றாகஆயிற்றுஆங்கில அரசர் மூன்றும் வில்லியமும் பிரஞ்சு அரசர் லூயியும் ஸ்பானிய அரசரைக கலந்து கொள்ளாமலே. ஒரு முதல பங்கீட்டு ஒப்பநதம் செயது (1698), அதனபடி ஸ்பெயினும் அதனுடைய சில பகுதிகளும் பவேரிய இளவரசருக்குக் கொடுக்கப்படவும், மற்றப பகுதிகளைப பிரான்சும, ஆஸதிரியாவும் பகிர்நது கொள்ளவும் முடிவு செய்தனர். ஆனல உடனே தற்செயலாக பவேரிய இளவரசா இறந்து போகவே, மீணடும் இக கேள்வியை இரு அரசர்களும் இரணடாம் பங்கீட்டு ஒப்பந்தத்தின் (1700) மூலம் தீர்க்க முயன்றனா; அதன்படி ஸ்பெயினும் அதனுடைய அமெரிக்க குடியேறற நாடுகளும ஆஸ்திரிய இளவரசர் சார்லஸுக்கும், ஸ்பெயினுக்குச் சொந்தமான வட இத்தாலி பிரானசுக்கும் கொடுக்கப் படவேண்டும் என ஏற்பாடாயிறறு. தனனைக் கலந்து கொள்ளாமல் இவ்வாறு செய்யப்பட்ட ஏற்பாட்டை, ஸ்பெயின் அரசர் இரண்டாம் சார்லஸ் ஏறக மறுத்து, தனது நாடு அனைத்தையும் லூயியின் இளைய பேரனை பிலிப்புக்குப் பத்திரத்தின் மூலம் எழுதி வைத்து விடடு இறந்தார். இவவாறு தனது இளைய பேரனுக்கு ஸ்பெயின் முழுவதும் கொடுக்கப் படுவதைக கண்ட லூயி, பேராசை கொண்டு, இரண்டாம் ஒப்பந்தத்தை மீறித் தனது இளையபேரன் பிலிப், ஸபெயினுக்கு மட்டுமின்றி பிரான்சுக்கும் அரசுரிமை உடையவன் எனக் கூறினர். இனி இரு நாடுகளும் ஒரே அரசரால் ஆளப்படும் என்னும் பொருள்பட, இரண்டையும் பிரிக்கும் மலையாகிய, ‘பிரனிஸ் இனி கிடையாது’ என்றார். சக்தி சமநிலையை மாற்றக்கூடிய இவ்விரு நாட்டு இணைப்பையும் தடுப்பதற்காக, மூன்றும் வில்லியம் அரசர் இங்கிலாந்து, ஹாலந்து, ஆஸ்திரியா,

பிரஷ்யா முதலிய நாடுகளை பிரான்சிற் கெதிராகக் கூட்டுச் சேர்த்தார். இதுவே போரின் முதற் காரணம். லூயி ஸ்பானிய நெதர்லந்தைக் கைப்பற்றப் பிரஞ்சுப் படைகளை அனுப்பினார். ஹாலந்து போரில் இறங்கிற்று. தான் முன்னர் கொடுத்த வாக்குறுதியை மீறி, லூயி, இரண்டாம் ஜேம்ஸின் மகனை ஜேம்ஸை இங்கிலாந்தின் அரசுக்கு உரியவரெனக் கூறினார். இவையே மேலும் சில காரணங்கள். போரில் ஆங்கில தளபதியும், அரசியல் வல்லுநருமான ஜான் சர்ச்சில் என்ற மார்ல்பரோ பிரபு பிரெஞ்சுப் படைகளை பிளென்ஹிம், ராமிலீஸ், ஊடனார்ட், மால்ப்ளாகட் என்ற களங்களில் வென்றார். ஸ்பெயினில் ஜிப்ரால்டரை பிரிட்டிஷ் கடற் படை கைப்பற்றியது. 1713-ல் உட்ரெக்ட் அமைதி உடன்படிக்கையின்படி பிரான்சும் ஸ்பெயினும் இருதனி அரசர்களின் ஆட்சியில் இருக்கவும், இணைக்கப்படாமல் இருக்கவும், ஆஸ்திரியாவுக்கு ஸ்பானிய நெதர்லந்தும், மிலானும், நேபிள்ஸும், சார்டினியாவும், இங்கிலாந்துக்கு ஜிப்ரால்டரும், மைனார்க்காவும், கொடுக்கப்படவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. ஸ்டூவர்ட் அரசருக்குப்பிரஞ்சு அரசர் ஆதரவளிக்கக் கூடாதென ஒப்புக்கொள்ளப்பட்டது. பிரிட்டன் பிரான்சிடமிருந்து அமெரிக்காவில் நியூபவுண்டுலண்டு, நோவாஸ்கோஷியா, ஹட்சன் வளைகுடா நிலம் முதலியவற்றை அடைந்தது. லூயி 1715-ல் பல இன்னல்களுக்கிடையில் இறந்தார்.

6. லூயி, பிரஷ்ய மன்னர் இரண்டாம் பிரடரிக்கையும், ரஷ்ய மன்னர் பீட்டரையும் போல், அறிவுமிக்க எதேச்சாதிகார அரசராவார். அவர் தனது வாழ்நாளில் பிரான்சை ஐரோப்பாவிலேயே வலிமிக்க ஒரு நாடாக ஆக்கினாரென்பதில் ஐயமில்லை. தனது திறமைமிக்க அமைச்சரான கோல்பர்ட்டின் துணைகொண்டு அவர்

தன்து அரசாங்கத்தின் நிதி நிலைமையைச் சீராக்கி, பிரான்சில் பல புதிய தொழில்களைத் தொடங்கினர். அவர் அளித்த ஆதரவைப் பெற்ற புகழ்மிக்க பிரஞ்சுப் புலவர்கள் அக்கால இலக்கியங்களுள் மிகச் சிறந்த வற்றைப் பிரான்சில் படைத்தனர். மற்ற ஐரோப்பிய நாடுகளெல்லாம் லூயியின் பிரான்சையே தமக்கு முன் மாதிரியாகக் கருதின. அவர் தனது கையில் எல்லா அதிகாரங்களையும் குவித்து வைத்திருந்தாலும், ஆட்சி திறம்மிக்கதாக இருந்தது. எனவே அவரது ஆட்சி முறையே ஐரோப்பாவிலேயே மிகச்சிறந்ததாகக் கருதப் பட்டது. பிரபுக்களுக்கும் மற்ற குடிகளுக்கும் வேறுபாடு ஏதும் காட்டாமல் லூயி சட்டத்தை ஒரே வகையாகக் கையாண்டு நீதி செலுத்தினர். எனவே பெரும்பாலான மக்கள் அவரது ஆட்சியை மகிழ்வுடன் ஏற்றனர். அவருடையஆட்சியில் மக்களுக்குப் பாதுகாப்புக்கிடைத்தது. அயல்நாட்டு உறவுகளிலும் லூயிக்கு 1684—ஆம் ஆண்டு வரை கணிசமான வெற்றியும், பிரஞ்சுப் படைகளுக்கு வெற்றிகளும் புகழும் கிடைத்து வந்தன.

இவ்வளவெல்லாம் இருந்த போதிலும் அவருடைய எதேச்சாதிகாரத்தால் பிரான்சில் எதிர்காலத்தில் ஏற் பட்ட தீயவிளைவுகளை நாம் காணும் பொழுது அவரது எதேச்சாதிகாரமானது கடுமையாகக் கண்டிக்கப்படக் கூடியதாகவே இருக்கிறது. அவருடைய எதேச்சாதிகார ஆட்சி, அவருடைய புகழை மிக்கோங்கச் செய்வதற் காகவே ஏற்படுத்தப்பட்டதே தவிர, அவருடைய குடிகளுடைய நலனை வளர்ப்பதற்காக ஏற்படுத்தப் படவில்லை, என்பது தெளிவு. மக்களுடைய நலனைப் புறக்கணித்து அவர் தனது புகழுக்காகவே பெருங் கட்டிடங்களைக் கட்டியும் நீண்ட போர்களைச் செய்தும் பொதுப் பணத்தை வீணாக்கினர். அவருடைய எதேச்

சாதிகாரத்தினுல் குடிகளுக்குத் தன் முயற்சியும் பொறுப் புணர்வும் வளரவில்லை. அவருடைய நெருங்கிய நண்பர் களில் நல்ல அறிவுக் கூர்மையும் பொது நல நோக்கு முடைய பெனிலனும், வாபானும் அவருடைய எதேச் சாதிகாரப் போக்கின் விளைவுகளைச் சுட்டிக்காட்டத் தவறவில்லை. அவரது போர்களினுல் நாடு வறுமைக் குள்ளாயிற்றென்பதை வாபான் சுட்டிக்காட்டி, யாவருக்கும் ஒத்த வரி முறையைக் கடைப்பிடிக்குமாறும் பிராட்டஸ்டண்டுகளுக்குப் பழைய குடிமை உரிமைகளை வழங்குமாறும் அரசருக்கு எடுத்துச் சொன்னுர். அரசருடைய கொள்கை பிரான்சை வறியநிலைக்குக் கொண்டு வந்து விட்டதெனவும், நாட்டின் எல்லா வகுப்பினரின் அழிவின் மீதே அரசர் தனது அரியணையை நிறுவியிருக்கிருரெனவும் பெனிலன் கூறினுர். அரசாங்கத்தின் நிதி நிலைமை சீர்கேடடைந் தது; இதுவும், அவருடைய போர்களினுல் பிரான்சுக்கு ஏற்பட்ட பெருந்தோல்விகளும், நாடு இழப்புக்களும் பிரஞ்சு மக்களுக்குத்தாம் எதேச்சாதிகார முடியாட்சியின் மீது வைத்திருந்த மதிப்பை இழக்கச் செய்தன. மக்களிடையே தோன்றிய இத்தகைய நிறைவற்ற மனப்பான்மையும், புரட்சிக் கருத்துக்களும் 1789-ம் ஆண்டில் பிரஞ்சு எதேச்சாதிகார முடியாட்சியை ஒழிக்கக் கிளம்பிய பிரெஞ்சுப் புரட்சிக்கு வழிவகுத்தன.

— x —

## (ஆ) பிரஷ்ய மன்னர் இரண்டாம் பிரடரிக் (1740 86)

(1) முன்னுரை (2) பிரஷ்யாவின் பண்டைய வரலாறு (3) பிரடரிக்கின் பண்புகளும் அவருடைய எதேச் சாதிகார அமைப்பும் (4) உள்நாட்டுக் கொள்கை (5) அயல்நாட்டுக் கொள்கை (6) பிரடரிக்கின் எதேச்சாதி கார ஆட்சியின் விளைவுகள்.

1. பதினெட்டாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் பிரஷ்ய நாட்டை ஆண்ட இரண்டாம் பிரடரிக் அரசர் வரலாற்ருசிரியர்களால் எதேச்சாதிகார அரசருக்கெல்லாம் ஒரு சிறந்த எடுத்துக்காட்டாகப் புகழப்படுபவர். அவர் தனது குடிமக்களுடைய நலத்தில் மிகவும் கவனமும் கருத்தும் உடையவராய், வெளிநாட்டு உறவுகளைப் பொறுத்தவரையில் நீதிக்குக் கட்டுப்படாமல், ஆனல் வெற்றியாக ஒரு கொள்கையை நிறைவேற்றியமையால், அவர் பதினெட்டாம் நூற்றுண்டின் எதேச்சாதிகார அரசருக்குரிய எல்லா இயல்புகளும் உடையவரெனக் கருதப்படுகிருர். ஒரு சில தன்மைகளில் அவரை பிரஞ்சு மன்னர் பதினன்காம் லூயியோடும் ரஷ்ய மன்னர் பீட்டரோடும் ஒப்பிடலாம்.

2. இக்கால ஐரோப்பிய நாடாகிய ஜெர்மனிக்கு மூலாதாரமானது பிரஷ்ய நாடாகும்; இதனை இடைக்காலத்தில் டியூடானிய வீரர்கள் ஒரு ஜெர்மன் நாடாக ஆக்கினர் : 1618-ல் சிறிய ஜெர்மன் நாடாகிய பிராண்டன்பர்க்கை ஆண்டு வந்த ஹோஹன் சோலர்ன் அரச குடும்பத்தவர், பிரஷ்யாவை பிராண்டன்பர்க்கோடு இணைத்து ஆண்டனர். இவ்வரச குடும்பத்தவரெல்லாம் பரம்பரையாக எதேச்சாதிகார மன்னர்கள்தாம்; இக் குடும்பத்தில் வந்த இரண்டாம் பிரடரிக்கின் மூதாதையர்கள் பிரடரிக் வில்லியம் (1640-1688), முதலாம் பிரடரிக் அரசர் (1688-1713), அரசர் முதலாம் பிரடரிக் வில்லியம் (1713-1740) ஆகியோர் ஆவர். இவர்கள் காலத்தில் நாடு சிறிது சிறிதாக விரிவாக்கப்பட்டு, படையும் விரிவாக்கப்பட்டது. புனித ரோமானியப் பேரரசரைத் தேர்ந்தெடுத்த ஏழு இளவரசருள் ஒருவரான பிரடரிக் வில்லியம் மிகவும் செல்வாக்குடையவராக இருந்ததால், அவர் "புகழ்மிக்க தேர்வாளர்"

(Great Elector) எனப்பட்டார். முதலாம் பிரடரிக் தனக்குப் பிரஷ்யாவில் அரசர் என்னும் பட்டத்தை வைத்துக் கொள்ள 1701-ல் ஆஸ்திரியாவின் ஹாப்ஸ்பர்க் குடும்பத்தைச் சேர்ந்த பேரரசரின் உடன் பாட்டைப் பெற்ருர். எனவே பிரஷ்யா ஒரு அரசு என உருவாயிற்று. முதலாம் பிரடரிக் வில்லியம் அரசர் கூரிய அறிவும், எதேச்சாதிகார மனப்போக்கும் உடையவர்; அவர் தனது மக்களை எல்லாம் வேலைசெய்யும் படிக் கட்டாயப்படுத்தி, வலிமிக்க 85,000 பேரடங்கிய ஒரு பெரும்படையைத் திரட்டினுர். பிரஷ்யா சிறிய நாடாக இருந்தாலும் ஐரோப்பாவில் படை வலிமையில் நான்காவது நாடாக ஆயிற்று. கட்டாயக் கல்விப் பயிற்சியும் அளிக்கப்பட்டது. அண்டை நாடுகள் பிரஷ்யப் படை வளர்ச்சியைக்கண்டு அஞ்ச, பிரடரிக் வில்லியம் தனது படைவலியைக் கண்டு பெருமைப் பட்டுக்கொண்டார். அவர் பால்டிக் கடலுக்குத் தெற்கே ஸ்வீடனுக்குச் சொந்தமான இடங்களைக் கைப்பற்றிப் பிரஷ்யாவோடு சேர்த்தார்.

3. இரண்டாம் பிரடரிக் இளமைக் காலத்தில் தனது மூதாதையர் கடைப்பிடித்துவந்த அரசியல் மனப் பான்மையையும் இராணுவப் பண்புகளையும் வெறுத்து, இசை, தத்துவம், இலக்கியம் ஆகியவற்றில் நாட்டம் செலுத்திஞர். ஆஞல் அவர் தனது கடுமையான தகப்ப ஞராகிய அரசர் முதலாம் பிரடரிக் வில்லியத்தால் கடுமையான போர்ப்பயிற்சியில் புகுத்தப்பட்டுப் பின்னர் திறம்மிக்க படைவீரராகவும், நற்பண்புகளைப் புறக் கணித்துத் தீவினை அஞ்சாத செயல்திறம் உடையவராக வும் ஆயினர். அவர் 1740-ல் அரசரானபோது, அவருக்கு அவருடைய தகப்பனர் நல்ல பயிற்சிபெற்ற ஒரு பெரும் படையையும், பொருள் நிறைந்த கருவூலத்தையும்

விட்டுச் சென்றிருந்தார். புகழ்மிக்க தேர்வாளருடைய ஆட்சியிலேயே நாட்டின் சட்டங்களைச் செய்வதில் பங்கு கொண்டிருந்த பாராளுமன்றமாகிய டயட் (Diet) என்ற மன்றம் கலைக்கப்பட்டு எல்லா அதிகாரமும் அரசரிடமே குவிக்கப்பட்டுவிட்டது. ஹோஹன் சோலர்ன் குடும்பத்தவர் தங்களைக் கடவுளால் அமர்த்தப்பட்ட எதேச்சாதிகார அரசர்களெனக் கருதினர். எனவே இரண்டாம் பிரடரிக்கும் குடிகளுக்குப் பொறுப்பாக இல்லாமல், படைவலியைக்கொண்டு லூயியைப் போல எதேச்சாதிகார ஆட்சியை நடத்தினர். ஆனல் அவரது ஆட்சி அவருடைய குடிகளுக்கு நன்மையைச் செய்தது.

4. பிரடரிக் தனது குடிமக்களுடைய முன்னேற்றத்துக்காகவும், நல்வாழ்வுக்காகவும் அயராது அல்லும் பகலும் உழைத்தார். ‘குடிகள் அரசர்களுக்காக வாழ்பவரல்லர்; ஆனல் அரசர்களே குடிகளுக்காக வாழ்பவராவர்’ என்று அவர் கூறினர். அவர் தன்னைத் தனது குடிமக்களுடைய முதற் பணியாள் எனக் கூறிக்கொண்டார். (1) அரசாங்க அலுவல்களிலெல்லாம் அவர் திறமையும் நாட்டினிடம் பற்றுறுதியும் உடையவரையே அலுவலராக அமர்த்தினர். (2) வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்ட மக்களுக்கு நிதி உதவி அளிக்கும்பொருட்டு அவர் கூட்டுறவுக் கடன் சங்கங்களை நிறுவினர். (3) மற்றத் தொழில்களுக்கும் அவர் ஊக்கம் அளித்தார்; பொருள்களின் மீது விதிக்கப்பட்ட சுங்க வரிகளைக் குறைத்துத், தடையற்ற வாணிபம் வளரச் செய்தார். (4) பிரஷ்ய நாட்டின் குற்றச் சட்டத் தொகுப்பில் காணப்பட்ட சித்திரவதை முதலிய கொடுந் தண்டனைகளை நீக்கி, அவர் சட்டத் தொகுப்பைச் சீர்திருத்தினர். (5) பிரெஞ்சு அரசர் பதினன்காம் லூயியின் சமயக் கொள்கைக்கு நேர்மாருன முறையில், பிரடரிக் தனது

குடிமக்களெல்லோருக்கும் தத்தம் விருப்பத்திற் கேற்ற வாறு சமயக் கொள்கைகளைக் கடைப்பிடித்துவரச் சமய உரிமை வழங்கினர். குடிகளுடைய சமய உரிமைகளில் அவர் தலையிடவில்லை. பிரான்சிலிருந்து வெளியேறிய ஹ்யூகனட்டுகள் 'புகழ்மிக்க தேர்வான'ரால் பெர்லின் நகரத்தில் நிலங்களும் வீடுகளும் கொடுக்கப்பட்டிருந்த மையால், அவர்களுடைய தொழில் திறத்தால் தலைநகர மாகிய பெர்லின் பொருள்வளம் பெற்றிருந்தது. பிரடரிக் தனது குடிகளுடைய வளர்ச்சியில் கொண்டிருந்த நாட்டத்தைக் காட்டிலும், அவருடைய இன்னொரு அரிய பண்பு என்னவெனில், அவர் அரசாங்கத்தின் பொது நிதியிலிருந்து தனது சொந்தச் செலவுக்காகப் பொருள் ஏதும் எடுத்துக்கொள்ளாததுதான். இதற்கு நேர்மாறாக பதினான்காம் லூயி பிரெஞ்சு அரசாங்கத்தின் பொருளைத் தனது புகழுக்காகப் பல செயல்களைச் செய்வதில் செல விட்டார். பிரடரிக் வால்ட்டேர் போன்ற பெரும் அறிவாளிகளுடன் உரையாடுவதில் விருப்பமுடையவரா யிருந்தார்.

5. உள்நாட்டைப் பொறுத்த வரையில் தியாக மனப்பான்மையோடு உழைத்த பிரடரிக், வெளிநாட்டு உறவுகளைப் பொறுத்தவரையில் நீதி, நேர்மைக்கு அஞ்சாமல், தனது விருப்பத்தை மட்டுமே கருதிச் செயல் புரியும் ஒரு முரட்டுப் போர்வீரராகவே நடந்துகொண்டார். இவ்வகையில் அவர் இத்தாலிய ஆசிரியர் மக்கியவெல்லி கூறிய சில கருத்துக்களை ஒட்டியவராவார். வரலாற்றில் வெற்றியாக ஆண்ட பல சர்வாதிகாரிகளும் இவ்வாறே நடந்துள்ளனர். (1) ஆஸ்திரிய அரசுரிமைப் போர் (1742 — 48) ஆஸ்திரியப் பேரரசர் ஆறும் சார்லஸ் தனக்குப்பின் தனது நாட்டின் அரசுரிமையை ஏற்றுக்கொள்ளு

வதற்குத் தக்கவள் தனது ஒரே மகளான மரிய தெரிசா என ஒரு பத்திரம் எழுதி, அதனை ஏற்றுக் கையொப்பமிடும்படி அண்டை அரசர்களைக் கேட்டுக்கொண்டார். பிரடரிக்கும் அதில் கையொப்பமிட்டார். ஆனால் 1740-ல் சார்லஸ் இறந்ததும், பிரடரிக் தான் கொடுத்த வாக்குறுதியை மீறி, வளமிக்க ஆஸ்திரிய மாகாணமாகிய சைலீஷியாவைத் தான் பெறுதல் வேண்டுமென்ற தனது விருப்பம் ஒன்றையே கருதி, வலிமிக்க தனது பெரும்படையுடன் சென்று சைலீஷியாவைக் கைப்பற்றிக் கொண்டார். மரிய தெரிசா சைலீஷியாவை மீட்பதற்காக பிரிட்டனிடமிருந்து பொருளுதவி பெற்றாள். குடியேற்ற நாடுகளமைப்பதிலும், வாணிப வளர்ச்சியிலும் பிரிட்டனுக்கு எதிரியாக இருந்த பிரான்ஸ், பிரஷ்யாவுடன் சேரவே, போர் தொடங்கிற்று. போர் ஐரோப்பாவில் மட்டுமல்லாமல் வட அமெரிக்காவிலும், இந்தியாவிலும் நடைபெற்றது. பிரடரிக் தேர்ச்சி பெற்ற தளபதியாகையால், பலமுறை ஆஸ்திரியப் படைகள் தாக்கினாலும் சைலீஷியாவை விடாமல் வைத்திருந்தார். 1748-ம் ஆண்டின் எய்லா சேப்பல் உடன்படிக்கையின்படி சைலீஷியா பிரடரிக்கிடமே இருக்கும்படி விட்டுவிடப் பட்டது. (2) ஏழாண்டுப் போர் (1756 – 1763): இப் போரில் பிரடரிக்கும் கிரேட் பிரிட்டனும் கூட்டாளிகளாகவும், இவற்றுக்கெதிராக பிரான்சும் ஆஸ்திரியாவும் கூட்டாளிகளாகவும் மாறி அமைந்தனர்; ஏனெனில் எவ்வாறேனும் சைலீஷியாவை மீட்டுக்கொள்ள ஆஸ்திரியா முயன்றது. தன்னைப் பிரடரிக் அவதூறாகப் பேசியமையால், ரஷ்ய அரசி எலிசபெத் ஆஸ்திரியாவுடனும், பிரான்சுடனும் சேர்ந்தாள். பிரான்சுக்கும் கிரேட் பிரிட்டனுக்கும் இந்தியாவிலும் வட அமெரிக்காவிலும் குடியேற்ற நாடுகளை அமைப்பதிலும் வாணிபத்திலும் பகையும் போட்டியும் இருந்ததால் அவை போரி

லிறங்கின. இவையே இப்போரின் காரணங்கள். பிரடரிக் ஒழுங்காக கிரேட் பிரிட்டனிடமிருந்து நிதி உதவி பெற்று வீரத்தோடு ரஷ்ய, ஆஸ்திரிய, பிரஞ்சுப் படைகளுடன்போரிட்டார்.அவருடையபோர்த்தலைமைத் திறமும், பிரஷ்யப் படைகளின் திறமும், அவருக்கு ரஷ்யப்படையின் மீது சார்ன்டார்ப் என்ற இடத்திலும், ஆஸ்திரியர்மீது லியூதன் என்ற இடத்திலும், பிரஞ்சுப் படையின்மீது ராஸ்பேக் என்ற இடத்திலும் வெற்றிகளைத் தேடித்தந்தன. எனினும் சில தோல்விகளும் அவருக்கு ஏற்பட்டன. 1759–ல் ரஷ்யரும், ஆஸ்திரியரும் பெர்லினைக் கைப்பற்றினர்; 1763–ல் கிரேட் பிரிட்டன் போரினின்றும் விலகிற்று. ஆனால் ரஷ்யாவின் புதிய அரசர் மூன்றும் பீட்டர் பிரடரிக்கிடம் பெருமதிப்பு உடையவராகையால், பிரடரிக்குடன் ரஷ்யப் போர் நின்றது. போரின் இறுதியிலும் சைலீஷியா பிரடரிக் வசமே இருந்தது.

(3) போலந்தைப் பங்கிட்டுக் கொள்ளுதல். போலந்தின்மீது பிரடரிக் கையாண்ட கொள்கையிலும் தன்னலமே காணப்பட்டது. ஆஸ்திரியா, ரஷ்யா, பிரஷ்யா ஆகிய மூன்று வலிமிக்க நாடுகளுக்கிடையே இருந்த போலந்து வளமுடைய நாடாக இருந்தாலும், அதன் மக்களிடையே உள்ள பூசலாலும், வலியற்ற ஒரு அரசாங்கத்தாலும், ஒற்றுமையின்றி, வலியின்றி இருந்தது. இதனை நன்குணர்ந்த பிரடரிக், பிரஷ்யாவின் கிழக்கெல்லைக்குத் தொடர்ச்சியாக நாடு சேர்க்கும் எண்ணத்துடன், ஆஸ்திரிய அரசி மரியதெரிசாவுக்கும், ரஷ்ய அரசி இரண்டாம் காதரினுக்கும், போலந்தின் சில பகுதிகளை மூன்று நாடுகளும் கைப்பற்றிப் பகிர்ந்து கொள்ளலாமென்று கருத்துத் தெரிவித்தார். மூவரும் 1772–ல் அவ்வாறே செய்தனர். ரஷ்யாவுக்குப் பெரும்

பங்கும், பிரஷ்யாவுக்கு சிறிது நிலமும், போலந்தின் தென்மேற்குப் பகுதி ஆஸ்திரியாவுக்கும் கிடைத்தன. தங்கள் விருப்பம் ஒன்றைத் தவிர, நீதியை மதிக்காமல் இவ்வாறு மூவரும் போலந்தைப் பங்கிட்டது, ஓர் கொள்ளையடிக்கும் செயலெனவே வரலாற்றாசிரியரால் கருதப்படுகிறது. (1791–ல் பிரஷ்யாவும் ரஷ்யாவும் மீண்டும் ஒருமுறையும், 1795–ல் மூன்று நாடுகளும் கடைசியாகவும் போலந்தின் எஞ்சிய பகுதிகளைத் தம்முள் பங்கிட்டுக்கொண்டன; இவ்வாறு மறைந்த போலந்து, 1919 வெர்சேய்ல்ஸ் அமைதி உடன்படிக்கையினால் மீண்டும் தோற்றுவிக்கப்பட்டது.)

6. பிரஞ்சு அரசர் பதினான்காம் லூயியைப் போலல்லாமல் பிரடரிக் தனது குடிகளைப்பொறுத்தவரையில் கடமை உணர்வுமிக்க ஒரு எதேச்சாதிகார அரசர் ஆவர். அவருக்கும் லூயிக்கும் உள்ள ஒற்றுமை அவர்களிருவரும் எதேச்சாதிகார அரசர்கள் என்ற அளவில் தான் காணப்படுகிறது. குடிகளுக்கு முன்னேற்றம் பெருகத்தக்க வகையில், எதேச்சாதிகார ஆட்சியை நடத்தியதில் பிரஷ்ய அரசர் பிரடரிக்குக்கும் ரஷ்ய அரசர் பீட்டருக்கும் தான் ஒற்றுமை காணப்படுகிறது. 'நானே அரசு' என்று இறுமாந்திருந்த லூயியின் ஆட்சியினால் மக்களுக்கு ஏற்பட்ட வறுமையே பிரஞ்சு முடியாட்சியை ஒழிக்க முற்பட்டது; ஆனால் தன்னைக் குடிகளின் பணியாள் என்று கூறிய பிரடரிக்கின் நன்மை பயக்கும் எதேச்சாதிகார ஆட்சியினால், குடிகளுக்கு நல்வாழ்வு பெருகி, நாடு வலுவடைந்தது; அவருடைய அரசாங்க அமைப்பு எதேச்சாதிகார இயல்புடையதாயினும், அதனுடைய திறமையையும், பிரஷ்யப் படையின் அமைப்பையும், திறத்தையும் ஐரோப்பா முழுவதும் பாராட்டிற்று. வெளிநாட்டு உறவுகளைப்

பொறுத்த வரையில் பிரடரிக் தீவினை அஞ்சாத தன்னலம் மிக்க அரசராகவே இருந்தார். சுருங்கச் சொல்லின், பத்தொன்பதாம் நூற்றுண்டில் ஜெர்மனி முழுவதையும் தனது தலைமையில் ஒரே அரசாங்கத்தின் மூலமாக இணைக்கக் கூடிய அளவுக்குப் பிரஷ்ய நாட்டிற்குப் படை வலிமையையும், செழிப்பையும் பிரடரிக்கின் எதேச்சாதிகார ஆட்சி தோற்றுவித்தது, என்று நாம் கூறலாம்.

— o —

(இ) ரஷ்யாவை ஆண்ட பீட்டர் (1682–1725)

(1) பதினேழாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் ரஷ்ய நாட்டின் நிலை. (2) பீட்டரின் பண்புகளும் நோக்கங்களும். (3) பீட்டரின் அரசாங்கமும், உள்நாட்டுக் கொள்கையும். (4) வெளிநாட்டுக் கொள்கை. (5) பீட்டரின் எதேச்சாதிகாரத்தைப் பற்றிய கருத்து.

1. ஐரோப்பிய வரலாற்றில் ஒரு பெரிய நாடாக ரஷ்யா தோன்றுவது புகழ்மிக்க பீட்டர் அரசருடைய ஆட்சிக் காலத்தில் தான். அவர் ரஷ்யாவை 1682–ம் ஆண்டிலிருந்து 1725–ம் ஆண்டுவரை ஆட்சி செய்தார். ரஷ்ய அரசர் சார் (Czar) என அழைக்கப்பட்டனர். சார் அரசர் பீட்டரும், பிரஞ்சு அரசர் பதினான்காம் லூயியைப் போலவும், பிரஷ்ய அரசர் இரண்டாம் பிரடரிக்கைப் போலவும் அறிவு மிக்க ஒரு எதேச்சாதிகார அரசர் ஆவர்.

பீட்டருடைய அரசாங்க முறை, அவர் ஆற்றிய செயல்கள் முதலியவற்றைப் பற்றிச் சரிவர உணர்ந்து கொள்ளுதற்கு, அவர் ஆட்சிக்கு வந்த காலத்தில் ரஷ்ய அரசாங்கமும், சமுதாயமும் இருந்த நிலையைப் பற்றிய

கருத்து நமக்குப் பெரிதும் துணை செய்யும். சமுதாயப் பழக்கவழக்கங்கள், பொருளாதார வளர்ச்சி, அரசியல் வளர்ச்சி ஆகியவற்றைப் பொறுத்த வரையில் ரஷ்ய நாடானது பதினேழாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஐரோப்பிய நாடுகளுள் மிகவும் பிற்போக்கான நாடாக இருந்தது. மக்கட் சமுதாயமானது, பிரபுக்கள் அல்லது போயார் (boyars), சாதாரண மக்கள் என இரு வகுப்பினர் உடையதாக இருந்தது; இம்மக்கள் மேற்கத்திய ஐரோப்பியரின் பழக்க வழக்கங்களைப் பின் பற்றாமல், ஆசியமக்களுடையபழக்கவழக்கங்களையே பின்பற்றினர்; ஆண்களெல்லாம் நீண்ட தாடி வளர்த்தனர்; ரஷ்யப் பெண்கள் மேற்கத்திய விஞ்ஞானக் கல்விப் பயிற்சி ஏதும் இல்லாதவராய்ச் சமுதாயத்திலிருந்து ஒதுங்கி வாழ்ந்தனர். ரஷ்ய மக்களுக்கும், நாகரிக வளர்ச்சியில் முன்னணியில் இருந்த மேற்கு ஐரோப்பிய மக்களுக்கும் தொடர்பு ஏற்படுவதற்கு ஏற்றவழி ஏதும் இல்லை; எவ்வாறெனில் வடக்கிலும் மேற்கிலும்உள்ள நாடுகளாகிய ஸ்வீடனும், போலந்தும் பால்டிக் கடலை ஒட்டிய நிலங்களை எல்லாம் தம்வசம் வைத்திருந்தன. எனவே ரஷ்யாவுக்கு மேற்கு ஐரோப்பியருடன் நேரடித் தொடர்பு ஏற்பட வழி இல்லை. இதே போலவே தெற்கிலும் துருக்கி நாடானது கருங்கடலை ஒட்டிய நிலங்களைக் கட்டுப்படுத்தி, ரஷ்யாவுக்கும், தெற்கு ஐரோப்பிய நாடுகளுக்கும் தொடர்பு ஏற்படுவதைத் தடுத்தது. தொழிற்சாலைகள் ரஷ்யாவில் இல்லை. ரஷ்யாவுக்கும் வெளிநாடுகளுக்கும் இடையே உள்ள வாணிபமெல்லாம் பெரும்பாலும் ஜெர்மனிய வணிகராலேயே நடத்தப் பெற்றது. ரஷ்யாவுக்குக் கடற்படையும் கிடையாது. ரஷ்யாவுக்கு உள்ள ஒரே துறைமுகமாகிய ஆர்க்கேஞ்சல் என்பதும் ஆர்க்டிக் கடற்கரையிலிருந்ததால், அது ஆண்டில் பெரும்பகுதிக் காலத்தில் உறை

பனியால் மூடப்பட்டுப் பயன்படுத்தக் கூடாத நிலையி லிருந்தது. ரஷ்ய வரலாற்றின் தொடக்கத்திலிருந்தே அதனை ஆண்ட சார் அரசர்கள் எதேச்சாதி காரத்திற்கு எடுத்துக்காட்டாக இருந்தவர் கள். பிரபுக்கள் அரசர்களுக்கு ஆதரவளித்ததோடு அவர்களுடைய அதிகாரத்தை வரம்பு படுத்தியும் வந்த னர். மேலும், அவர்கள் பல சலுகைகளைப் பெற்றுச் சாதாரண மக்களை ஒடுக்கி வந்தனர். சார் அரசருக்கு மெய்க்காவலராக இருந்த வீரர்களுக்கு ஸ்ட்ரெல்ட்சி (Streltsi) என்று பெயர். அரசருடைய அதிகாரத்தை மட்டுப்படுத்திய இன்னொரு தடை என்னவெனில் அது ரஷ்ய வைதிகக் கிறிஸ்தவத் திருச்சபை ஆகும். இத் திருச்சபைக்கு ரஷ்ய மக்களிடம் பெரும் செல்வாக்கு இருந்தமையால், இதனுடைய விருப்பத்துக்கு மாறாக சார் அரசர் தனது அதிகாரத்தைக் கையாண்டு நாட்டில் எதுவும் செய்ய இயலாது என்ற நிலைமை இருந்தது.

2. பீட்டருடைய முதற்பருவ வாழ்க்கை, கொலை, சூழ்ச்சி, அரசியற் குழப்பம் முதலியவை நிறைந்த சூழ் நிலையில் கழிந்தது. அவர் சிறு பிள்ளையாக இருந்த போது, அவருடைய சிற்றப்பன் கொலை செய்யப்பட்டார். நாட்டின் முதலமைச்சர் சித்திரவதைக்கு உள்ளானர். பீட்டரும் தனது காலத்தவரிடம் காணப்பட்ட கொடுஞ் செயல்முறைகள் சிலவற்றைப் பெற்றிருந்தார்; எனினும் நன்றாக உழைப்பதற்குரிய திறமும் அவரிடம் இருந்தது. அவருடைய குணத்தைப்பற்றி வரலாற்றுப் பேராசிரி யர் ஏ. ஜே. கிராண்ட் கூறும் கருத்து ஈண்டுக்குறிப்பிடத் தக்கது: "பீட்டருடைய குணத்தைப்போலப் புதுமை யான குணம் எதனையும் வரலாறு நமக்குக் காட்ட வில்லை. விலங்குகளின் கொடுமையையும் மிஞ்சக்கூடிய கொடுமை நிறைந்தவராக அவர் இருந்தார். தனது

சொந்த மகனைக் கொடுமையாகக் கொல்லுதற்கு அவர் இசைந்தபோதும், தனக்கெதிராகக் கலகம் செய்த மெய்க்காவலர்களை அவர் நூற்றுக்கணக்கில் கொன்ற போதும், அவர் (முன்னாள் ரஷ்ய அரசரான) கொடிய ஐவன் (Ivan the Terrible) என்பவருக்கு நேர்வழி வந்தவராக இருக்கிறார். ஆயினும் இக்கொடிய சருவாதி காரி, அறிவியல், தொழிற்கலை முதலியவற்றில் மிக ஆழ்ந்த ஈடுபாட்டோடு இருந்தார்; இவை எல்லா வற்றையும்விட இவர் ஐரோப்பிய நாகரிகத்தை நாகரிக மில்லாத தனது நாட்டில் புகுத்துவதற்குப் பேராவல் கொண்டிருந்தார்." அவருடைய நோக்கங்களை மூன்று கப் பிரித்துக் கூறலாம்; (1) ஐரோப்பியப் பழக்கவழக்கங் களை ரஷ்யாவில் புகுத்துதல்; (2) தனது அதிகாரத்தை வரம்புகள் இல்லாத அளவுக்கு வளர்த்துக்கொள்ளுதல்; (3) பால்டிக் கடற்கரை நிலத்தைப் பெறுதலும், கருங் கடலை ஒட்டிய நிலத்தில் தனது அதிகாரத்தை நிறுவுதலும்.

3. முதலில் பீட்டர் தனது எதேச்சாதிகாரத்தை ரஷ்ய அரசின் மீதும், அரசாங்கத்தின் மீதும் நிறுவினார். (1) தனது அதிகாரத்துக்கு இருந்த தடைகளை எல்லாம் அவர் வன்முறையால் நீக்கினார். தனது அதிகாரத்தை ஏற்றுக்கொள்ளும்படி அவர் பிரபுக்களை வற்புறுத்தினார். இதுவரை பிரபுக்களெல்லாம் பிறப்பின்படிப்படையில் தங்களுக்கு நாட்டின் படையில் பணி செய்யும் உரிமை யைப் பெற்றிருந்தனர். இம்முறையைப் பீட்டர் அடி யோடு நீக்கினார். இம்முறையில் அமைந்த படையைக் கலைத்துவிட்டுப் பீட்டர், சமுதாயத்தின் சாதாரண மக்க ளடங்கிய ஒரு படையைத் திரட்டினார்; படையிலுள்ள அலுவல்களை எல்லாம் தரமாகப் (ranks) பிரித்து அமைத்து, அலுவல்உயர்வு அத் தரங்களின் வாயிலாக

இருக்கும்படி செய்தார். சமயக் குருமார்களைத் தவிர, மற்ற எல்லாக் குடும்பத்தவருக்கும் கட்டாயப் படைப் பயிற்சி அளிக்கப்பட்டது. எனவே அவருக்குத்திறம்மிக்க 275,000 வீரரடங்கிய பெரும்படை ஒன்று இருந்தது. தனது சீர்திருத்தங்களை எதிர்த்துத் தனக்கெதிராகக் கலகம் செய்த தனது மெய்க்காவலர் படையை அவர் இரக்கமின்றிக் கடுமையாக ஒடுக்கி அடக்கினார். (2) இவ்வாறு பிரபுக்களையும், படையையும் தனது கட்டுப்பாட்டில் கொண்டுவந்த பீட்டர், ரஷ்ய வைதிகக் கிறிஸ்தவத் திருச்சபையையும் தனது கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டார். அதன் தலைவருக்குக் கீழ்ப்பட்டிருந்த மக்கள் பீட்டருடைய சீர்திருத்தங்களை எதிர்த்தனர். எனவே 1721–ல் பீட்டர் திருச்சபையின் தலைமைப் பதவியை ஒழித்துவிட்டுத், திருச்சபையின் அலுவல்களைக் கவனிப்பதற்காக உயர்தரக் குருமார்கள் அடங்கிய ஒரு சபையை (Synod) நிறுவினார். (3) லூயியையும் பிரடரிக்கையும் போலப் பீட்டரும் எல்லா அரசியல் அதிகாரத்தையும் தன்னிடம் குவித்து வைத்துக் கொண்டார். தனக்கு உதவியாக இருந்த பிரபுக்கள் அடங்கிய ஆலோசனை மன்றத்தை அவர் கலைத்து விட்டுத் தனது நண்பர்களை அவர் ஆலோசகராக அமர்த்தினார். தனது ஆணைகளை நிறைவேற்றி வைக்கவும், நீதிமன்றமாகச் செயல்படுவதற்கும் தக்க ஒரு செனட் மன்றத்தை (Senate) அவர் தோற்றுவித்தார். தனது அலுவலருடைய செயல்களைக் கண்காணிப்பதற்கு ஒரு இரகசிய போலீஸ் படையையும் அவர் அமைத்தார். எனவே உயர்தர, நடு, கீழ்த்தர அலுவலரெல்லாம் அவருக்கடங்கிப் பணி ஆற்றினர்.

4. அவர் ரஷ்யாவை ஐரோப்பிய மயமாக்கினார். ஐரோப்பிய உடைமுறைகளையும், பழக்கங்களையும், நடனமுறையையும் கைக்கொள்ளும்படி அவர் தனது அவைக்

களைப்பிரபுக்களை வற்புறுத்தினர். தனது ஆணையைமீறித் தாடிவளர்ப்பவர்களுக்கு வரி விதிப்பதாக வெருட்டி, அவர் அதை நீக்கச் செய்தார். பெண்களும் சமுதாயப் பணிகளில் பங்குபெறுமாறு கட்டாயப்படுத்தப் பட்டனர். அவருடைய ஆணையின் பேரில் ரஷ்யர், செப்டம்பர் மாதத்திலிருந்து தொடங்கும் தமது பழைய ஆண்டு முறைக் கணக்கைக் கைவிட்டு, ஜனவரியிலிருந்து தொடங்கும் மற்றைய ஐரோப்பிய ஆண்டு முறைக் கணக்கை ஏற்றனர். 'மாஸ்கோ செய்தி' என்ற முதல் செய்தித்தாள் தொடங்கப்பட்டது பள்ளிக் கூடங்களும், மருத்துவ மனைகளும், ஒரு மருத்துவக் கல்லூரியும் கட்டப்பட்டன. அரசாங்கத் தொழிற்சாலைகள் தொடங்கப்பட்டு, அவற்றில் பிரபுக்கள் முதலீடு செய்யும்படி கேட்டுக் கொள்ளப்பட்டனர். அறிவியல்களை வளர்ப்பதற்கென ஒரு கழகமும் தொடங்கப்பட்டது. வேளாண்மையில் புதுமுறைகள் புகுத்தப்பட்டன. கால்வாய்கள், சாலைகள், பாலங்கள் ஆகியவை அமைக்கப்பட்டன. இவற்றால் நகரங்களில் வாணிபம் பெருகிற்று.

4. பீட்டரின் அயல்நாட்டுக் கொள்கையானது, ரஷ்யாவுக்கும் மேற்கத்திய நாடுகளுக்கும் ஒரு இணைப்பை ஏற்படுத்தக் கூடிய பால்டிக் கடற்கரையை ஒட்டிய நிலங்களைக் கைப்பற்றுவதையே நோக்கமாக உடையது. அவர் அதற்காக ஒரு கப்பற்படையைத் தோற்றுவித்தார். கப்பல் கட்டும் தொழிலே அதில் முன்னேற்ற மடைந்துள்ள நாடுகளிடம் கற்றறிவதற்காக, பீட்டரே பேரார்வம் கொண்டு 1697, 1698-ம் ஆண்டுகளில் மேற்கத்திய நாடுகளில் பயணம் செய்து, இங்கிலாந்திலும், ஹாலந்திலுமுள்ள கப்பல் கட்டும் துறைகளில் தச்சராக வேலை செய்தார். பால்ட்டிக் கரையை ஸ்வீடனிடமிருந்து வெல்லுதல் என்பது அந்நாட்டின் கப்பற்படையை வென்றால்தான் இயலும். எனவே

பீட்டர் நாற்பத்தெட்டு பெரியகப்பல்களையும் என்னூறு சிறிய கப்பல்களையும், 28000 மாலுமிகளையும் உடைய ஒரு கப்பற்படையை உருவாக்கினர். 1715-ம் ஆண்டில் பின்லாந்தின் வளை குடாவைச் சுற்றியுள்ள சில நிலங்களை பீட்டர் ஸ்வீடனிடமிருந்து அடைந்ததும், அதில் செயின்ட் பீட்டர்ஸ்பர்க் என்ற துறை முகத்தைக் கட்டினர். (1) பீட்டர் கருங்கடலில் துருக்கியின் வசமிருந்த ஆசாவ் (AZOV) என்ற கப்பல் தளத்தைக் கைப்பற்ற விரும்பினர். அவர் தனது கப்பற்படையின் உதவியினால் 1700-ல் ஆசாவைக் கைப்பற்றி அதில் தனது குடிகள் சிலரை இருக்குமாறு செய்தார். ஆனல் 1713-ம் ஆண்டில் அவர் துருக்கியரால் தோற்கடிக்கப் படவே, அவர் ஆசாவைக் கைவிட்டுவிட்டார். (2) 1700-1721-ம் ஆண்டுகளுக்கிடையில் அவர் டென்மார்க்,போலந்து முதலியவற்றேடுசேர்ந்துகொண்டுஸ்வீடனுக்கெதிராகப் போரிட்டார். ஸ்வீடிஷ் அரசராகிய பன்னிரண்டாம் சார்லஸ் திறமைமிக்க படைத்தலைவருமாவார்; அவர் டென்மார்க்கைத் தோற்கடித்து, அதைப் போலாந்திடமிருந்தும் ரஷ்யாவிடமிருந்தும் பிரித்து விட்டார். பீட்டர் ஒரு பெரும் படையுடன் பின்லாந்து வளைகுடாவிலுள்ள நார்வா என்ற இடத்தை முற்றுகையிட, அவரை சார்லஸ் தாக்கித் தோற்கடித்தார். ஆனல் அவர் தொடர்ந்து ரஷ்யப் படையுடன் போரிடாமல், போலந்துக்குத் திரும்பி, அதன் படையை வென்று வார்சாவைக் கைபபற்றினர். அவர் ரஷ்யத் தலைநகரமான மாஸ்கோவைக் கைப்பற்ற எண்ணினர், ஆனல் ரஷ்ய நாட்டின் கடுங்குளிர் அவருடைய முயற்சிகளைத் தடுத்தது. எனவே அவர் தெற்கே திரும்புகையில், இதற்குள் தனது நிலைமையை வலுவாக்கிக் கொண்ட பீட்டர், சார்லஸை புல்ட்டாவா சண்டையில் 1709-ல் வென்ருர். நிஸ்ட்டாட் உடன்படிக்கையின்படி (1721)

ஸ்வீடனுக்குச் சொந்தமான பால்ட்டிக் நாடுகளைப் பிரஷ்யாவும், ரஷ்யாவும் பங்கிட்டுக் கொண்டன. இதில் ரஷ்யாவுக்குக் கிடைத்தவை லிவோனியா, எஸ்டோனியா, இங்கர்மன்லண்ட், கரேலியா முதலியவை. இவ்வாறு மேற்கு ஐரோப்பாவோடு ஒரு தொடர்பை ஏற்படுத்தல் வேண்டுமென்ற பீட்டரின் நோக்கம் நிறைவேறிற்று.

5. லூயி, பிரடரிக் ஆகியோரைப் போலப் பீட்டரும் ஒரு எதேச்சாதிகார அரசர் ஆவார்; அவர் தனது நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்வதற்காகக் கொடிய இரக்கமற்ற முறைகளைக் கையாண்ட எதேச்சாதிகாரி ஆவார். அவருடைய பண்பில் ஒரு பகுதி அவரைக் கொடுமை நிறைந்த தலைவராகக்காட்ட மற்றப் பகுதி அவரைக்குடிகளின் காவலனுகக் காட்டுகிறது. அவர் ஆக்கிரமிப்புக் கொள்கையை உடைய ஒரு அரசியல் சூழ்வலி மரபைத் தோற்றுவித்தார். பிரடரிக்கின் எதேச்சாதிகாரம் பிரஷ்யாவில் முடி ஆட்சியை வலுவாக்கியதைப் போலவே, பீட்டரின் எதேச்சாதிகாரம் ரஷ்யாவில் முடியாட்சியை வலுப் படுத்திற்று.



## (2) அமெரிக்காவிலும் ஆப்பிரிக்காவிலும் தோன்றிய குடியேற்ற நாடுகள்

## (Colonies in America and Africa)

1. முன்னுரை; 2. புதிய நாடுகளும் புதிய கடல் வழிகளும் கண்டுபிடிக்கப்படுதல்; 3. ஐரோப்பிய நாடுகள் அமெரிக்கா, ஆப்பிரிக்கா, ஆசியக் கண்டங்களில் நிறுவிய குடியேற்ற நாடுகள்; 4. புதிய நாடுகளைக் கண்டுபிடித்ததின் விளைவுகள்.

1. பதினேழாம் நூற்றாண்டில் இங்கிலாந்து, பிரான்ஸ், ஹாலந்து, ஸ்பெயின், போர்ச்சுகல் முதலிய ஐரோப்பிய நாடுகள் அமெரிக்கா, ஆப்பிரிக்கா, ஆசியா முதலிய கண்டங்களில் பல குடியேற்ற நாடுகளை நிறுவின. பதினைந்தாம் நூற்றாண்டின் இறுதியில் ஐரோப்பியர் இந்தியா முதலிய கீழ்த்திசை நாடுகளோடு நேராக வாணிபம்செய்வதற்காகப் புதிய கடல் வழிகளைக் கண்டுபிடிக்க முயன்றனர். புதிய கடல் வழிகள் கண்டு பிடிக்கப்பட்டதைத் தொடர்ந்து, புதிய நாடுகளைக் கண்டு பிடிக்கவும், புதிய நாடுகளில் ஐரோப்பியர் குடியேற்ற நாடுகளை (Colonies) நிறுவவும் வாய்ப்புத் தோன்றிற்று.

இந்தியா முதலிய கீழ்த்திசை நாடுகளில் விளையும் மிளகும், வாசனைத் திரவியங்களும் (Spices) ஐரோப்பியருக்குத் தேவைப்பட்டன. இவற்றை அராபிய வணிகர்கள் கீழ்த்திசைகளிலிருந்து இந்தியா மூலமாகத் தரை வழியாக கான்ஸ்டாண்டிநோபிள் (Constantinople) நகரத்துக்கு எடுத்துச்சென்று அங்கு ஐரோப்பியருக்கு விற்றுவந்தனர். ஆனால் 1453–ல் துருக்கியர் அந் நகரத்தைக் கைப்பற்றிவிடவே, தரை வழியாக நடைபெற்ற வாணிபம் தடைப்பட்டது. எனவே ஐரோப்பியர்

முக்கியமாக போர்ச்சுக்கீசியரும், ஸ்பானியரும் நேராக இந்தியாவுடன் வாணிபம்செய்வதற்காகக் கடல்வழியைக் கண்டுபிடிக்க முயன்றனர். இம் முயற்சிகளுக்கு வெற்றி ஏற்படத்தக்க சில சூழ்நிலைகளும் தோன்றின. இக்கால அறிவியலை ஒட்டி, பூமியைப் பற்றிச் சரியான ஒரு கருத்தை கோப்பர் நிக்கஸ் (Copernicus) என்ற போலந்து வானநூல் புலவர் வெளியிட்டார். இத் தகைய கருத்துக்களால் பூமி, அண்டத்தின் (Universe) மையமாக இருக்கவில்லை என்றும், வான கோளங்க ளெல்லாம் ஈர்ப்புச் சக்தி விதியை (Law of Gravitation) ஒட்டியே இயங்குகின்றன என்றும் மக்கள் அறிந்து கொண்டனர். மேலும் புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட மாலுமி திசையறி கருவியும் (Mariner's Compass), கடலில் எத்திசையையும் மாலுமிகள் அறிந்து செல்வ தற்கு உதவிசெய்தது. சூரிய ஒளியின் உதவியால் இயங்கும் கோண அளவு மானி (Sextant) நேரத்தைக் கணக்கிட உதவிற்று.

2. கடல் வழிகளைக் கண்டுபிடிப்பதில் போர்ச்சுக் கலும், ஸ்பெயினும் முயற்சி செய்தன. கொலம்பஸ் என்ற இத்தாலியர் ஸ்பானிய அரசருடைய உதவியைப் பெற்று, இந்தியாவுக்கு நேரான கடல் வழியைக் கண்டு பிடிக்கும் நோக்கத்துடன், ஸ்பெயினிலிருந்து நேர் மேற்கே அட்லாண்டிக் கடலைக் கடந்து சென்றார். 1492-ம் ஆண்டில் அவர் இப்பொழுது கியூபா (Cuba) எனப்படும் பெரிய தீவில் இறங்கினார். தாம் இந்தியாவை அடைந்துவிட்டதாகவும், அங்குள்ள மக்களை இந்தியர் என்றும் அவர் கருதினார். பின்னர் அமெரிக்கோ வெஸ்புசி என்ற இத்தாலியர் கொலம்பஸ் கண்டுபிடித் தது இந்தியா அன்று என்றும், அது ஒரு புதிய நாடு என்றும் கூறினார். எனவே கொலம்பஸ் கண்டுபிடித்த புதிய நாடு அமெரிக்கா என்று அழைக்கப்பட்டது.

டயாஸ் (Dias) என்ற போர்ச்சுக்கீஸிய மாலுமி மேற்கு ஆப்பிரிக்கக் கரையை ஒட்டி, அதன் தெற்குமுனை வரையில் கப்பலில் வந்தார்; அங்கிருந்து அவர் தொடர்ந்து இந்தியாவுக்கு வர இயலாதபடி கடும்புயல் வீசியபடியால் அதனை அவர் புயல்முனை (Cape of Storms) என அழைத்துத் திரும்பிவிட்டார். 1498-ம் ஆண்டில் வாஸ்கோடகாமா என்ற இன்னொரு போர்ச்சுக்கீஸிய மாலுமி, டயாஸ் சென்ற வழியே வந்து தெற்குமுனைக்கு வந்தார்; அங்கு புயல் இன்றி அமைதி இருந்தது. அங்கு சில அராபிய மாலுமிகள் அவருக்கு உதவி செய்தனர். எனவே இந்தியாவுக்கு வர இயலுமென்ற நம்பிக்கை அவருக்கு ஏற்பட்டது; அந்த முனைக்கு நன்னம்பிக்கை முனை (Cape of Good Hope) எனப் பெயரிட்டார். அவர் அங்கிருந்து வடகிழக்குத் திசையில் வந்து இந்தியாவின் மேற்குக் கரையில் கோழிக்கோட்டில் இறங்கினார்.

புதிய கடல்வழிகளைப் பயன்படுத்திப் பலர் புதிய நாடுகளினுட் புகுந்து ஆராயலாயினர் (Exploration). 1497-ல் காபட்டுகள் (Cabots) என்ற இரு இத்தாலியருக்கு இங்கிலாந்தின் அரசர் ஏழாம் ஹென்றி பண உதவி செய்து வட அமெரிக்காவின் நியூபௌண்ட்லண்ட் பகுதிகளில் மக்கள் குடியேறுவதற்குரிய வசதிகளைக் கண்டுபிடிக்கச்செய்தார். 1500-ல் போர்ச்சுக்கீஸிய மாலுமியாகிய காப்ரால் (Cabrol) என்பவர் தென் அமெரிக்காவில் பிரேசில் (Brazil) நாட்டில் நுழைந்து ஆராய்ந்தார். 1519-லிருந்து 1522-க்குள்ளாக பெர்டினண்ட் ட மாகல்லன் (Ferdinand de Magellan) என்ற ஸ்பானியர் சில கப்பல்களுடன் அட்லாண்டிக் கடலைக் கடந்து தென்னமெரிக்காவைச் சுற்றிக்கொண்டு, பசிபிக் சமுத்திரத்தைக் கடந்து கிழக்கிந்தியத் தீவுகளில் ஒன்ருன பிலிப்பைன்ஸ் தீவில் இறங்கினர். அங்குள்ளவர்

களாக் அவர் கொல்லப்பட்டார். அவருடன்வந்த கப்பல்களுள் ஒன்று இந்துசமுத்திரத்தையும் அட்லாண்டிக் சமுத்திரத்தையும் கடந்து ஸ்பெயினுக்குத் திரும்பிற்று. அவர் வந்திறங்கிய தீவிற்கு ஸ்பானிய அரசர் இரண்டாம் பிலிப்பின் பெயராக பிலிப்பைன்ஸ் என்ற பெயர் வந்தது. முதன் முதலில் உலகத்தைக் கடலில் சுற்றி வந்தவர் போர்ச்சுகல் நாட்டு மகல்லன்தான்.

3. புதிய கடல்வழிகளும், புதிய நாடுகளும் கண்டு பிடிக்கப்பட்டதை ஒட்டிக் குடியேற்ற நாடுகளை ஐரோப்பியர் நிறுவலாயினர். ஸ்பெயினும் போர்ச்சுகலும் இம்முயற்சிகளில் முன்னின்றனவாகையால், கிறிஸ்தவத் திருச்சபையின் தலைவர் போப் உலகத்தை இரு கூறாகப் பிரித்துப் புதிய உலகமாகிய அமெரிக்கக் கண்டங்களில் பிரேசிலைத் தவிர மற்றவற்றை ஸ்பெயினும், பிரேசிலையும், கிழக்கத்திய நாடுகளையும், போர்ச்சுக்கலும் வாணிபத்துக்காகவும், குடியேற்ற நாடுகளை நிறுவவும் பயன்படுத்திக்கொள்ளலாமென்று ஒரு தீர்ப்புச் செய்தார்.

(A) 1. போர்ச்சுகல் நாடு பிரேசில் முழுவதிலும் தனது குடியேற்ற நாட்டை நிறுவிற்று. வட ஆப்பிரிக்காவின் மேற்குக் கரையில் சில பகுதிகளிலும், தென் முனையிலும் போர்ச்சுக்கீஸியருக்குச் சில வாணிபத்தளங்கள் இருந்தன. ஆசியாவில் இந்தியநாட்டின் மேற்குக் கரையில் அவர்களுடைய முக்கியமான சிறு குடியேற்ற நாடுகள், கோவா, டையூ, டாமன் என்பனவாம். இவற்றைத்தவிர போர்ச்சுக்கீஸியர் இலங்கைத்தீவு, மலாக்கா, சீனாவிலுள்ள காண்ட்டன் (Canton) ஆகியவற்றோடு வாணிபமும் செய்துவந்தனர். இவர்கள் வாணிபம் செய்வதற்கு இந்திய நாடுகளின் அரசர்கள் சலுகைகள் அளித்தனர்.

2. ஸ்பெயின், பிரேசில் நீங்கலாக நடு அமெரிக்காவிலும், தென்னமெரிக்காவிலும் தனது குடியேற்ற நாடுகளை நிறுவிற்று. மெக்ஸிகோவில் நாகரிக வளர்ச்சி பெற்ற ஆஸ்டெக் (Aztec) மக்களுடைய அரசை 1519–ல் கோர்ட்டஸ் (Cortez) என்ற ஸ்பானிய வீரரும், பெருவிலிருந்த நாகரிக அரசாகிய இங்கா (Inca) பேரரசை 1531-ல் பிஸாரோ (Pizarro) என்ற கொடிய ஸ்பானிய வீரரும்வென்றனர். ஸ்பானியக் குடியேற்றநாடுகளாகிய பனமா, மெக்ஸிகோ, பெரு முதலியவற்றிலிருந்து பெருமளவில் தங்கமும், வெள்ளியும் ஸ்பெயினுக்கு ஏற்றுமதியாயின. ஏறக்குறைய முன்னூறு ஆண்டுகளுக்குத் தென்னமெரிக்கக் குடியேற்றநாடுகள் இந்த ஐரோப்பிய நாடுகளின் ஆட்சியில் இருந்தன.

1517-ல் ஐரோப்பாவில் போப்பின் தலைமையை எதிர்த்து பிராட்டஸ்ட்டன்ட் சமயப் புரட்சி தோன்றவும், மற்ற ஐரோப்பிய நாடுகள், முன்பு போப்பினால் ஸ்பெயினுக்கும் போர்ச்சுக்கலுக்கும் சாதகமாகக் கொடுக்கப்பட்ட தீர்ப்பை மதிக்காமல் குடியேற்ற நாடுகளை நிறுவவும், வாணிபத் தொடர்புகளை ஏற்படுத்தவும் முன் வந்தனர்.

3. ஹாலந்து நாட்டினராகிய டச்சுக்காரர்கள் வாணிபத்திற்காகப் பெரிய அளவில் கப்பல்களைக்கட்டி ஐரோப்பியக் கடல் வாணிபத்தை நடத்துவதில் பெரும் பங்கு எடுத்துக்கொண்டனர். இவர்கள் கடும் உழைப்பாளிகள்; தங்கள் கப்பற்படையுடன் கிழக்கிந்திய தீவுகளாகிய சுமத்ரா, ஜாவா, முதலிய தீவுகளில் 17-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் வாணிபம் செய்து, குடியேறித் தங்களுடைய ஆட்சியை நிறுவினர். இவர்கள் தென்னாப்பிரிக்காவின் கேப் காலனியில் (Cape Colony) தங்களுடைய ஆட்சியை நிறுவினர். இவர்கள் வடஅமெரிக்காவிலும் குடியேறினர்.

4. பிரெஞ்சுக்காரர் வடஅமெரிக்காவில் கனடாவைத் (Canada) தங்களுடைய குடியேற்ற நாடாக ஆக்கினர். அவர்கள் 1541-3-ல் செயின்ட் லாரென்ஸ் ஆற்றுப் பகுதியை ஆராய்ந்தனர். இந்தியாவில் பிரஞ்சுக்கிழக்கிந்திய வாணிபக் கழகத்தினர் புதுச்சேரி, காரைக்கால், ஏனாம், சந்திரநாகூர், மாஹி முதலிய இடங்களில் வாணிபம் செய்து குடியேற்ற நாடுகளை நிறுவினர்.

5. எல்லா ஐரோப்பிய நாடுகளையும்விட இங்கிலாந்திற்கே மிகுதியும் குடியேற்ற நாடுகளை நிறுவும் வாய்ப்புக் கிடைத்தது. ஆங்கிலேயர், வடஅமெரிக்காவின் கிழக்குக்கரையில், வாணிப நோக்கத்தோடும், சமய உரிமைகளைக் காத்துக்கொள்ளும் நோக்கத்தோடும், ஆட்களைக் குடியேற்றும் நோக்கத்தோடும், வெர்ஜீனியா, மஸ்ஸாச்சூஸெட்ஸ், நியூபிளிமத், கனெக்டிக்கட், மேரிலண்ட், கரோலினா, பென்சில்வேனியா, ஜியார்ஜியா, நியூஹேவன் முதலிய குடியேற்ற நாடுகளை நிறுவினர். அவர்கள் 1763-ல் கனடா முழுவதையும், நியூயார்க், ஜமைக்கா, நோவாஸ்கோஷியா முதலியவற்றையும் பல போர்களில் தங்களுக்குக் கிடைத்த வெற்றிகளின் மூலமாகப் பெற்றனர். இந்தியாவில், ஆங்கிலக் கிழக்கிந்திய வாணிபக் கழகத்தார் (English East India Company) சூரத், சென்னை, கல்கத்தா, முதலியவற்றில் வாணிபம்செய்தும், பம்பாயை ஆங்கில அரசரிடமிருந்து பெற்றும், குடியேற்ற நாடுகளை நிறுவினர். நாளாவட்டத்தில் ஆங்கிலேயர் இந்திய அரசர்களுடன் வெற்றிகரமாகப்போரிட்டு இந்தியா முழுவதிலும் தங்களுடைய பேரரசை நிறுவினர்.

ஐரோப்பியக் குடியேற்ற நாடுகள் தோன்றியதைத் தவிர வேறுபல விளைவுகளும் தோன்றின.

B. (1) புதிய குடியேற்ற நாடுகளை நிறுவும் முயற்சியில் ஆப்பிரிக்கா பெரிதும் பாதிக்கப்பட்டது. 16-ம் நூற்

ருண்டில் ஒரு சில இடங்களில் ஆப்பிரிக்காவில் குடியேறிய ஐரோப்பியர், தங்களுடைய மற்றக் குடியேற்ற நாடுகளில் குறைந்த சம்பளத்தில் பயிர்த்தொழிலும், ஆலைத்தொழிலும் செய்யப்படுவதற்காக நிறைய நீக்ரோ மக்களை அடிமைகளாக வாங்கி வந்தனர். ஸ்பானிய, போர்ச்சுக்கீஸிய, டச்சு, ஆங்கில அடிமை வணிகர்கள் ஆப்பிரிக்கக் கரைகளில் அடிமை வணிக நிலையங்களை நிறுவிப் பல்லாயிரக் கணக்கான நீக்கிரோ மக்களைப் பிடித்து அடிமைகளாக அமெரிக்காவிற்குக் கொண்டு சென்று விற்றனர். பிற்பட்ட காலங்களில் நீக்கிரோக்களுக்கு உரிமைகள் வழங்கப்பட்டாலும், அமெரிக்காவில் இன்னும் நீக்கிரோக்களைப் பற்றிய இனச் சிக்கல் இருந்துவருகிறது.

(2) புதிய நாடுகள் கண்டுபிடிப்பினால், ஐரோப்பாவுக்கும் உலகின் மற்ற பகுதிகளுக்கும் நெருங்கிய தொடர்பு பெருகிற்று. எனவே வாணிபம் பெருகிற்று. ஐரோப்பிய நாகரிகம் உலகின் பல்வேறு பகுதிகளுக்கும் பரவிற்று.

(3) பெரிய அளவில் கப்பல்கள் கட்டப்பட்டு, பெரும் சமுத்திரங்களைத் தாண்டி வாணிபம் செய்யப்படலாயிற்று. பொருள்களும் அளவிற் பெரியனவாகக் கையாளப்பட்டன. ஐரோப்பாவில் காப்பி, தேயிலை, கரும்புச் சர்க்கரை, உருளைக்கிழங்கு, சோளம், திமிங்கில எண்ணெய் முதலியவை பயன்படுத்தப்பட்டன.

(4) தொழிலும் வாணிபமும் பெருக, பணமும் பெருகவே, பாரசீக நாட்டுக் கம்பளங்கள், சீன நாட்டுப் பட்டுத் துணிகள், இந்தியப் பருத்தித் துணிகள், ஆப்பிரிக்காவின் தங்கம், மணிகள் முதலிய தேவைக்கு மிகுதியான பொருள்கள் (luxuries) ஐரோப்பியரால் விரும்பி வாங்கப்பட்டன.

5. வாணிபப் பெருக்கினால், ஊதியம் பெருகவும், நடுத்தர வகுப்பினர் எண்ணிக்கை வளர்ந்தது, மத்திய காலத்தில் தொழிலுக்கும் வாணிபத்திற்கும் வேண்டிய முதற்பொருள் (Capital) வாணிபத் தொழிற் கழகங் (Guilds) களினின்றும் கிடைத்தது; இப்போது கழக முறையழிந்து, பொருள் வளமுள்ள தனியார்முதலாளி முறை (Individual capitalism) தோன்றிற்று.

6. வாணிபத்திலும், குடியேற்ற நாடுகளை நிறுவுவதிலும் ஐரோப்பிய நாடுகளுக்கிடையே போட்டி வலுக்கவே, 16, 17, 18-ம் நூற்றாண்டுகளில் டச்சுக்காரருக்கும், போர்ச்சுக்கீசியருக்கும், ஸ்பானியருக்கும், பிரஞ்சியருக்கும்; பிரஞ்சியருக்கும் ஆங்கிலேயருக்கும் பல போர்கள் நடைபெற்றன.

— X —

# 2. ஐரோப்பாவின் புரட்சிக் காலம், (1789-1848)

## (1) பிரஞ்சுப் புரட்சி (1789-1799)
## (The French Revolution)

1. முன்னுரை. 2. பிரஞ்சுப் புரட்சியின் பல்வேறு காரணங்களும் சூழ்நிலைகளும். 3. புரட்சியின் நிகழ்ச்சிகள். 4. புரட்சியின் விளைவுகள்.

1. பிரஞ்சுப் புரட்சி உலக வரலாற்றில் மிகமுக்கியமான நிகழ்ச்சிகளுள் ஒன்றாகும். 13, 14-ம் நூற்றாண்டுகளில் நடைபெற்ற இலக்கிய மறுமலர்ச்சி இலக்கியமும், 15, 16-ம் நூற்றாண்டுகளில் நடைபெற்ற புதிய நாடுகள் கண்டுபிடிப்பு முயற்சிகளும், 16-ம் நூற்றாண்டில் நடைபெற்ற பிராட்டஸ்ட்டண்ட் சமயச்சீர்திருத்த இயக்கமும், 18, 19-ம் நூற்றாண்டுகளில் நடைபெற்ற தொழிற்புரட்சியும், இந்நூற்றாண்டில் நடைபெற்ற ரஷ்யப்புரட்சியும், இரு உலகப் பெரும் போர்களும் எவ்வாறு உலகவரலாற்றை ஆக்குவதற்கேற்ற நிகழ்ச்சிகளாக அமைந்திருக்கின்றனவோ, அதேபோல பிரஞ்சுப் புரட்சியும் 19-ம் நூற்றாண்டின் உலகவரலாற்றை வெகுவாக உருவாக்கிய நிகழ்ச்சி ஆகும். இது பிரான்சின் எதேச்சாதிகார முடியாட்சிக்கும், பிரபுக்களாட்சிக்கும் (aristocracy) எதிராக பிரஞ்சு மக்களால் செய்யப்பட்ட புரட்சியாகும். இது மக்களுடைய அரசியல், சமுதாய, சமய, பொருளாதாரத் துறைகள் பற்றிய வாழ்வையெல்லாம் பெரிதும் பாதித்தது. 'மாற்றம் செய்தல்' என்ற பொருளை உணர்த்தும் புரட்சி என்பது, வாழ்க்கையின் பல்வேறு துறைகளிலும் அமைதியான முறையிலும் அல்லது வல்லந்தமான முறையிலும் ஏற்படலாம். பிரஞ்சுப் புரட்சி வன்முறையில் (violence) ஏற்பட்ட ஒன்றாகும்.

2. பிரெஞ்சுப் புரட்சியின் காரணங்களை (1) சமுதாய காரணங்கள், (2) அரசியற் காரணங்கள், (3) மன இயல் காரணங்கள், (4) நிதி பற்றிய காரணங்கள் எனப் பகுத்துக் கூறலாம்.

(1) பிரெஞ்சு சமுதாயத்தில் பிரபுக்கள் வகுப்பும், அளவிற் பெரிய பொதுமக்கள் வகுப்பும், நில அடிமைகள் (serfs) அடங்கிய வகுப்பும் இருந்தன. நாட்டின் விளை நிலங்களில் பெரும்பகுதி பிரபுக்களிடமும், உயர்தரச் சமயக் குருமாரிடமும் இருந்தன. இவர்களுடைய நிலங்களுக்கும், வீடுகளுக்கும் உள்ள வரியை (taille) இவர்கள் அரசாங்கத்திற்குக் கட்டவேண்டுவதில்லை என்ற உரிமை இவர்களுக்கு இருந்தது. பிரபுக்களிடமிருந்து அரசியலதிகாரமானது அரசர் கைக்கு மாறினாலும், இவர்கள் அரசருடைய எதேச்சாதிகார ஆட்சிக்கு ஆதரவளித்து அதற்கு ஈடாக அரசரிடமிருந்து பல சலுகைகளைப் பெற்றனர். வரிகட்டாத 'சலுகையும்' அவற்றுள் ஒன்று. மேலும் உப்பு மீது விதிக்கப்படும் சுங்கத்தையும் (gabelle) பிரபுக்கள் கட்ட வேண்டுவதில்லை. இவ்வரிகளையெல்லாம் பிரபுக்களின் நிலங்களைக் குத்தகைக்கு எடுத்துப்பயிரிட்ட குடியானவ மக்களின் வகுப்புத்தான் அரசாங்கத்திற்குக் கட்டிற்று. நில அடிமைகள் நிலத்தோடு ஒட்டி உழைத்து, உரிமையற்று இன்றி வாடினர். பிரபுக்களைத் தவிர மற்றவரெல்லாம் வறுமை, அறியாமை, நோய் முதலியவற்றில் உழன்றனர். நல்ல இன்ப வாழ்வில் ஆழ்ந்த பிரபுக்கள் ஆணவத்துடன் கீழ்வகுப்பாரை நடத்தினர்; கீழ்வகுப்பார் எவரேனும் இத்தகையபிரபுக்களின் போக்கையோ, அரசாங்கத்தையோ, எதிர்ப்பார் என்ற ஐயப்பாடு தோன்றினால், பிரபுவோ அரசாங்கத்தாரோ அவரைப் பிடித்து பஸ்டீல் என்ற சிறையில் போட்டுவிட்டனர். இத்தகைய நிலை—சமுதாய சமத்துவமற்ற நிலை—புரட்

சிக்கு வித்தாயிற்று. "ரோம் தீப்பற்றி எரியும்பொழுது பேரரசர் நீரோ இசைக்கருவி வாசித்தார்; பிரஞ்சுக் குடியரனவர் பட்டினியால் வாடுகையில் பிரஞ்சுப் பிரபுக்கள் உண்டு, களித்து நடனமாடினர், என சில வரலாற்றாசிரியர் கூறுகின்றனர்.

(2) 15, 16-ம் நூற்றாண்டுகளில் பிரஞ்சு அரசர்கள் நிலமானியப் பிரபுக்களிடமிருந்து ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றித் தங்களுடைய ஒரே அரசாங்கத்தின் கீழ் நாடு முழுவதையும் இணைத்து, நல்ல தொண்டு செய்தனர். எனவே அப்பொழுது அவர்களுடைய ஆட்சி எதேச்சாதிகாரமானதாயிருந்தும் வரவேற்கத் தக்கதாயிருந்தது. பதினான்காம் லூயியின் எதேச்சாதிகாரமும் அவருடைய ஆட்சியின் பெருமபான்மைக் காலத்தில் மக்களால் விரும்பப்பட்டே வந்தது. ஆயினும் அவரை ஒத்த திறமும் அறிவும் இல்லாத 15-ம் 16-ம் லூயிகள் காலத்தில் பிரஞ்சு எதேச்சாதிகார முடியாட்சியின் கொடுமையை மக்களால் தாங்கமுடியவில்லை. நீண்ட பயனற்ற போர்களிலும் கட்டிடங்களிலும் 14-ம் லூயி பொதுப் பணத்தை விரயக்கினார். அவருடைய ஆட்சியின் இறுதியிலேயே மக்களின் அல்லல் பெருகிற்று. அரசரால் ஒன்றும் செய்ய இயலவில்லை. 15-ம் லூயி தீய ஒழுக்க வாழ்வில் படிந்து (1715-1774) நாட்டின் நிதி நிலையை இன்னும் சீர்கேடாக ஆக்கினார். 16-ம் லூயி 1774-ல் அரியணை ஏறிய போது நாட்டின் கருவூலத்தில் நிதியும் இல்லை; நிதியைத் திரட்டி ஆட்சியைச் செவ்வனே நடத்த அவருக்குத் திறமையும் இல்லை. எனவே பிரஞ்சு எதேச்சாதிகார முடியாட்சி திறனற்றதாகவும், மக்களுக்கு மேலும் அல்லலை உண்டாக்குவதாகவும் மாறவே, குடிகளுக்கு முடியாட்சியின் மீது வெறுப்பு வளர்ந்தது; தங்களுடைய துன்பங்களுக்கெல்லாம் மூலகாரணம் தங்க

ளுக்கு நாட்டின் அரசாங்கத்தில் பங்கு இல்லாமல், எல்லா அதிகாரங்களும் அரசரிடம் குவிக்கப்பட்டிருந்தது தவறு என்று அவர்கள் நன்றாக உணர்ந்தனர். பிரஞ்சுப் பாராளுமன்றமாகிய ஸ்டேட்ஸ் ஜெனரல் (States General) 1614-ம் ஆண்டுக்குப் பின் 175 ஆண்டுகளுக்குக் கூட்டப்படவில்லை. இத்தகைய நிலைமை இங்கிலாந்தில் ஏற்படாததால் ஆங்கிலக் குடிமக்கள் தங்களுடைய எல்லா உரிமைகளையும் காத்துக் கொள்வதில் கவனமாக இருக்கவும், ஆட்சியில் அவர்கள் பங்கு கொள்ளவும், அது எதேச்சாதிகாரமாக மாறாமல் குடிகளுக்குப் பொறுப்பாக நடைபெறவும் வழி உண்டாயிற்று. இதனைப் பிரஞ்சு மக்கள் மெள்ள மெள்ள உணரலாயினர். எனவே நல்ல ஆட்சிக்கு வழி, முடியாட்சியை நீக்குவதே என அவர்கள் எண்ணிப் புரட்சி மனப்பான்மையோடிருந்தனர்.

(3) புரட்சிக் கருத்துக்களை மக்களுடைய மனத்தில் சில அறிஞர்கள் விதைத்தனர். வால்டேர் (Voltaire) என்ற பகுத்தறிவாளர் (1694-1778) பகுத்தறிவுக்கு ஒவ்வாத எந்தக் கருத்தையும் செயலையும் துணிச்சலாகக் கேலி செய்து இடித்துரைத்தார். சார்ல்ஸ் மான்டெஸ்க்யூ (Charles Montesquieu) (1689-1755) என்பவர் அரசாங்க வளர்ச்சியை வரலாற்றின் அடிப்படையில் ஆய்வுசெய்து, ஆங்கில அரசாங்க நிறுவனங்களையும் உரிமை முறைகளையும் சரியானவையே எனச் சுட்டிக்காட்டி, சட்டமியற்றும் அதிகாரம், நிருவாக அதிகாரம், நீதி வழங்கும் அதிகாரம் ஆகிய மூன்றும் பிரஞ்சு முடியாட்சியில் இருப்பதுபோல் ஒரே ஆளிடத்தில் குவிக்கப்பட்டிருந்தால் தனிமனித சுதந்திரம் அழியுமென்று எடுத்துக் கூறினர். ஜீன் ஜாக் ரூஸ்ஸோ (J. J. Rousseau) (1712-1778) என்பவர் அரசாங்கம் என்பது இயற்கையில் மக்கள் தாமாகவே கூடிச் செய்து கொண்ட ஒரு சமுதாய ஒப்பந்

தத்தால் தான் தோன்றுகிறது என்றும், எனவே அரசாங்கம் ஒரு வேலையாளைப் போல இயங்கி, குடிகளுடைய உரிமைகளைப் பாதுகாக்கத் தவறினால், அதனைக் குடிகள் நீக்கிவிட்டு, வேறொன்றை ஏற்படுத்துவதற்கு முழு உரிமை உண்டு என்றும், 'சமுதாய ஒப்பந்தம்' (Social Contract) என்ற நூலில் எழுதினார். சமுதாய ஒப்பந்தம் என்பதே ஒரு கற்பனையான கருத்துத்தான். எனினும் இதற்கு ரூஸோ கொடுத்த விளக்கத்தினால, குடிகளுடைய உரிமைகளும், கடமைகளும், குடிமக்களே இறைமை உடையவர்கள் என்ற (popular sovereignty) கருத்துக்களும் வெளியுலகில் நிலவி, அவை இக்காலக் குடியாட்சி அரசாங்க முறைக்குக் கொள்கை அடிப்படையாக அமைந்தன. எனவே அவருடைய நூலே பிரஞ்சுப் புரட்சிக்கு நேர்வழிகாட்டிய நூல் எனப்படுகிறது. இவ்வாசிரியர்களெல்லாம் நடத்திய கருத்து இயக்கம் (intellectual movement), புரட்சித் தன்மையும் மனிதப் பற்றுத் தன்மையும் (humane) மிகுதியாகக் கொண்டிருந்தது.

(4) இவையெல்லாவற்றையும் விட அரசாங்கத்தின் சீர்கேடான நிதிநிலைமையே புரட்சியைத் தோற்றுவித்த வலுவான காரணமாகும். 14-ம் லூயியும், 15-ம் லூயியும் அரசாங்கப் பணத்தை விரைக்கியதைப் போல, 16-ம் லூயியும் இங்கிலாந்தை எதிர்த்துப் போரிட்ட அமெரிக்கக் குடியேற்ற நாடுகளுக்குப் பொருளுதவி செய்தார். 15-ம் லூயியே தன் காலத்தில் அரசாங்கத்தின் நிதிநிலைமையையும் குடிகளின் வெறுப்பையும் உணர்ந்திருந்தார்; "எனக்குப் பின்னால் ஒரு பெரும் ஊழிவெள்ளம் (deluge) வரப் போகிறது" என்றார் அவர். பிரபுக்களும் குருமாரும் வரி கொடுக்கவில்லை. அரசாங்கத்தின் கடன் அளவில் பெருகிற்று. அரசருடைய நிதி அமைச்சர் டர்க்காட் (Turgot)

கேட்டனர்; ஜூன் 20, 1789-ல் அரசனும், பிரபுக்களும் இச்சபையின் உரிமையை ஏற்காமல் அது கூடுவதற்கும் இடமளிக்காமல் விரட்டிவிட்டனர். ஆனால் அது அருகிலுள்ள டென்னிஸ் வெளியில் கூடி தேசிய மன்றமாக அமைந்து (National Assembly) கலையாமலிருந்தது. பசியால் வாடிய பாரிஸ் நகர மக்கள் மூன்று நாட்களுக்கு கலகம் செய்து ஜூலை 14-ல் பாஸ்டைல் என்ற தேசியச் சிறைச்சாலையைக் கைப்பற்றினர். அக்டோபரில் பாரிஸ் மக்கள் வெர்செயில்ஸுக்குப் போய் அரச குடும்பத்தாரைப் பாரிஸுக்கு வந்து இருக்கச் செய்தனர். பாரிஸுக்கு வெளியில் பல இடங்களில் கலகங்கள் பரவின. குடியானவர் பிரபுக்கள் வீடுகளைச் சூறையாடியும் தீயிட்டும் அழித்தனர். ஒவ்வொரு பட்டணத்திலும் தேர்ந்தெடுக்கப்பட்ட சுயராட்சியும், தனியான தேசியக் காவலர் படையமைப்பும் நிறுவப்பட்டன. பழைய நீதிமன்ற முறைகளும், உள்ளூர் ஆட்சி முறைகளும் மறைந்தன.

1789 முதல் 1791 வரை தேசிய மன்றம் பல மாறுதல்களைச் செய்தது. ஆகஸ்டு 4-ல் (1789) அது நில மானிய முறைச் சலுகைகளையும், நிலஅடிமை முறையையும் ஒழித்தும்; எல்லா வகுப்பாரும் அரசாங்கத்துக்கு வரி செலுத்த வேண்டுமென்ற சமத்துவ வரி முறைக் கொள்கையைவலியுறுத்தியும்;பிரபுக்களின் பெருநில உடைமைகளை அவற்றைப் பயிரிட்ட குத்தகைக் குடியானவருக்கு உடைமைகளாகப் பங்கிட்டும் தீர்மானங்கள் செய்தது. அது ஆகஸ்டு 12-ல் வெளியிட்ட மனித உரிமை விளம்பரமே ரூஸோவின் கருத்துக்களையும் இக்காலக் குடியாட்சி முறையின் தோற்றத்தையும் காட்டுவதாக இருக்கிறது. அது கூறியதாவது:

இதற்குக் காரணம் ஆஸ்திரியாவும், பிரஷ்யாவும் பிரஞ்சு அரசருக்கு உதவியாகப்புரட்சிஅரசாங்கத்தைக்கவிழ்க்கப் போர் தொடங்கியதுதான். 1792-ல் போர்தொடங்கிற்று. அரசர் பதவியிலிருந்துநீக்கப்பட்டார். பிரான்ஸ் குடியரசு என விளம்பரம்செய்யப்பட்டது. இரண்டாயிரம் முடியரசு வாதிகளும், குடியரசின் எதிரிகளெனக் கூறப்பட்டவரும் கில்லட்டீன் என்ற கழுவில் தலைகள் துண்டிக்கப்பட்டுக் கொல்லப்பட்டனர். 1793-ல் அரசரும் அரசியும் கொல் லப்பட்டனர். இங்கிலாந்து, ஹாலந்து, ஸ்பெயின், ஆஸ்திரியா, பிரஷ்யா ஆகியவை பிரான்சுக்கு எதிராகப் போர் தொடங்கின. புரட்சித் தலைவர்களுள் மாறுபாடு தோன்றிற்று. மேலே கூறப்பட்ட மூவரும் தத்தம் பகை வரால் கொல்லப்பட்டனர். 1795-ல் தேசீய ஆட்சிக்குழு டைரக்டரி என்ற ஒரு நிர்வாகக் குழுவையும், இரட்டை மன்ற அமைப்புள்ள சட்டசபையையும், அமைத்துவிட்டு நீங்கிற்று. முடியாட்சியாளர்சிலர் முடியாட்சியை நிறுவப் புரட்சி செய்தனர். ஆஸ்திரியா, இத்தாலியில் தனது பிடியை வலுவாக்கிவந்தது. இவற்றை எதிர்ப்பதற்காக டைரக்டரி (Directory) நெப்போலியன் போனப்பார்ட் என்ற ஒரு இளைய இராணுவ சிறு அதிகாரியை ஏவ, அவர் வெற்றியாக எதிரிகளை ஒடுக்கினார் அவர் இத்தா லியில் வெற்றிகள் பலபெற்று, 1799ல் இங்கிலாந்து, ஆஸ் திரியா, ரஷ்யா ஆகியவை அமைத்தஇரண்டாம்இராணு வக் கூட்டை உடைத்துவிட்டுப் புகழ்பெற்றுத் திரும்பி னார். அவர் டைரக்டரியை 1799-ல் நீக்கிவிட்டு, வேறொரு அரசியலமைப்பின் மூலமாகத் தன்னை முதற்கான்சலாக வும் (First Consu'), வேறு இருவரை உதவிக் கான்சல் களாகவும் அமைத்து இராணுவ சர்வாதிகாரத்தை ஏற் படுத்தினார். 1805-ல் அவர்தன்னை ஓர்பேரரசராக ஆக்கிக் கொண்டார். பிரஞ்சுப் புரட்சி முடிவடைந்தது.

4. பிரஞ்சுப் புரட்சியினால் சில நிலையான விளைவுகள் ஏற்பட்டன. (1) எதேச்சாதிகார முடியாட்சி முறை நீங்கிற்று. (2) நிலமானியமுறையும் நிலஅடிமை முறையும் நீங்கின. (3) குடியானவருக்குச் சொந்தமாகச் சிறு நிலவுடைமை முறை தோன்றிற்று. (4) தேசிய ஆட்சிக் குழு நீக்ரோ அடிமை முறையையும், கடனுக்காகச் சிறைப் படுத்தும் முறையையும் ஒழித்தது. (5) பத்து என்ற எண்ணிக்கையை அடிப்படையாகவைத்து மெட்ரிக்முறையில் நிறுத்தல், முகத்தலளவைகள் கொண்டுவரப்பட்டன. (6) இக்காலக் குடியாட்சி முறைக்குக் கொள்கைத் தளமாக (Theoretical Basis) இருக்கும் மாக்னா கார்ட்டா என்ற 1215-ம் ஆண்டின் பட்டயம், 1688-ஆம் ஆண்டின் உரிமை விளம்பரம் (Declaration of Rights), 1776-ஆம் ஆண்டின் அமெரிக்க சுதந்திர விளம்பரம், 1787-ம் ஆண்டின் கூட்டரசு அரசியலமைப்பு, (Fedcral Constitution) முதலியவற்றின் வரிசையில் 1789-ல் பிரஞ்சு தேசியமன்றம் வெளியிட்ட மனித உரிமைகள் விளம்பரமும் சேர்ந்தது. பொதுவாகக் குறிப்பிட்டால் தேசிய ஒற்றுமை உணர்வும் (nationalism), குடியாட்சி உணர்வும் (democracy) பிரஞ்சுப் புரட்சியினால் தோற்றுவிக்கப் படாவிட்டாலும், அவை வெகுவிரைவாகப் பரவிச் செயல் படுவதற்குப் பிரஞ்சுப் புரட்சி ஒரு தளமாக அமைந்தது என்று நாம் கூறலாம்.

— o —

## (2) நெப்போலியன் போனப்பார்ட்
## (Napoleon Bonaparte)

1 வாழ்க்கை வரலாறு 2 போர்வீரராக நெப்போலியன் ஆற்றிய அருஞ்செயல்கள் 3 நெப்போலியன் செய்த சீர்திருத்தங்கள் 4 நெப்போலியனைப் பற்றிய மதிப்புரை

1. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஐரோப்பா முழுவதையும் கட்டுப்படுத்த வல்லவராக விளங்கிய நெப்போலியன் போனப்பார்ட் பிரஞ்சுப்புரட்சியின் விளைவாகத் தோன்றியவர் ஆவார். அவர் ஒரு போர் வீரராகவும், திறம் மிக்க ஆட்சியாளராகவும் விளங்கினர்.

நெப்போலியன் போனபார்ட் 1769–ம் ஆண்டில் கார்சிக்கா தீவிலுள்ள அஜேசியோ என்னும் ஊரில் கார்லோ போனப்பார்ட் என்பவருக்கும் லெட்டிசியா என்ற அம்மையாருக்கும் பிறந்தார். அவருடன் பிறந்தவர் பலர். இளமையிலேயே கூரிய அறிவுத் திறனும், பொறுப்புணர்ச்சியும் கொண்டு, அஞ்சா நெஞ்சினராயும் அவர் இருந்தார். பிரான்சில் பிரையென் என்னுமிடத்திலுள்ள இராணுவப் பள்ளியில் அவர் கற்ருர். பின்னர் அவர் பிரஞ்சுப் புரட்சி அரசாங்கத்தாருடைய படையில் சேர்ந்தார். டௌலூன் என்னுமிடத்தில் பிரஞ்சுக் குடியரசின் அரசாங்கத்தாரை எதிர்த்த முடியாட்சிக் கட்சியினரை நெப்போலியன் ஒடுக்கினர். பிரான்சை ஆண்ட தேசிய மன்றத்தின் (National Convention) பகைவரை அவர் வென்றமையால், பிரான்சைத் தாக்கிய ஆஸ்திரியாவை வெல்லும் பொருட்டு அவரை அரசாங்கம் பிரஞ்சுப் படையின் தளபதியாக அமர்த்திற்று. அவர் ஆஸ்திரியா மீது பலவெற்றிகளை இத்தாலியில் அடையவே, பிரான்சின் புது அரசாங்கமான டைரக்டரி

அவருக்குத் தளபதி அலுவலை நீடித்து அளித்தது. இவ்வெற்றிகளினால் புகழ் பெருகவே, அவர் எதிர்ப்பு ஒன்றும் இல்லாமல் டைரக்டரியை ஆட்சியினின்றும் நீக்கிவிட்டு, 1799-ல் தன்னை முதல் கான்சல் ஆகவும், வேறு இருவரை உதவிக் கான்சல்களாகவும் அமர்த்தி, நாட்டின் ஆட்சிப்பொறுப்பு முழுவதையும் தன்வசம் வைத்துக்கொண்டார். அவர் ஆஸ்திரியாவோடும், மற்ற அண்டை நாடுகளோடும் போரைத் தொடர்ந்துசெய்து 1802-ம் ஆண்டில் அவற்றோடு அமைதி உடன்படிக்கை செய்தார். 1805-ம் ஆண்டுவரை நிலவிய இக்குறுகிய அமைதிக் காலத்தில் அவர் நாட்டிற்குத் தேவையான சீர்திருத்தங்களைச் செவ்வனே செய்தார். 1804-ம் ஆண்டில் அவர் பிரான்ஸ் குடியரசு நாடு அல்லவென்றும், அது ஒரு பேரரசு என்றும் (Empire), தன்னை ஓர் பேரரசர் என்றும் (Emperor), விளம்பரம் செய்தார். 1805-ம் ஆண்டு முதல் 1815-ம் ஆண்டுவரை அவர் பல போர்களைச் செய்துபல வெற்றிகள் பெற்றார். அவர் 1813-ல் மாஸ்கோவினின்று திரும்புகையில் லீப்ஸிக் என்னும் போரில் தனது பகைவரால் தோற்கடிக்கப் படவே அவர் இத்தாலிக்கு வெகு அருகிலுள்ள எல்பா தீவுக்கு நாடு கடத்தப்பட்டார். ஆயினும் அவர் பாரிஸுக் குத் தப்பி வந்து, தனது எதிரிகளுக்கெதிராகப் பெரும் படையொன்றைத் திரட்டினார். பிரிட்டனும் பிரஷ்யாவும் தங்களது படைகளை ஒன்று திரட்டி அவற்றை வெல்லிங் டன் பிரபு என்ற ஆங்கிலத் தளபதியின் கீழ் அமைத்தன. இப்படைகள் நெப்போலியனை வாட்டர்லூ என்ற போர்க் களத்தில் 1815-ம் ஆண்டில் தோற்கடித்தன. ஆங்கிலே யரிடம் சரண்புகுந்த நெப்போலியனை அவர்கள் சிறை பிடித்து, அட்லாண்டிக் மகாசமுத்திரத்தின் நடுவிலுள்ள செயின்ட் ஹெலினா என்ற தீவில் வைத்தனர். சிறை யிலேயே நெப்போலியன் 1821-ம் ஆண்டில் இறந்தார்.

இதற்கு அடுத்த ஆண்டில்தான் அவருடைய தாயார் இறந்தார்.

2. நெப்போலியன் போர்வீரராக ஆற்றிய அருஞ் செயல்கள் அவருக்கு வரலாற்றில் பெரும் புகழைத் தேடித் தந்துள்ளன. (1) இத்தாலி நாட்டில் அவர் ஆஸ்திரியர்களை ரிவோலி, மாண்ட்டுவா, லோடி என்ற இடங்களில் வென்று, பிரான்சிற்கு எதிராக பிரிட்டனாலும், ஆஸ்திரியாவினாலும் அமைக்கப்பட்ட இரண்டாம் இராணுவக் கூட்டைத் (Second Coalition) தகர்த்தார். (2) அப்பொழுது இந்தியாவில் பல பகுதிகளில் தங்களுடைய ஆட்சியை நிறுவிக்கொண்டிருந்த ஆங்கிலேயரை இந்தியாவிலிருந்து விரட்டும் நோக்கத்தோடு, நெப்போலியன் எகிப்தைக் கைப்பற்றித் தனது தளமாக ஆக்குவதற்கு முயன்றார். அவர் எகிப்தியரை பிரமிட் சண்டையில் வென்ற போதிலும், அவருடைய கப்பற்படை, அவரைப் பின் தொடர்ந்து வந்த ஆங்கிலக் கடற்படையின் தளபதி நெல்சனால் 1796-ல் நைல் கடற் சண்டையில் முறியடிக்கப்பட்டு விடவே, அவரால் இந்தியாவுக்கு வரமுடியவில்லை. (3) அவர் பிரிட்டனின் மீது படையெடுப்பதற்கு 1804-ல் ஒரு கப்பற்படையை உருவாக்கினார். இந்தப் பிரஞ்சுக் கடற்படையும் ஆங்கிலத் தளபதி நெல்சனால் 1805-ல் டிரபால்கர் கடற்போரில் தோற்கடிக்கப்பட்டது. எனவே இப்போது மூன்றும் இராணுவக் கூட்டை அமைத்த ஆஸ்திரியாவுக்கு எதிராக நெப்போலியன் தரைச் சண்டைகளைத் தொடர்ந்தார். 1805லும், 1806லும் அவர் ஆஸ்திரியர் மீது உல்ம், ஆஸ்ட்டர்லிட்ஸ் என்ற போர்களில் புகழ் பெற்ற வெற்றிகள் பெற்றார். ஜெர்மனியிலுள்ள எல்லா நாடுகளையும் நெப்போலியன் தனது தலைமையின் கீழ் ரைன் ஆற்றின் இணைப்பாக (Confederation of the Rhine) என அமைத்தார். (4) பிரஷ்யாவின் மீது அவர்

ஜேனு என்ற போரில் சிறந்த வெற்றிபெற்று, ரஷ்யசார் அரசனையும் பிரிட்லாண்ட் என்ற இடத்தில் தோற்கடித்தார். டில்சிட் என்ற இடத்தில் அவர் ரஷ்ய அரசனோடு உடன்படிக்கை செய்தார். இவ்வுடன்படிக்கை செய்யப்பட்ட 1807-ம் ஆண்டு நெப்போலியனுடைய அரசியல் வலிமை மிக உயர்ந்த நிலையில் இருந்ததைக் காட்டுவதாகும். பிரிட்டனைத் தவிர மற்றெல்லா ஐரோப்பிய நாடுகளும் இவ்வாண்டில் நெப்போலியனுடைய ஆட்சியின்கீழ் இருந்தன. ஸ்பெயினில் நெப்போலியனின் தமையனான ஜோசப் என்பவரையும், நேப்பிள்ஸில் இன்னொரு தம்பியையும் அரசர்களாக்கினார். ஜெர்மனியிலும் அவருடைய உறவினர் ஒருவர் அரசரானார்.

நெப்போலியனின் வீழ்ச்சி 1807-ம் ஆண்டிலிருந்து 1815-ம் ஆண்டுவரை நடைபெற்ற பல்வேறு நிகழ்ச்சிகளினால் ஏற்பட்டது. (1) அவர் பிரிட்டனின் பொருளாதார வளர்ச்சியை அழிக்கும் பொருட்டு, 1807-ம் ஆண்டு தான் பிரிட்டனை ஒரு பொருளாதார முற்றுகையில் வைத்திருப்பதாகவும், தனது கட்டுப்பாட்டிலுள்ள எந்தநாடும் பிரிட்டனுடன் வாணிபம் செய்தல் கூடாதெனவும் ஆணை பிறப்பித்தார். பிரிட்டனில் அப்பொழுது நடைபெற்று வந்த ஆலைத்தொழில் வளர்ச்சியின் காரணமாக, அதனுடைய ஆலைகளில் பொருள்களைச் செய்வதற்கான கச்சாப் பொருள்களைப் பெறுவதற்கும், செய்யப்பட்ட பொருளை விற்பதற்கும், அது மற்ற நாடுகளைச் சார்ந்திருந்தது. ஆயினும் அப்பொருளாதார முற்றுகை தோல்வியுற்றது. எவ்வாறெனில் பிரான்ஸ் உள்பட எல்லா ஐரோப்பிய நாடுகளுக்கும் தேவையான பொருட்கள் பிரிட்டனின் ஆலைகளில் செய்யப்பட்டு வந்தன. எனவே ஒவ்வொரு நாடும் பிரிட்டனோடு வாணிபம் செய்ய முயன்றது. (2) ஸ்பெயின் தீபகற்பத்தில்

(1806—1814 வரை) பிரஞ்சியருக்கு எதிராகப் போர் தொடங்கிற்று. போர்ச்சுகல் நெப்போலியனுடைய பொருளாதார முற்றுகை ஆணையை மீறி பிரிட்டனோடு வாணிபம் செய்யலாயிற்று. ஸ்பெயினில் நெப்போலியனின் தம்பி ஜோசப்புக்கு எதிராக ஸ்பானியர் தேசீய உணர்வு மிக்கு, அவரைத் தம் நாட்டினின்றும் நீக்கக் கிளர்ந்தெழுந்தனர். ஸ்பெயினிலும், போர்ச்சுகல்லிலும் இருந்த பிரஞ்சுப்படைகளை விரட்டுவதற்கு இங்கிலாந்து அவ்விருநாடுகளுக்கும் இராணுவ உதவி அளித்து, வெல்லிங்டன் பிரபு என்ற தளபதியை அனுப்பிற்று. 1814க்குள் பிரஞ்சுக்காரர் ஸ்பானிய தீபகற்பத்திலிருந்து முழுவதும் நீக்கப்பட்டனர். இப்போரில் நெப்போலியன் ஸ்பெயினுக்கு வரவில்லை. எனவே ஸ்பெயினில் அவருடைய ஆட்சி மறைந்தது. (3) ரஷ்ய அரசர் முதலாம் அலக்சாண்டர், நெப்போலியனுடைய முற்றுகை ஆணைக்கு எதிராக, இங்கிலாந்தோடு வாணிபம் செய்வதற்காகத் தனது குடிகளுக்கு இசைவு அளித்தார். எனவே அவரைத் தண்டிப்பதற்காக நெப்போலியன் 500,000 வீரர் அடங்கிய படையுடன் ரஷ்யா மீது படை எடுத்தார். ரஷ்யப் படையைத் தோற்கடித்து, மாஸ்கோவைக் கைப்பற்றிய நெப்போலியனும், அவரது படையும் அங்கு நீடித்து இருக்க முடியாமல் கடுங் குளிராலும், பஞ்சத்தினாலும் துன்புற்றனர். ரஷ்யர் மாஸ்கோவைத் தீயிட்டுவிடவே உணவுப் பொருள் கிடைக்கவில்லை. இதனாலும் ரஷ்யக் கடுங்குளிரினாலும், பல பிரஞ்சு வீரர்கள் இறந்தார்கள். எனவே நெப்போலியன் திரும்பிவரவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இதுவே அவரால் வெல்லப்பட்ட ஐரோப்பிய நாடுகளெல்லாம் அவருக் கெதிராக நான்காம் இராணுவக் கூட்டை ஏற்படுத்தவும், தமதுசுதந்திரத்தை மீண்டும் பெறவும் ஓர் வாய்ப்பை அளித்தது. எனவே

அவை நெப்போலியனை 1913-ம் ஆண்டில் லீப்சிக் என்ற போரில் தோற்கடித்து மீண்டும் சுதந்திர நாடுகளாயின. எனவே இப்போர் தேசிய இனங்களின் போர் (Battle of the Nations) எனப்படும். நெப்போலியனுடைய வீழ்ச்சிக்கு வாணிகத் தடைமுறையும் ஒரு காரண மாகும். (4) கிரேட் பிரிட்டன் கடலில் ஆதிக்கம் பெற்றிருந்தது. அதன் கப்பற்படை நெப்போலியனுடைய கடல் வலிமையை நைல், டிரபால்கர் கடற்போர்களில் அழித்தது. (5) அவனுடைய அரசாங்கத்திற்குப் போதிய அளவு நிதி இல்லை.

3. நெப்போலியன் ஒரு போர் வீரர் மட்டுமல்லாமல் ஒரு சிறந்த ஆட்சியாளரும் ஆவார். (1) அவர் கிறிஸ்தவத் திருச்சபைத் தலைவர் போப்பாண்டவரோடு அமைதி உடன்படிக்கை செய்தார். பிரெஞ்சுப் புரட்சியின் போது பிரெஞ்சுக் குடியரசு அரசாங்கம் பிரெஞ்சுக் கத்தோலிக்கத் திருச்சபையின் நிலங்களை எடுத்துக்கொண்டு, அச்சமயக்குருமார்களுக்கு மாத சம்பளம் கொடுக்கப்படுவதற்கு ஏற்பாடு செய்தது. இவ்வேற்பாட்டிற்குச் சமயக்குருமார் அரசியல் சட்டம் (Civil Constitution of the Clergy) என்று பெயர். இதனை போப் ஏற்க மறுத்தார். இப்பொழுது நெப்போலியன் இவ்வேற்பாட்டைத் தள்ளுபடி செய்து, பிரெஞ்சுத் திருச்சபையின் மீது போப்பின் மேலதிகாரத்தை நிறுவினார். போப்பும் நெப்போலியனுடைய அமைதி உடன்பாட்டை ஏற்று, திருச்சபையினின்றும் எடுக்கப்பட்ட நிலங்களை மீட்டல் வேண்டும் என்று கூறாமல், சமயக்குருமார் அரசாங்க ஊதியம் பெறுவதற்கு இசைவு அளித்தார்; கன்கார்டட் (Concordat) எனப்படும் இந்த நல்ல அமைதி உடன்பாட்டினால் நெப்போலியனுக்கும் திருச்சபையின் ஆதரவு கிடைத்தது. (2) நெப்போலியன் நாட்டின் நல்வாழ்வுக்காக ஐந்து பெரிய சட்டத்தொகுப்

புக்களைத் தொகுத்தார். சுதந்திரம், சமத்துவம் ஆகிய கோட்பாடுகளினடிப்படையில் இச்சட்டங்கள் அமைந்திருந்தன, சமய உரிமையும் வழங்கப்பட்டிருந்தது. சொத்து உரிமை போன்ற அரிய தனி வாழ்வு உரிமைகளெல்லாம் இவற்றில் வரையறுக்கப் பட்டிருந்தன. (3) அவர் பிரஞ்சுப் பல்கலைகழகத்தை நிறுவி, பல தொடக்க, உயர்தரப் பள்ளிகளையும் ஏற்படுத்தினர். வாழ்வின் பல்வேறு துறைகளிலும் நாட்டுமக்களுக்குத்தொண்டாற்றிப் புகழ் பெற்ற பிரஞ்சுமக்களைப் பாராட்டும் பொருட்டு அவர் அத்தகையோரடங்கிய மாட்சிமை பொருந்தியோர் கழகம் (Legion of Honour) என ஒன்றை அமைத்தார்.

4. நெப்போலியன் புகழ்மிக்க ஓர் போர்த்தளபதியும், ஆக்கத்திறன்படைத்த ஆட்சியாளரும் ஆவார். அவர் பெற்ற வெற்றிகளெல்லாம் அவரது போர்ப்பண்புகளின் சிறப்பைக் காட்டுகின்றன. போர்த்திறமையில் அவர் பண்டைய கிரீசின் பெரு வீரராகிய அலெக்சாண்டரையும், பண்டையரோமின் பெருவீரனை ஜூலியஸ்சீசரையும் ஒத்து விளங்கினர். அவர் செய்தநல்ல சீர்திருத்தங்கள் அவரைக் குடிகளின் நன்மையைக் கருதும் ஆட்சியாளராகக் காட்டுகின்றன. அவர் செய்த ஆக்கவேலைகளெல்லாம், பிரஞ்சுப் புரட்சியாளருடைய நல்ல கருத்துக்களினடிப்படையில்அமைந்திருந்தனவாகையால்அவரை (Child of the Revolution) "பிரஞ்சுப் புரட்சியின் குழந்தை" என வரலாற்றாசிரியர் குறிப்பிடுவர். அவர் பெற்ற வெற்றிகளெல்லாம் ஐரோப்பிய நாடுகளில் தேசிய உணர்வையும், குடியாட்சி உணர்வையும் விரைவாகத்தோற்றுவித்தன. இவ்வுணர்வுகளே ஐரோப்பிய வரலாற்றின் பத்தொன்பதாம் நூற்றாண்டுப் பகுதியைப் பெருமளவில் உருவாக்கின.

— x —

## 3. வியன்னா மாநாட்டின் அரசியல் ஏற்பாடுகளும், அவை மறைந்ததும்
## (Vienna Settlement)

1 முன்னுரை 2 அரசியல் ஏற்பாடுகளின் அடிப்படையான நோக்கங்கள் 3 அரசியல் ஏற்பாடுகள் 4 அவற்றிலுள்ள குறைகள் 5 ஏற்பாடுகள் மறைந்தமை.

1 1799-ம் ஆண்டு முதல் 1815-ம் ஆண்டுவரை நடைபெற்ற நெப்போலியன் போர்களெல்லாம் முடிவடைந்துவிட்டன. ஆஸ்திரியப் பேரரசின் தலைநகரமான வியன்னாவில், ஐரோப்பிய அரசியல் வல்லுநர்கள் 1815ல் ஓர் மாநாட்டைக் கூட்டினர். நெப்போலியன் விளைத்த போர்களினால் ஐரோப்பிய நாடுகளின் எல்லைகளெல்லாம் பெருமளவு மாறுதலடைந்திருந்தன. அவரைத் தோற்கடிப்பதில் பெரும்பங்கு எடுத்துக்கொண்ட பிரிட்டன், ஆஸ்திரியா, பிரஷ்யா, ரஷ்யா இன்னும் பல நாடுகள் இதில் கலந்துகொண்டன. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அயல்நாட்டுச் செயலாளர் காசல்ரீ பிரபுவும், ரஷ்யசார் முதலாம் அலெக்ஸாண்டரும், ஆஸ்திரிய முதலமைச்சர் மெட்டர்னிக் இளவரசரும் இதில் முக்கியமானவர்கள். மெட்டர்னிக் சிறந்த இராஜதந்திரி ஆவார். இவர்கள் ஐரோப்பிய நாடுகளின் எல்லைகளைத் தங்களுடைய சில நோக்கங்களுக்கு ஏற்ப மீண்டும் வரையறை செய்தனர்.

2 வியன்னா மாநாட்டின் அரசியல் வல்லுநர்கள் தங்களுடைய நலன்களுக்கேற்பவே அரசியல் ஏற்பாடுகளைச் செய்தனர். அவர்கள் பிரெஞ்சுப் புரட்சியின் அடிப்படைக் காரணங்களை நன்கு உணராமல், 'அது அரசனுடைய அதிகாரத்தை எதிர்த்து நடைபெற்ற ஒரு சிறு கலகம்,' என்றே எண்ணினர். எனவே

ஐரோப்பாவில் நெப்போலியன் பல நாடுகளையும் வெல்லுதற்கு முன்னர் இருந்துவந்த அரசுகளின் எல்லைகளையும், எதேச்சாதிகார முடியாட்சி அமைப்புக்களையும் மீண்டும் நிலைநிறுத்தவே முயன்றனர். இத்தகைய பழைய அமைப்பை நிறுவும் போக்கு (Legitimism) பிற்போக்கான, பழைமை நிறைந்த போக்கு ஆகும். சுருங்கச் சொன்னால் வியன்னா மாநாட்டினர் 1 சக்தி சமநிலையை ஐரோப்பாவில் மீண்டும் ஏற்படுத்தவும், 2 பிரஞ்சுப் புரட்சியைப் போன்றதொரு புரட்சி மீண்டும் நடைபெறாமல் தடுக்கவும், 3 தாங்கள் செய்யும் அரசியல் ஏற்பாடுகள் அழிந்துவிடாமல் அவற்றைப் பாதுகாக்க ஒரு நிறுவனத்தை ஏற்படுத்தவும் கருதினர். இந்நோக்கங்களை ஒட்டி அவர்கள் ஐரோப்பிய அரசியற் கேள்விகளைத் தீர்த்துச் சில ஏற்பாடுகளைச் செய்தனர்.

3 (1) பிரான்ஸ் நாட்டுக்கு 1792ம் ஆண்டில் இருந்த எல்லைகளே இப்போது மீண்டும் அளிக்கப்பட்டன. அதற்குப் பின்னர் பிரஞ்சுப் புரட்சி அரசாங்கத்தாலும், நெப்போலியனாலும் சேர்த்துக் கொள்ளப்பட்ட நாடுகளெல்லாம் அதனின்றும் எடுத்துக் கொள்ளப்பட்டன. அந்நாட்டின் அரசியலமைப்பிலும் பழங்கொள்கையே பின்பற்றப்பட்டது. எதேச்சாதிகார முடியாட்சியே பிரஞ்சுப் புரட்சியைத் தோற்றுவித்திருக்கவும், வியன்னா மாநாட்டின் வல்லுநர்கள் அங்கு 1815-ம் ஆண்டில் மீண்டும் முடியாட்சியையே நிறுவினர். பிரஞ்சுப் புரட்சியினரால் கொல்லப்பட்ட பிரஞ்சு அரசர் பதினாறும் லூயியின் தம்பி, பதினெட்டாம் லூயி என அரியணை ஏறினார், அவரும் பிரஞ்சுப் புரட்சியின் பாடங்களை உணராமல் எதேச்சாதிகாரமான ஆட்சி நடத்தி, மீண்டும் புரட்சி தோன்ற வழி செய்தார்.

(2) பிரிட்டனுக்கு பிரான்சிடமிருந்து வடகடலில்

சில தீவுகளும், மத்திய தரைக்கடலில் மால்ட்டாதீவும், டச்சுக்காரரிடமிருந்து தென் ஆப்பிரிக்காவில் நன்னம்பிக்கை முனை நிலப்பகுதியும், மோரிஸ் தீவும், ஆசியாவில் இலங்கைத் தீவும் கிடைத்தன.

(3) பெல்ஜியம் நாடு மறைந்து ஹாலந்து நாட்டோடு இணைக்கப்பட்டு அதன் அரசனுடைய ஆட்சியில் வைக்கப்பட்டது.

(4) நெப்போலியனால் வென்று ஒரே நாடாக இணைக்கப்பட்டிருந்த இத்தாலிய நாடு மீண்டும் முன்பு இருந்த நிலையில் பல நாடுகளாகப் பிரிக்கப்பட்டு, வெவ்வேறு அயல் அரசுகளின் ஆட்சியில் வைக்கப்பட்டது: வெனிசும், லாம்பர்டியும், ஆஸ்திரியாவுக்கும்; பார்மா, மொடினா, டஸ்கனி முதலிய சிறு இத்தாலிய நாடுகள் சுதந்திர ஆஸ்திரியப் பிரபுக்களுக்கும்; நடு இத்தாலியும், ரோமும் போப்புக்கும்; சார்டீனியா இத்தாலியைச் சேர்ந்த ஒரு அரச குடும்பத்துக்கும்; தெற்கு இத்தாலி பிரஞ்சு அரச குடும்பத்தைச் சேர்ந்த ஒருவருக்கும் கொடுக்கப்பட்டன.

(5) ஜெர்மனியும் இத்தாலியைப் போலவே வியன்னா மாநாட்டு அரசியல் வல்லுநரால் ஒரு நாடாக அமைய வாய்ப்புக் கொடுக்கப்படாமல் போயிற்று. நெப்போலியன் ஜெர்மனியில் இருந்த 350 சுதந்திர சிறு அரசுகளையும், சுதந்திர நகரங்களையும் வென்று, அவற்றை 39 அரசுகளும் நகரங்களும் உடையனவாக ஆக்கி, அவற்றைத் தனது தலைமையில் ரைன் ஆற்றின் இணைப்பரசு என அமைத்திருந்தார் (Confederation of the Rhine). வியன்னா அரசியல் வல்லுநர் இந்த அமைப்பை அப்படியே வைத்துக்கொண்டு, அதன் பெயரை ஜெர்மானிய இணைப்பரசு (Germanic Confederation) என மாற்றி, அதன் தலைமையைப் பிரான்சிலிருந்து எடுத்து, ஆஸ்திரியாவுக்குக் கொடுத்துவிட்டனர்.

(6) ஸ்வீடன் நாடும்- நார்வே நாடும் ஸ்வீடன் அரசரின் ஆட்சியில் இருக்குமாறு இணைக்கப்பட்டன. பின்லாந்து அரசு ரஷ்யாவுக்கு அளிக்கப்பட்டது. நெப்போலியன் தோன்றுதற்கு முன்னர் இருந்த ஆஸ்திரியப் பேரரசு. அதன் பழைய எல்லைகளோடு மீண்டும் தோற்றுவிக்கப்பட்டது. எனவே ஆஸ்திரியப் பேரரசில் ஒன்றுக்கொன்று மாறுபட்ட பல தேசீய இனங்களாகிய மாகியார், ஸ்லோவாக்குகள், போலந்தியர், இத்தாலியர் ஆகியோர் வாழ்ந்த நிலப்பகுதிகள் அடங்கி இருந்தன.

(7) இயன்ற வரையில் ஒவ்வொரு நாட்டிலும் முன்பிருந்ததுபோல் எதேச்சாதிகார முடியாட்சி மீண்டும் நிறுவப்பட்டது. பிரான்சில் போர்போன் குடும்பத்தைச் சேர்ந்த பதினெட்டாம் லூயியின் எதேச்சாதிகார முடியாட்சி வந்தது போலவே, ஆஸ்திரியாவிலும் பழைய எதேச்சாதிகார முடியாட்சி தோன்றிற்று. மக்களுக்கு ஆட்சியில் பங்கு இருக்கத்தக்க வகையில் அரசியலமைப்புச் சீர்திருத்தம் எதுவும் கொண்டு வரப்படவில்லை. பிரஷ்யாவிலும் முன்பிருந்த எதேச்சாதிகார முடியாட்சி தொடர்ந்து இருந்தது. நெப்போலியனால் நீக்கப்பட்ட ஸ்பானிய அரசர் ஏழாம் பெர்டினன்ட் இப்பொழுது மீண்டும் அரியணை ஏறினார். அவரும் எதேச்சாதிகாரப் போக்கை உடையவரானார்.

4. வியன்னா அரசியல் ஏற்பாடுகள் பல குறைபாடுகளை உடையன என்பது, அவற்றைக் கடந்தகால நிகழ்ச்சிகளின் வாயிலாகப் பார்த்தால், தெள்ளிதின் புலப்படும். பிரஞ்சுப் புரட்சியாளர் மக்களுக்குச் சுதந்திரமும், சமத்துவமும் கிடைப்பதற்காக முடியாட்சியை எதிர்த்துப் பாட்சி செய்தனர். அப்புரட்சியின் [illegible] வாகத் தோன்றிய நெப்போலியன் தான் செய்த போர்களின் மூலமாகத் தன்னால் வென்று கொள்ளப்பட்ட

நாடுகளிலெல்லாம். அவற்றின் மக்களிடையே தேசியப் பற்று, அல்லது தேசிய உணர்வை (Nationalism) உண்டாக்கியது. அவனுடைய ஆட்சியினின்றும் விடுதலை பெற்றுத் தங்களைச் சுதந்திர அரசுகளாக அமைத்துக்கொள்ள அம்மக்கள் உணர்வுடன் இருந்தனர். இத்தேசிய உணர்வை வியன்னா மாநாட்டு அரசியல் வல்லுநர் சிறிதும் பொருட்படுத்தாமல், மதிக்காமல் பல்வேறு தேசிய இனமக்களை ஒரே அரசாங்கத்தின் கீழ் இருக்கும்படி செய்தனர். இதற்கு ஒரு நல்ல எடுத்துக் காட்டு ஆஸ்திரியப் பேரரசுதான்; அதில் பல தேசிய இன மக்கள் தங்களுடைய விருப்பத்துக்கு மாறாக இணைத்து வைக்கப்பட்டிருந்தனர். இந்த ஏற்பாடுகள் தேசிய உணர்வைப் புறக்கணித்தது போலவே, மக்களிடம் பிரெஞ்சுப் புரட்சியினாலும், நெப்போலியன் போர்களினாலும் தோற்றுவிக்கப்பட்டிருந்த குடியாட்சி உணர்வையும் (Democracy) அறவே புறக்கணித்தன. ஆஸ்திரியா, பிரஷ்யா, ஸ்பெயின், பிரான்ஸ் முதலிய நாடுகளிலெல்லாம் குடிமக்களுக்கு ஆட்சிப்பொறுப்பில் பங்கு ஏதுவும் இல்லாத வகையில், எதேச்சாதிகார அரசர்களின் அரசாங்கங்களே தொடர்ந்து நடைபெறலாயின.

5. இப்பெருங் குறைபாடுகளை உடைய பழைமை அரசியற் போக்கை ஒட்டிய வியன்னா மாநாட்டு அரசியல் ஏற்பாடுகள், 1815-லிருந்து 1871வரை சிறிது சிறிதாக மறைந்துபோயின. பிரான்சில் லூயிக்குப் பின் வந்த எதேச்சாதிகார அரசர் பத்தாம் சார்லசை எதிர்த்து 1830-ல் ஒரு புரட்சியும், அவருக்குப்பின் வந்த லூயி பிலிப்பை எதிர்த்து 1848-ம் ஆண்டில் ஒரு புரட்சியும் நடைபெற்றன. 1848-ல் நெப்போலியனின் தம்பி மகனான லூயி நெப்போலியன் மீண்டும் குடியரசாகிய

பிரான்சின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் 1851-ல் ஒரு திடீர்ப் புரட்சி செய்து, தன்னைப் பேரரசராக ஆக்கிக்கொண்டு, 1871-ம் ஆண்டுவரை அரசராக இருந்தார். அவர் ஜெர்மனியால் தோற்கடிக்கப் பட்ட 1871-ம் ஆண்டில் பிரான்சில் முடியாட்சி நீக்கப் பட்டு, குடியாட்சிக் குடியரசு (Democratic republic) நிறு வப்பட்டது. எதேச்சாதிகார முடியாட்சிகளுக்கு எதிராக வும், குடியாட்சி முறையை விரும்பியும், 1848-ம் ஆண்டில் ஸ்பெயின், பிரஷ்யா, ஆஸ்திரியா ஆகியவற்றின் தலை நகரங்களில் புரட்சிகள் நடைபெற்றன. இவை முதலில் வெற்றி பெறுபவை போலத் தோன்றின. ஆஸ்திரியா வுக்கு நிறைய நாடுகள் கிடைக்கும் வண்ணம் வியன்னு மாநாட்டு அரசியல் ஏற்பாடுகளை வெகு தந்திரமாகச் செய்துவைத்த இளவரசர் மெட்டர்னிக்கே, வியன்னுவை விட்டு இங்கிலாந்து செல்லும்படியாயிற்று. ஆனால் இக்கிளர்ச்சிகள் வெற்ற பெறவில்லை. இத்தாலியில் அதனை விடுவித்து ஒரே இத்தாலிய அரசின் கீழ் இணைப் பதற்காகத் தோன்றிய கிளர்ச்சி அடக்கப்பட்டது. 1830-ம் ஆண்டில் ஒரு வெற்றியான போரை பெல்ஜியம் நடத் தித் தன்னை ஒரு சுதந்திர நாடாக ஆக்கிக் கொண்டது. ஸ்பெயினுக்கும், போர்ச்சுகல்லுக்கும் சொந்தமான தென்னமெரிக்கக் குடியேற்றநாடுகளெல்லாம்பிரிட்டன், ஐக்கிய அமெரிக்கா ஆகிய நாடுகளின் உதவியால் சுதந் திரப் போர்களை நடத்தி, சுதந்திரக் குடியரசுகளாக 1822-ம் ஆண்டில் ஆயின. 1851-லிருந்து 1871-ம் ஆண்டுவரை இத்தாலிய மக்கள் சிறிது சிறிதாக இணைந்து, ஒரே சுதந்திர அரசாக ஆயினர். அதே போல ஜெர்மனியரும் 1865-ம் ஆண்டிலிருந்து 1871-ம் ஆண்டு வரை பிரஷ்யாவின் தலைமையின் கீழ் ஒரே சுதந்திர அரசாக இணைந்தனர். இவ்வாருக வியன்னு அரசியல் ஏற்பாடுகள் பெரும்பாலும் மறைந்துவிட்டன.

# 3. அமெரிக்கக் குடியேற்ற நாடுகளின் வளர்ச்சி

## (1) அமெரிக்க சுதந்திரப் போரும் ஐக்கிய அமெரிக்க நாட்டின் தோற்றமும் (1775 – 1783)

## (War of American Independence and the Rise of the United States of America)

(1) முன்னுரை. (2) அமெரிக்கச் சுதந்திரப்போரின் காரணங்கள். (3) போரின் நிகழ்ச்சிகள். (4) போரின் விளைவுகள்.

1. இன்றைய உலக அரசியல் அரங்கில் ஒரு வல்லரசாக ஐக்கிய அமெரிக்க நாடு விளங்குகிறது. இது இங்கிலாந்துக்கு எதிராக 1775-லிருந்து 1783 வரை நடத்திய ஒரு சுதந்திரப் போரில் வெற்றிபெற்றதன் விளைவாக, ஒரு சுதந்திரக் குடியரசாகத் தொடங்கித் தொழிலிலும் வாணிபத்திலும் வளர்ந்து, அரசியலில் இன்று ஒரு வலிய அரசாக இருக்கின்றது.

2. இங்கிலாந்து 17-ம் நூற்றாண்டில் வட அமெரிக்காவின் கிழக்குக் கரையில் பல குடியேற்ற நாடுகளை சமய, வாணிப நோக்கங்களுக்காக அமைத்ததென்பதை முன்னர்க் கூறினோம். அவற்றுள் 13 முக்கியமானவை; அவையாவன: வெர்ஜீனியா (Virginia) (நிறுவப்பட்ட ஆண்டு 1607), நியூஹாம்ப்ஷையர் (New Hampshire) (1623), மஸ்ஸாச்சூஸெட்ஸ் (Massachussetts) (1628), கன்னக்டிகட் (Connecticut) (1635), ரோட்ஐலண்ட் (Rhode Island) (1636), மேரிலண்ட் (Maryland) (1632), கரோலினா, (Carolina) (1663), (இது வட கரோலினா, தென் கரோலினா எனப்பிரிந்தது) நியூயார்க் (New York), நியூஜெர்ஸி (New Jersey), டிலாவேர் (Delaware) (1667), பென்ஸில்வேனியா (Pennsylvania)

(1640) முதலியனவாம். (1) இந்த ஆங்கிலக் குடியேற்ற நாடுகளெல்லாம் தங்களுடைய தாய்நாடாகிய இங்கிலாந்தின் படை வலிமையைப் பெற்றுத் தங்களைப் பிரான்சிடமிருந்து 1763-ம் ஆண்டுவரை காப்பாற்றிக் கொண்டன. 1756—1763-ல் பிரிட்டனுக்கும் பிரான்சுக்குமிடையே நடந்த ஏழாண்டுப்போரில் பிரான்ஸ் தோல்வியுற்று, கனடா முழுவதும் பிரிட்டன் வசம் வந்துவிடவே, இந்த ஆங்கிலக் குடியேற்ற நாடுகளுக்குப் பிரஞ்சுநாட்டவரிடமிருந்த அச்சம் நீங்கிற்று. எனவே இனி அவைகள் பாதுகாப்புக்காகப் பிரிட்டனைச் சார்ந்திருக்கவேண்டிய கட்டாயம் இல்லை. இச் சூழ்நிலையில் அவை தங்கள் மீதுள்ள ஆங்கில ஆட்சியையும் நீக்கும் எண்ணம் கொண்டன.

(2) மேலும் இந்த ஆங்கிலக் குடியேற்ற நாட்டினரெல்லாம் தங்கள் தாய்நாட்டினரைப் போலவே குடியாட்சி மரபிலேயே வளர்ந்தவராவர். ஆங்கில நாட்டில் குடிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டுக் குடிகளுக்குப் பொறுப்புள்ள பாராளுமன்றக் குடியாட்சி அரசாங்கம் செயல்பட்டு வருவதை அவர்கள் நன்கு மனதில் கொண்டு, அத்தகைய முறையையே தத்தம் நாட்டில் நிறுவியிருந்தனர். ஒவ்வொரு குடியேற்ற நாட்டிலும் தன்னாட்சி (Self Governmant) அமைக்கப்பட்டது; ஒரு சட்ட மன்றமும், ஓர் ஆலோசனை மன்றமும் இருந்தன; ஓர் ஆளுநரும் (governor) இருந்தார். சட்டமன்ற உறுப்பினரெல்லாம் குடியேற்ற நாட்டின் குடிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். சிலவற்றில் ஆளுநரும், ஆலோசனை மன்ற உறுப்பினரும் குடிகளால் தேர்ந்தெடுக்கப்பட்டும், சிலவற்றில் தாய்நாட்டின் அரசாங்கத்தால் அமர்த்தப்பட்டும் வந்தனர். சட்ட மன்றத்தவர் சட்டங்கள் செய்யவும், அரசாங்கச் செலவுக்குப் பணத்தை வாக்கெடுப்பின்

மூலம் வழங்கவும் அதிகாரங்கள் பெற்றிருந்தனர். மொத்தத்தில் குடியேற்ற நாட்டினர் தொழில், வாணிபத் துறைகளில் மட்டுமே தாய்நாட்டின் கட்டுப்பாட்டில் இருந்துவந்தனர். அரசியலில் அவர்கள் சுதந்திரமுடையவராகவே இருந்தனர். இந்த நிலையை அவர்கள் மாற்றி முழுச்சுதந்திரம்பெற வாய்ப்புகள் தோன்றின.

(3) ஏழாண்டுப் போர் முடிந்ததும், தாய்நாடு, தான் முன்பு குடியேற்ற நாடுகளிடம் கையாண்டு வந்த பழைய வாணிபக் கோட்பாட்டை (Old mercantilism) மீண்டும் அமெரிக்காவில் கையாள முயன்றது. தாய்நாடு தனது கப்பல் தொழிலும் (shipping) வாணிபமும் செழிப்பதற்காக, கப்பல் தொழில் சட்டங்களையும் (navigation laws) சுங்கத் தீர்வைச் சட்டங்களையும் செய்து, அவற்றை நெடுங்காலமாகக் கையாண்டு வந்தது. அவற்றின்படி குடியேற்ற நாடுகளிலிருந்து ஏற்றுமதியாகும் பொருள்களெல்லாம் பிரிட்டிஷ் கப்பல்களில்தான் எடுத்துச் செல்லப்படல் வேண்டும். அவற்றில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களெல்லாம் பிரிட்டிஷ் வணிகருக்குத்தான் விற்கப்படுதல் வேண்டும். 1764-ம் ஆண்டில் செய்யப்பட்ட சர்க்கரைச் சட்டம் (Sugar Act) குடியேற்ற நாடுகளில் இறக்குமதியாகும் சர்க்கரைமீதும், ஏற்றுமதியாகும் சில பொருள்களின்மீதும் குடியேற்ற நாட்டினர் தீர்வை செலுத்தவேண்டுமென்று விதித்தது. இவ்வாறு தங்களுடைய தொழிலும், வாணிபமும், தாய்நாட்டின் அரசாங்கத்தால் பெரிதும் நசுக்கப்படுவதைக் குடியேற்ற நாட்டினர் வெறுத்துக் கடுமையாக எதிர்த்தனர்.

(4) சுங்கவரிகளை அரசாங்கத்துக்குச் செலுத்தாமல், தப்புவதற்காகப் பொருட்களைக் கள்ளத்தனமாகக் கடத்திவந்து சேமித்துச் சிலர் வைத்திருந்தனர்; இத்தகைய பொருட்களைக் கண்டுபிடிப்பதற்காக நீதி மன்றங்கள்

அரசாங்க அலுவலருக்கு ஐயப்பாட்டுக்குரிய தனியார் வீடுகளையும், கப்பல்களையும் சோதனை செய்வதற்கு அதிகார ஆணைகளை (Writs of Assistance) வழங்கின.

கடுமையான எதிர்ப்பை உண்டாக்கிற்று.

(5) 1765-ம் ஆண்டில் ஆங்கிலப் பாராளுமன்றம், குடியேற்ற நாடுகளில் பயன்படுத்தப்படும் சட்டப் பத்திரங்களும் (Legal Documents), வெளியீடுகளும், செய்தித் தாள்களும், ரெவின்யு முத்திரை வில்லைகளைக் கொண்டிருத்தல் வேண்டுமென முத்திரைச் சட்டத்தின் மூலம் விதித்தது. இதன்மூலம் ஆங்கில அரசாங்கத்துக்குப் பெருமளவில் வருமானம் கிடைக்குமென எதிர்பார்க்கப்பட்டது. இது குடியேற்ற நாட்டினரிடையே பெருஞ் சீற்றத்தையும், வன்செயலையும் உண்டாக்கிற்று. தங்களுடைய பிரதிநிதிகளங்கிய தங்கள் சட்ட மன்றங்களே தங்களுக்கு வரிவிதிக்கக்கூடும் என்றும் தங்களுக்குப் பிரதிநிதித்துவம் இல்லாத ஆங்கிலப் பாராளுமன்றத்துக்குத் தங்கள்மீது வரிவிதிக்க உரிமை இல்லை எனவும், அவை கூறின. அவற்றின் மன்றங்கள் எதிர்ப்புத் தீர்மானங்களை நிறைவேற்றின. முதல் தடவையாக அவற்றில் பல ஒன்று கூடி, ஆங்கில அரசர் மூன்றாம் ஜார்ஜைத் தங்கள் மீது வரிவிதிக்க வேண்டாமெனக் கேட்டுக்கொண்டன. 1766-ல் முத்திரைச் சட்டம் நீக்கப்பட்டது. எனினும் குடியேற்ற நாடுகளில் வரிவிதிப்பதற்குத் தனக்கு உரிமை உண்டென்று கூறிப் பாராளுமன்றம் ஓர் சட்டம் செய்தது. ஆங்கில அமைச்சரவை குடியேற்ற நாடுகளில் இறக்குமதியாகும் தேயிலை, காகிதம், வண்ணப் பொருள்கள் முதலிய பொருட்களின் மீது சுங்கத் தீர்வையை விதித்தது. குடியேற்ற நாடுகள் வன்மையாக எதிர்க்கவே, தேயிலை மீதுள்ள தீர்வை மட்டும் நீடித்து

விதிக்கப்பட்டது. குடியேற்ற நாட்டினர் வன்செயலில் இறங்கினர். 1773-ல் பாஸ்டன் துறைமுகத்திற்குத் தேயிலையை இறக்கவந்த கப்பலில் அவர்களில் சிலர் ஏறி சுங்கம் கட்டமறுத்து, தேயிலையைக் கடலில் எறிந்து விட்டனர். (இதுவே 'பாஸ்டன் தேநீர் விருந்து' எனப்படும்). இதுபோன்ற செயல் நடவாமல் தடுப்பதற்கும், சுங்கத் தீர்வைகளைக் கட்டும்படிக் கட்டாயம் செய்வதற்கும் பாராளுமன்றம் அவ்வப்போது பல ஆங்கிலப் போர்வீரர்களை அமெரிக்கப் பட்டணங்களில் நிறுத்தும் சட்டத்தைச் (Quartering Act) செய்தது. இந்த நிலையில் போர்தவிர்க்க முடியாததாயிற்று.

அமெரிக்காவைப் பொறுத்த வரையில் ஆங்கிலப் பாராளுமன்றத்தில் எட்மண்ட் பர்க் (Edmund Burke), மூத்த வில்லியம் பிட் (William Pitt the Elder), சார்லஸ் ஜேம்ஸ் பாக்ஸ் (Charles games Fox) முதலியோரெல்லாம் அவற்றின் சுதந்திர உணர்வை மதித்தல் வேண்டுமெனவும், அவற்றைத் தாராளக் கொள்கையோடு நடத்துதல் வேண்டுமெனவும், அவற்றுக்கு ஆதரவாகப் பேசினர். ஆனால் அரசரும், அரசாங்கமும் அவற்றைக் காதில்போட்டுக் கொள்ளவே இல்லை.

3. குடியேற்ற நாட்டினருக்கு நல்ல தலைவர்கள் கிடைத்தனர்; ஜேம்ஸ் ஒட்டிஸ் (James Otis), பாட்ரிக் ஹென்றி (Patrick Henry), சாமுவேல் ஆடம்ஸ் (Samuel Adams), தாமஸ் பெயின் (Thomas Paine) முதலியோர் கிளர்ச்சிகளை நடத்தினர். 13 குடியேற்ற நாட்டினரின் பிரதிநிதிகளும் (Delegates), பிலடெல்பியா (Philadelphia) பட்டணத்தில் கூடித், தங்களுடைய சுதந்திரத்தை நிறுவவும், தாய்நாட்டோடு போரை வெற்றியாக நடத்தவும் ஆவன செய்வதற்குக் கலந்து ஆலோசித்

தனர். ஜார்ஜ் வாஷிங்டன் என்பவர் குடியேற்ற நாட்டுப் படையின் தளபதியாக அமர்த்தப்பட்டார். தாமஸ் ஜெபர்ஸன் (Thomas Jefferson), பெஞ்சமின் பிராங்க்ளின் (Benjamin Franklin) இன்னும் சிலரடங்கிய ஒரு சிறுகுழு குடியேற்ற நாடுகளின் சுதந்திர விளம்பரத்தை (Declaration of Independence) வரைந்தது; அதைக் குடியேற்றநாட்டுப் பிரதிநிதிகளின் கூட்டம் (Congress) ஏற்றுக்கொண்டு, 1776-ல் ஜூலை 4-ஆம் நாள் வெளியிட்டது. அப்போதே ஒவ்வொரு குடியேற்ற நாடும் தனக்கு ஒரு அரசியலமைப்புச் சட்டத்தை வரைந்தது; அதனை ஒட்டிப் பிரதிநிதிகளின் கூட்டம், எல்லாக் குடியேற்ற நாடுகளும் சேர்ந்த இணைப்பரசுக்கு ஒரு அரசியலமைப்புச் சட்டத்தை வரைந்தது.

1777-ல் அமெரிக்கப்படை சாரடோகாவில் (Saratoga) ஆங்கிலப் படையைத் தோற்கடித்து வெற்றியடைந்தது. இதனைக்கண்ட ஆங்கிலேயரின் பழைய பகைவர்களான பிரான்ஸ், ஸ்பெயின், பிரஷ்யா, ஹாலந்து முதலிய நாடுகளெல்லாம் அமெரிக்கருக்கு வெளிப்படையாகப் பொருளுதவியும், படை உதவிகளும் செய்தன. பிரான்சிலிருந்து லபாயட் (Lafayette) என்ற வீரரும், பிரஷ்யாவிலிருந்து வான் ஸ்டுபன் (Von Stuben) என்பவரும் அமெரிக்காவுக்கு வந்து உதவி செய்தனர். 1781-ல் கார்ன்வாலிஸ் என்ற ஆங்கிலத் தளபதி, ஜார்ஜ் வாஷிங்டனிடம் தோற்று, யார்க் டவுனில் (York Town) சரணடைந்தார். 1783-ல் வெர்செயில்ஸ் உடன்படிக்கையின்படி (1) ஐக்கிய அமெரிக்க நாடுகள் என்ற குடியேற்ற நாடுகள் முழுச் சுதந்திரம் அடைந்தன; (2) இங்கிலாந்தை வலிகுன்றச் செய்து, தான் ஏதாவது நாடு பெறவேண்டுமென்ற நோக்கத்தோடு போரில்

குடியேற்ற நாடுகளுக்கு ஆதரவளித்த பிரான்சுக்கு, இங்கிலாந்து மேற்கிந்தியத்தீவுகளில் டுபாகோ (Tobago) வையும், ஆப்பிரிக்காவில் செனிகலையும், கொடுத்தது; (3) இந்நோக்கத்துடன் போரிலிறங்கிய ஸ்பெயினுக்கு இங்கிலாந்து அமெரிக்காவில் பிளாரிடா வையும், மத்திய தரைக் கடலில் மைனார்க்கா தீவையும் கொடுத்தது.

(1) தாய்நாட்டுக்கும் குடியேற்ற நாடுகளுக்கும் இடையேயுள்ள கடலால் அமைந்த நெடுந்தூரமும், (2) ஆங்கிலப் படையினருக்குக் குடியேற்ற நாடுகளின் நில அமைப்பைப்பற்றிச் சரியான அறிவு இல்லாமையும், (3) ஒரே சமயத்தில் இங்கிலாந்து, குடியேற்ற நாடு களிலும், ஐரோப்பாவிலும், இந்தியாவிலும் தனியே இருந்து போரிடவேண்டி வந்ததாலும், (4) அமெரிக்க ருக்கு மற்ற ஐரோப்பிய நாடுகள் உதவி செய்ததும், (5) ஜார்ஜ் வாஷிங்டனின் உயர்தரமான போர்த்திறமும், அமெரிக்கருக்கு வெற்றி கிடைக்கக் காரணமாக இருந்தன.

4. ஐக்கிய அமெரிக்க நாடு சுதந்திரக் குடியரசாக அமைந்தது; நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை தேர்ந் தெடுக்கப்படும் குடியரசுத் தலைவரை நாட்டின் உயர்தர நிருவாக அதிகாரியாக நிறுவி, தேர்ந்தெடுக்கப்பட்ட இரு சட்ட மன்றங்களையும், அரசாங்கச் சட்டங்களை அரசியலமைப்புக்கு ஒத்தனவா எனத் தீர்ப்பளிக்கக் கூடிய ஒரு உயர்தர நீதி மன்றத்தையும் நிறுவி, ஒரு அரசியலமைப்புச் சட்டம் வரையப்பட்டது. இவ்வாறு அது ஒரு கூட்டரசுக் குடியரசாகத் தோன்றியது. (Federal Republic). அமெரிக்கச் சுதந்திரப் புரட்சியில் கலந்துகொண்டு, அமெரிக்காவில் ஆங்கில அரசரின் ஆட்சியை ஒழிக்க உதவிசெய்த பிரஞ்சுப் போர்வீரர்கள்,

தங்கள் நாட்டிலும் முடியாட்சியை ஒழித்து, குடியரசை நிறுவும் பிரஞ்சுப் புரட்சிக்கு ஆயத்தம் செய்தனர். இங்கிலாந்து தான் இழந்த அமெரிக்காவுக்கு ஈடாக, இந்தியாவிலும், மலேயாவிலும், ஆஸ்திரேலியாவிலும் தன் பேரரசை நிறுவிற்று.

— x —

## (2) ஐக்கிய அமெரிக்க நாட்டில் எழுந்த உள்நாட்டுப்போர் (1861-65)

## (Civil War in the U. S. A.)

(1) முன்னுரை (2) ஐக்கிய அமெரிக்காவின் வளர்ச்சியும், உள்நாட்டு போருக்குரிய காரணங்களும், (3) போரின் நிகழ்ச்சிகள், (4) போரின் விளைவுகள், (5) ஆபிரகாம்லிங்கனின் வாழ்க்கைபற்றிய சிறு குறிப்பு.

1. பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் புது உலகத்தில்முதன்முதலாகச்சுதந்திரமாகத் தோன்றியது ஐக்கிய அமெரிக்க நாடு ஆகும். இந்த நாட்டின் வரலாற்றில் 19-ம் நூற்றாண்டின் நடுவில் நடைபெற்ற முக்கியமான நிகழ்ச்சி 1861 முதல் 1865 வரை நடைபெற்ற உள்நாட்டுப் போராகும். இது அமெரிக்காவை சுதந்திரம், குடியாட்சி ஆகிய இரண்டையும் ஆதரிக்கும் நாடாக ஆக்கியமையால், இந்த உள்நாட்டுப்போர் மிக முக்கியமான நிகழ்ச்சியாகக் கருதப்படுகிறது. மேலும் இந்தப்போரை மேற்கூறிய நல்ல இரு விளைவுகளும் உண்டாகும் வண்ணம் வெற்றியாக நடத்தியவர் ஆபிரகாம் லிங்கன் என்பராவார்.

2. இந்தப்போர் ஐக்கிய அமெரிக்காவின் வடக்கத்திய மாகாணங்களுக்கும் (Northern States), தெற்

கத்திய மாகாணங்களுக்கும் இடையே (1) அடிமைமுறை (2) கூட்டரசினின்றும் பிரிந்து செல்லுதல் என்ற இரு கேள்விகளினின்றும் தோன்றியது. இவற்றை விளக்குவோம். வடக்கத்திய மாகாணங்கள் (நியூ ஹாம்ப்ஷயர், மஸ்ஸாச்சூஸெட்ஸ். கன்னெக்டிகட், நியூயார்க், நியூஜெர்ஸி, இண்டியானா, மிச்சிகன், விஸ்கான்ஸின், அயோவா, மின்னசோட்டா, ஒரிகன் நிலப்பகுதி, மாகாணமாக அமைக்கப்படாத நிலப்பகுதி (Unorganised Territory), கலிபோர்னியா) முதலியவை, அடிமை முறையைநீக்கிய சுதந்திர மாகாணங்கள் (Free states). இதற்குமாருகத் தெற்கத்திய மாகாணங்கள் (Southern States) (டெக்ஸாஸ், லூயிஸியானா அர்க்கன்சாஸ், கெண்டுக்கி, மிசிசிபி, மிசௌரி. அலபாமா, டென்னஸி, பிளாரிடா, ஜார்ஜியா, வட, தென்கரோலினுக்கள், மேரிலண்ட், டிலாவேர் முதலியவை) நீக்கிரோக்களை அடிமைவேலையாட்களாக வைத்திருந்தமையின், அவை அடிமை மாகாணங்கள் (Slave States) எனப்பட்டன. புதிய உலகத்தில் குடியேற்ற நாடுகள் நிறுவப்பட்ட காலத்திலிருந்தே, ஆப்பிரிக்காவிலிருந்து பெருவாரியாக நீக்கிரோ மக்கள் அடிமைகளாகப் பிடிக்கப்பட்டு அமெரிக்காவுக்குக் கொண்டுவரப் பட்டனர். தெற்கத்திய மாகாணங்கள் வேளாண்மைத் தொழிலுக்கு ஏற்றவையாக இருந்தன; அங்கு வெப்பமான காலநிலை இருந்தமையால், அங்குள்ள பண்ணைகளின் முதலாளிகளான வெள்ளையருக்கு உடலுழைப்பில் ஈடுபட இயலவில்லை; மிகக் குறைந்த செலவில் நீக்கிரோ அடிமைகளை வைத்துக்கொண்டு, அவர்கள் தங்கள் பண்ணைகளில் பருத்தி, புகையிலை, கரும்பு, நெல் முதலியவற்றைப் பயிரிட்டனர். வெள்ளையரே நிலவுடைமையாளராக இருந்தனர். அவர்கள் எல்லா உரிமைகளையும் பெற்று, அரசியலையும் அரசாங்கத்தையும் தங்கள் கையில் வைத்

திருந்தனர். நீக்கிரோ அடிமைகள் மிகவும் துன்புற்ற ளர். பருத்திக்கு நல்ல கிராக்கி இருந்தமையால், அவற்றைப் பயிரிட இன்றியமையாமலிருந்த நீக்கிரோ அடிமைகளைச் சுதந்திரக்குடிகளாக மாற்ற தெற்கத்தியர் விரும்பவில்லை. எனினும் அடிமைமுறை உலகமெங்கிலும் 1860-ம் ஆண்டு வரை நீக்கப்பட்டுவிட்டது. வாஷிங்டனும், ஜெபர்ஸனும் அடிமை முறையை நீக்க விரும்பினர். 1775லேயே அடிமைமுறையை ஒழிக்கும் இயக்கம் (Abolition Movement) தோன்றிற்று. வில்லியம் லாயிட் காரிசன் அதன் தலைவர். ஹெச். பி. ஸ்டௌவ் என்ற ஆசிரியர் தான் எழுதிய 'Uncle Tom's Cabin' என்ற நூலில் நீக்கிரோ அடிமைகளின் துன்பங்களை நெஞ்சுருக்கும் வண்ணம் எழுதினர். வடக்கத்திய மாகாணங்களில் அடிமை நிலை இல்லை, அவைகள் பருத்தி நெசவு, காலணிசெய்தல்,கம்பளித்தொழில்,எந்திரங்கள், மீன் பிடித்தல், சுரங்கத் தொழில், கப்பல் தொழில், முதலிய தொழில்களில் முன்னேறி, இங்கிலாந்து, ஜெர்மனி, அயர்லாந்து, பிரஷ்யா முதலிய அயல் நாடுகளிலிருந்தும், மக்கள்குடியேறுமளவுக்கு நிறைய வேலை வாய்ப்புக்களை அளித்தன. அவற்றில் அடிமை வேலைமுறை தேவைப் படவில்லை. சுதந்திரக்குடிகளே நிறைந்திருந்தனர். ஆலைத்தொழில் வளர்ந்திருந்தது; 1857-ஆம் ஆண்டில் அமெரிக்க உயர் நீதிமன்றமானது (Supreme Court) அடிமை, வீட்டில் பயன்படும் ஓர் தட்டுமுட்டுச்சாமானைப் போன்றவன், எனவே கூட்டரசில் (Union) சட்டப்படியாக அடிமை முறை நீக்கப்படுதல் முடியாது, என ஓர் தீர்ப்பில் கூறிற்று. இவ்வாறு இருந்தாலும் அடிமை ஒழிப்பு இயக்கம் நாளுக்கு நாள் வலுவடைந்தது.

அடிமை பற்றிய கேள்வியானது, வடக்குத் தெற்கு மாகாணங்களுக்கிடையே வேறொரு முறையிலும் பூசல்

களைக்கிளப்பி விட்டது. நாட்டின் மேற்குப் பகுதியில் சில இடங்கள் மாகாணங்களாக அமைக்கப்படாமல் நிலப்பகுதிகளாக (Territories) இருந்தன. இவை தெற்கிலுமில்லாமல் வடக்கிலுமில்லாமல் இருந்தன. இவற்றை மாகாணங்களாக ஆக்கிக் கூட்டரசில் சேர்த்துக்கொள்ளும்போது, இவற்றை அடிமை மாகாணங்களாகச்சேர்க்க தெற்கு விரும்பிற்று; தெற்கு, வடக்குக்கு இருப்பது போன்ற எண்ணிக்கை தனக்கும் இருத்தல் வேண்டுமென முயன்றது; வடக்கு இதை எதிர்த்தது; புதிய மாகாணங்கள் சுதந்திரமானவையாகத் தன்பக்கம் சேர வேண்டுமென அது விரும்பிற்று.1854-ல் கான்சாஸ் மாகாணம் சுதந்திர மாகாணமாகக் கூட்டரசில் சேர்ந்த போது இப்பூசல் இருந்தது. தெற்கத்தியர் தமக்கு நாட்டின் அரசாங்கத்திலிருந்த செல்வாக்கைக் கையாண்டு அடிமை முறையைப் பரப்ப முயன்றனர்.

(2) உள்நாட்டுப்போருக்கு இரண்டாவது காரணம் கூட்டரசிலிருந்து பிரிந்து செல்லும் உரிமையைத் தெற்கு கோரியதாகும். 1832-ம் ஆண்டிலேயே தெற்கத்திய மாகாணங்களில் மாகாணப்பற்றும், வடக்கில் தேசியப் பற்றும் அரும்பின. தென் கரோலினாவைச் சேர்ந்த ஜான். ஸி. கால்ஹன் (John C. Calhoun) என்பவரே மாகாணங்களின் உரிமைகள் இயக்கத்தின் (States Rights Movement) தலைவர்; இந்த இயக்கத்தின் கருத்து, "ஏதேனும் ஒரு மாகாணத்திற்குத் தனது உரிமைகளைப் பாதுகாத்துக் கொள்வதற்கு வேறு வழி இல்லாவிட்டால், அது கூட்டரசினின்றும் விலகிக் கொள்ள இயலும்" என்பதே ஆகும். இந்தக் கருத்தே மாகாணங்கள் பிரிந்து செல்லும் உரிமையைத் தோற்றுவித்தது. மஸ்ஸாச்சூஸெட்ஸ் ஐச் சேர்ந்த டானியல் வெப்ஸ்டர் (Daniel Webster) என்பவர், பிரிந்து செல்

லும் உரிமையைக் கடுமையாக எதிர்த்து, கூட்டரசு பாதுகாக்கப்படுதல் வேண்டுமென வலியுறுத்தினர். அடிமை முறையைப் பாதுகாப்பதற்காகத் தெற்கு மாகாணங்கள் கூட்டரசினின்றும் தாங்கள் செல்வதற்கு உரிமை உண்டெனக்கூறின. இவ்வாறு அடிமை பற்றிய கேள்வியும், பிரிந்து செல்லும் மாகாண உரிமையும் ஒன்று சேரவும், உள்நாட்டுப் போர் தொடங்கிற்று.

அடிமைமுறையை ஒழிக்கவும், கூட்டரசை பாதுகாக்கவும், குடியரசுக்கட்சி (Republican Party) 1854-ல் தோன்றிற்று. அப்போது நடைபெறவிருந்த குடியரசுத் தலைவர் தேர்தலுக்கு, இக்கட்சி ஆபிரகாம்லிங்கனை வேட்பாளராக நிறுத்தியது. 1861-ம் ஆண்டில் அவர் வெற்றி பெற்றுக், குடியரசுத்தலைவரானர். இவருடைய நோக்கங்கள் அடிமைகளைச் சுதந்திரக்குடிகளாக ஆக்குதல், கூட்டரசினின்றும் எம்மாகாணமும் விலகாமல் பாதுகாத்தல் முதலியவையாகும். இவற்றை இவர் நிறைவேற்று முன்பாக, தென், வடகரோலினு, மிஸிஸிபி பிளாரிடா அலபாமா, ஜார்ஜியா, லூயிஸியானு, டெக்ஸாஸ், வெர் ஜீனியா, அர்க்கன்சாஸ், டென்னஸ்ஸி முதலிய 11 மாகாணங்களும் கூட்டரசினின்றும் பிரிந்து, அமெரிக்க இணையரசு நாட்டை ஏற்படுத்தி, ரிச்மண்ட் நகரத்தைத் தலைநகரமாக ஆக்கிக்கொண்டு, போரைத் தொடங்கின. வடக்கே 23 மாகாணங்கள் லிங்கனுடைய நோக்கங்களை ஆதரித்துத் தெற்கை எதிர்த்து நின்றன. இரண்டுக்கும் நடுவே உள்ளே நான்கு மாகாணங்கள் அடிமை முறையைப் பின்பற்றி இருந்தாலும், (மிசௌரி, கெண்டுக்கி, மேரிலண்ட், டிலாவேர்) அவை போரில் கலந்து கொள்ளவில்லை. எண்ணிக்கையிலும், மக்கள் தொகையிலும், பொருள்வளத்திலும், துறைமுக வசதியிலும்,

கடற்படையிலும், வடக்குதான் தெற்கைவிட வலியதாக இருந்தது. ஆனால் சிறந்த படைத்தளபதிகள் தெற்கில் தான் இருந்தனர், லீ (Lee), ஜாக்ஸன் (Jackson) முதலியோர் தெற்குப் படைகளின் தளபதிகள்; மீட் (Meade) ,கிராண்ட் (Grant) முதலியோர் வடக்குப் படைகளின் தளபதிகள்;

3. 1861-ல் ரிச்மண்டைக் கைப்பற்றச் சென்ற வடக்குப் படையைத் தெற்குப்படை புல்ரன் (Bull Run) களத்தில் தோற்கடித்தது; கூட்டரசு அரசாங்கத்தின் கோட்டையாகிய சம்ட்டர் (Sumter) தெற்கத்தியார் வசமாயிற்று. 1863-ல் தெற்கத்தியார் சான்ஸலர்ஸ் வில்லில் மற்றொரு வெற்றியடைந்தனர். ஜாக்ஸன் இறந்து போனார். தெற்கத்தியத் துறைமுகங்களையெல்லாம் கப்பற்படைகள் முற்றுகையிடும்படி லிங்கன் நடவடிக்கை எடுத்தார். 1862ல், அன்ட்டீட்டம் (Antietam) என்ற போரில் வடக்குப்படை (மீட்டின் தலைமையில்) லீயைத் தோற்கடித்தது. மீட் தெற்குப் படையை கெட்டிஸ்பர்க் போரில் 1863-ல் வென்றார். இது முக்கியமான வெற்றியாகும். லிங்கன் போர்க்களத்தில் குடியாட்சி முறையையும், சுதந்திரத்தையும் ஆதரித்துச் சொற்பொழிவாற்றினார். இதற்கிடையில் தளபதி கிராண்ட் மிஸிஸிபி பகுதியில் தெற்கத்தியர் வசமிருந்த ஹென்றி, டானல்சன் கோட்டைகளைக் கைப்பற்றினார். 1862-ல் லிங்கன் விடுத்த அடிமைகளின் விடுதலை விளம்பரத்தின்படி 1863-ம் ஆண்டிலிருந்து தெற்கத்திய மாகாணங்களிலிருந்த அடிமைகளெல்லாம் சுதந்திரக் குடிகளாக ஆயினர். 1865, ஏப்ரல் 9-ம் நாள் கிராணட்டும் லீயும் அப்போமட்டாக்ஸ் கோர்ட்ஹௌஸ் (Appomattox Court House) என்ற களத்தில் கூடிப் போரை நிறுத்தி அமைதி உடன்படிக்கை செய்தனர்.

4. (1) அடிமை முறையானது ஒழிக்கப்பட்டது. 1865-ம் ஆண்டில் ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசியலமைப்புச் சட்டத்தில் (Constitution) செய்யப்பட்ட 13-வது திருத்தத்தின் விளைவாக அந்நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் அடிமை முறை நீங்கிற்று. (2) கூட்டரசினின்றும் எந்த மாகாணமும் பிரிந்து செல்லாமல், அது ஒரே கூருக இருக்கும் நிலைமை பாதுகாக்கப்பட்டது.

—o—

## ஆபிரகாம்லிங்கன் (1809-1865)

5. உள்நாட்டுப் போரை வெற்றியாக நடத்திய அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஆபிரகாம் லிங்கன் 1809-ம் ஆண்டில் கெண்டுக்கியில் ஓர் ஏழைக் குடும்பத்தில் ஒரு மரப்பலகை வீட்டில் பிறந்தார்; அவர் பள்ளியில் கற்பதற்குப் பொருள் வசதி இல்லை; ஆயினும் அவர் தனக்குக் கிடைத்த நூல்களை யெல்லாம் படித்துத் தனது இயற்கை அறிவை வளர்த்துக்கொண்டு, பிழைப்புக்காக மற்ற சாதாரண மக்களோடு கடுமையாக உழைத்தார்; அவர் இல்லினுய்ஸ் என்ற ஊரில் வாழ்ந்தார். "அவருடைய இளமை வாழ்வின் சூழ்நிலைகளெல்லாம் அவரை சாதாரண மக்களின் நண்பனுகவும், அவர் மீது அவர்களெல்லாம் நீங்காத பற்றுக்கொள்ளவும் செய்தன." அவர் தான் எவ்வாறு எவரிடத்தும் பகை இல்லாமலும், யாரிடத்தும் அருள் உள்ளத்தோடும் வாழ்ந்தாரோ, அவ்வாறே தான் குடியரசுத் தலைவராக வந்தபோதும், நாட்டினர் வாழுமாறு செய்தார். பொறுமையும், விடாமுயற்சியும், நேர்மையும், மக்கட்பற்றும், மிக்க அவர், 1858-ல் செனட்டின் உறுப்பினராக ஆனுர். பொதுவாழ்வில் அவருடைய இரண்டு நோக்கங்களும் யாவராலும் ஆதரிக்கப்பட்டன. அடிமைகளைச் சுதந்திரக் குடிகளாக ஆக்கினுர். கூட்டரசின் ஒற்றுமையைக்

காப்பதே அவருடைய வாழ்வின் தலைசிறந்த நோக்கமாக இருந்தது. 1865-ல் அவர் மீண்டும் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டபோது, அவரை ஒருவன் சுட்டுக் கொன்றுவிட்டான். தனது வாழ்வின் உயர்ந்த நோக்கங்களுக்காகத் தன் உயிரையே ஈந்த உயர்ந்தோராகவும், அமெரிக்காவின் குடியாட்சி முறையைக் காத்தவராகவும், அவர் வரலாற்றில் எந்த உயர்ந்தோரோடும் ஒப்பிடத்தக்கவராகவும் கொள்ளப்படுகிறார்

— x —

## (3) லத்தீன் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளின் சுதந்திரம்
## (Liberation of Latin American Colon.es)

1. முன்னுரை. 2. சுதந்திர இயக்கம் தோன்றுதற்குரிய காரணங்களும் சூழ்நிலைகளும், (3) இயக்கத்தின் தலைவர்கள் ஆற்றிய பணிகள். (4) ஐக்கிய அமெரிக்காவின் உதவி.

1. புதிய உலகமாகிய அமெரிக்கக் கண்டத்தின் வரலாற்றில் 19-ம் நூற்றாண்டில் நடைபெற்ற முக்கிய நிகழ்ச்சிகள். ஒரு சுதந்திர நாடாக ஐக்கிய அமெரிக்க நாடு தோன்றியதும், லத்தீன் அமெரிக்கா என அழைக்கப்படும் தென்னமெரிக்காவில், போர்ச்சுகலுக்கும் ஸ்பெயினுக்கும் சொந்தமாக இருந்த குடியேற்ற நாடுகளில் எல்லாம் 1800-ம் ஆண்டிற்கும் 1825-ம் ஆண்டுக்கும் இடையே சுதந்திர இயக்கங்கள் பல வெற்றியாக நடைபெற்றதுமே ஆகும்.

2. இச்சுதந்திர இயக்கங்களுக்குப் பலகாரணங்கள் இருந்தன. (1) குடியேற்ற நாட்டு மக்கள் மிகவும் கொடுமையாக ஆட்சி செய்யப்பட்டார்கள். பதினாறும் நூற்றாண்டின் தொடக்கத்தில் ஸ்பானியரும், போர்ச்சுக்கல் நாட்டவரும், நடு அமெரிக்காவிலும், தென்

அமெரிக்காவிலும் பல குடியேற்ற நாடுகளை (Colonies) நிறுவினர். இவைகள் ஏறக்குறைய முன்னூறு ஆண்டுகளாக ஸ்பெயின், போர்ச்சுகல் ஆகிய நாடுகளால் ஆளப்பட்டபோதிலும், இவற்றின் ஆட்சியைக் குடியேற்ற நாட்டவர் மிகவும் வெறுத்தனர்; ஏனென்றால் இவர்களுடையஉழைப்பும், செல்வங்களும்ஆள்வோரால் எடுத்துச் செல்லப்பட்டன; குடியேற்ற நாடுகளின் வளமான நிலங்களெல்லாம், தாய்நாடுகளில் (அதாவது ஸ்பெயினிலும் போர்ச்சுகல்லிலும்) பிறந்த பணக்கார நிலமுதலாளிகள் கையில் இருந்தன; அத்தகையோருக்கே குடியேற்றநாடுகளில் அரசியல், சமுதாய உரிமைகளெல்லாம் உண்டு; இதற்கு மாறாகக் குடியேற்ற நாடுகளில் பிறந்த மக்களுக்குச் சொத்தும் இல்லை, உரிமைகளும் இல்லை; அவருள் பலர் அடிமைகளாக்கப் பட்டனர். குடியேற்ற நாடுகள் தாய்நாடுகளோடுதான் வாணிபம் செய்யும்படிக் கட்டாயப் படுத்தப்பட்டன. அவர்களுடைய தொழிலுக்கும், பண்பாட்டுக்கும் தாய் நாடுகளின் அரசாங்கங்கள் ஆதரவு அளிக்கவில்லை. எனவே அயல்நாட்டு ஆட்சியின் மீது வெறுப்பு வளர்ந்தது.

(2) அயல்நாடுகளில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் சிலவும் லத்தீன் அமெரிக்கச் சுதந்திர இயக்கத்துக்குத் துணை செய்தன. 1806-ம் ஆண்டில் நெப்போலியன் ஸ்பெயினில் அரசராக இருந்த பெர்டினன்ட் என்பவரை நீக்கிவிட்டுத்தனது தம்பி ஜோசப்என்பவரை அரசராக்கி, 1808-ம் ஆண்டில் போர்ச்சுக்கல்லையும் தன்வசமாக்கினார். எனவே இவ்விரு நாடுகளிலுமுள்ள மக்கள் தேசிய உணர்வுகொண்டு பிரஞ்சியரைத் தம் நாடுகளிலிருந்து விரட்ட சுதந்திரப் போரிட்டனர். இதுவே இவ்விரு நாடுகளின் லத்தீன் அமெரிக்கக் குடியேற்றநாடுகளில் சுதந்திரத்துக்காக மக்கள் புரட்சி செய்ய ஓர் வாய்ப்பைத்

உண்டாக்கிற்று. குடியேற்றநாட்டு மக்கள் மிக்க வரிச் சுமையால் அல்லலுற்றிருந்தனர். அவர்களில் பலர் சுதந்திர இயக்கங்களைச் சேர்ந்தனர். ஒரு சில குடியேற்ற நாட்டுமக்கள் ஸ்பெயினிடத்தும், போர்ச்சுகல்லிடத்தும் பற்றுறுதியுடன் இருந்தனர்.

(3) ஜான் லாக் (John Locke), ரூஸோ (Rousseau) மாண்டெஸ்க்யு (Montesquieu) போன்ற அரசியல் புலவர்கள் எழுதிய அரசியல் கருத்துக்களெல்லாம் லத்தீன் அமெரிக்கக் குடியேற்ற நாட்டினரால் பெரிதும் விரும்பி வரவேற்கப்பட்டன.

(4) வட அமெரிக்காவில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகள் இங்கிலாந்துக்கு எதிராக 1775 – 1783-ல் நடத்திய விடுதலைப் போர் வெற்றியாக நிறைவேறியதைப் பார்த்துத் தென்னமெரிக்கக் குடியேற்ற நாடுகளிலும் விடுதலை இயக்கத்தை நடத்தும் உணர்ச்சி தோன்றிற்று. பிரஞ்சுப் புரட்சியும் இவர்களுடைய உரிமை உணர்ச்சியைத் தூண்டிற்று. 1801 – 1803-ம் ஆண்டுகளில், லத்தீன் அமெரிக்காவையொட்டிய ஹெய்ட்டி என்ற தீவிலுள்ள நீக்ரோ மக்கள் பிரஞ்சுப்படை வீரருக்கெதிராகச் சுதந்திரக் கலகம் செய்து வெற்றியடைந்தனர். இக்காரணங்களும், சூழ்நிலைகளும் 1809-ம் ஆண்டை ஒட்டி லத்தீன் அமெரிக்கக் குடியேற்ற நாட்டினர் சுதந்திரத்துக்காகப் போரைத் தொடங்கச் செய்தன.

3. லத்தீன் அமெரிக்கச் சுதந்திர இயக்கமானது மூன்று தலைவர்களால் வெற்றியாக நடத்தப்பெற்றது. அவர்கள் மிராண்டா (Miranda) (1750-1816), சைமன் பொலிவார் (Simon Bolivar) (1783-1830), சான் மார்ட்டின் (San Martin) (1778-1850) என்போராவர். சுதந்திர இயக்கத்தைத் தொடக்கி வைத்தவர் பிரான்ஸிஸ்கோடி

மிராண்டா (Francisco de Miranda) என்பவர். இவர் ஸ்பானியகுடியேற்ற நாடாகிய வெனிசுலாவில் (Venezuela) ஸ்பானியப் பெற்ருேர்களுக்குப் பிறந்தவர். இவர் இளமையில் அமெரிக்க விடுதலைப் போரிலும், பிரஞ்சுப் புரட்சியிலும் படைகளில் சேர்ந்து வேலை செய் தார்; இங்கிலாந்திலும், மற்ற சில ஐரோப்பிய நாடு களிலும் பயணம் செய்தார். வெனிசுலாவின் சுதந் திரத்தை நிலைநாட்ட அவர் திட்டமிட்டார். எனவே முதலில் லத்தீன் அமெரிக்கச் சுதந்திர இயக்கம் வெனி சுலாவில் 1810-ம் ஆண்டில் மிராண்டாவின் தலைமையில் தோன்றிற்று. பல தடவை முயற்சி செய்து, அவர் புரட்சியாளர் பலருடைய துணைகொண்டு, வெனி சுலாவை ஆண்ட ஸ்பானிய அரசாங்கத்துக்கு எதி ராக வெனிசுலாவின் தலைநகரமாகிய கரக்காஸ்(Caracas) என்னுமிடத்தில் ஸ்பானிய ஆளுநரை நீக்கிவிட்டு, ஒரு புரட்சி மக்கள் மன்றத்தைக் கூட்டினுர். இது 1811-ல் வெனிசுலாவின் சுதந்திர நிலையை வெளியிட்டது. ஐக்கிய அமெரிக்க நாட்டின் கூட்டரசு அரசியலமைப்பை ஒட்டியும், பிரஞ்சுப் புரட்சியாளரின் மனித உரிமைப் பட்டயத்தை ஒட்டியும் வெனிசுலாவுக்கு ஓர் கூட்டரசு அரசியலமைப்பையும் இம்மன்றம் வெளியிட்டது. ஆனல் மிராண்டா பல புரட்சியாளருடைய எதிர்ப்புக்கு ஆளா னுர். அவர் ஸ்பானிய அரசாங்கத்தால் சிறைபிடிக்கப் பட்டு, ஸ்பெயினுக்கு அனுப்பப்பட்டார். அவர் சிறையில் 1816-ல் இறந்தார். எனினும் அவரே லத்தீன் அமெரிக்கச் சுதந்திரப் புரட்சியைத் தொடங்கியவர்.

அடுத்து மிராண்டாவின் பணியை சைமன் பொலிவர் முழுமையாக நிறைவேற்றி வைத்தார். இவர் கரக்காசில் ஒரு செல்வக் குடும்பத்தில் பிறந்தவர்; ஸ்பெயினில் சட்டக்கல்வி பெற்ருர்; ஐரோப்பாவிலும், யு. எஸ். ஏ. விலும் பயணம் செய்தார். பிரஞ்சுப் புரட்சி தொடங்கிய

போது இவர் பாரிசில் இருந்தார்; தனது நாட்டின் விடுதலைக்காக அரசியல் வல்லுநராகவும், படை வீரராகவும் அயராது உழைத்தார். வெனிசுலாவில் ஒரு படைதிரட்டி 1813-ல் இவர் காரகாஸ் நகரத்தைக் கைப்பற்றினார். இவர் மீண்டும் ஒரு சிறு புரட்சிப்படையைத் திரட்டி, ஸ்பானியப் படையை 1819-ல் பொயாக்கா (Boyaca) என்ற போர்க்களத்தில் வென்றார். சிறப்பான இவ்வெற்றியினால் ஐந்து ஸ்பானிய குடியேற்ற நாடுகள்—வெனிசுலா, கொலம்பியா (Columbia), ஈக்வடார் (Equador) பெரு (Peru) பொலிவியா (Bolivia) முதலியவை முழுச் சுதந்திரம் உள்ள குடியரசு நாடுகளாயின. அவர் வெனிசுலாவின் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். பொலிவியா என்ற நாடு அவருடைய பெயரைத் தாங்கி நிற்கிறது. பல நகரங்களுக்கும் அவருடைய பெயரே கொடுக்கப்பட்டுள்ளது. அவர் 'தென்னமெரிக்காவின் விடுதலையாளர்' (Liberator of South America) எனவும், தென்னமெரிக்காவின் ஜார்ஜ் வாஷிங்டன் (George Washington of South America) எனவும் பாராட்டப்படுகிறார்.

சான் மார்ட்டின் விடுதலைப் பணியைத் தென் அமெரிக்காவின் தென் முனை நாடாகிய அர்ஜென்டைனா (Argentina) விலிருந்து தொடங்கினார். பெரும்புரட்சியாளர் படை ஒன்றைத் திரட்டிப பல ஸ்பானியப் படைகளை 1813-ம் ஆண்டில் சான் லோரென்சோ (San Lorenso) என்ற போரிலும், 1817-ம் ஆண்டில் சாக்கபுகோ (Chacabuco) என்ற போரிலும், 1818-ம் ஆண்டில் மெய்ப்போ (Maipo) என்ற போரிலும் தோற்கடித்துப் பாராட்டத்தக்க வெற்றிகள் பெற்றார். இவ்வெற்றிகளால் அர்ஜென்டைனா, சிலி, பெரு ஆகிய ஸ்பானியக் குடியேற்ற நாடுகள் சுதந்திரம் அடைந்தன.

போர்ச்சுகல்லுக்கு லத்தீன் அமெரிக்காவில் சொந்தமாக இருந்த ஒரே குடியேற்ற நாடாகிய பிரேசில் (Brazil) 1821-ம் ஆண்டில் சுதந்திரம் அடைந்தது. சைமன் பொலிவரின் வெற்றிகளால் நடு அமெரிக்காவில் ஸ்பானியக் குடியேற்ற நாடுகள் சுதந்திரம் பெற்றன; மெக்சிகோ 1822-ல் சுதந்திரம் பெற்றது. நடு அமெரிக்காவிலுள்ள மற்றப் புதிய சுதந்திரக் குடியரசுகள் கோஸ்டடாரிகா, நிகராகுவா, ஹாண்டுராஸ், குவாடமாலா, சால்வடார், பனமா ஆகியவை.

4. ஐக்கிய அமெரிக்காவும் (U. S. A.), பிரிட்டனும் தென்னமெரிக்கச் சுதந்திர இயக்கத்தின் வெற்றிக்குப் பெரிதும் உதவி செய்தன. 1815-ம் ஆண்டின் வியன்னா மாநாட்டின் ஏற்பாட்டை ஒட்டி, அவ்வேற்பாடுகளை நிலை நிறுத்துவதற்காக ஆஸ்திரியா. பிரஷ்யா, ரஷ்யா, இங்கிலாந்து ஆகிய நான்கு நாடுகளடங்கிய ஒரு கூட்டு (Quadruple Alliance) அமைக்கப்பட்டிருந்தது. தேசிய இயக்கங்களை அடக்கி ஒடுக்குவதற்காக இக்கூட்டு தோற்றுவிக்கப்பட்டது. இங்கிலாந்து இக்கூட்டிலிருந்து விலகிவிட்டது. லத்தீன் அமெரிக்காவிலுள்ள ஸ்பானிய, போர்ச்சுக்கீஸியக் குடியேற்ற நாடுகளெல்லாம் சுதந்திரமடைந்ததும். அவற்றை மீட்டு, குடியேற்ற நாடுகளாகத் திரும்பவும் அவற்றுக்கே அளிக்கும் நோக்கத்தோடு, பிரான்சும், ஆஸ்திரியாவும் ஸ்பெயினுக்கும் போர்ச்சுக்கல்லுக்கும் உதவி செய்ய 1822ல் முன் வந்தன. இச்செயலில் தான் எவ்வுதவியும் செய்ய முடியாதென்று பிரிட்டன் மறுத்துவிட்டது; மாறாக அது லத்தீன் நாடுகளின் சுதந்திர உணர்ச்சியை மதித்தது. இதே சமயத்தில்தான் ஐக்கிய அமெரிக்க நாட்டின் (U. S. A.) குடியரசுத் தலைவரான (President) மன்ரோ (Monroe) லத்தீன் அமெரிக்கக் குடியரசு நாடுகளை

எல்லாம் சுதந்திரமும், இறைமையும் உடைய அரசுகள் (independent and Sovereign states) எனக்கூறி ஒப்புதல் அளித்தார். மேலும் அவர் 1823-ம் ஆண்டில் "பழைய உலகத்தில் உள்ள அரசுகள் புதிய உலகத்தின் செயல்களில் தலையிட்டால், அது யு. எஸ். ஏயின் அமைதிக்கும் பாதுகாப்புக்கும் கெடுதியானதாகக் கருதப்படு"மென்றும், "ஐரோப்பிய நாடுகள் அமெரிக்காவில் தலையிடுதல் கூடாது" எனவும் கூறி ஒரு கோட்பாட்டை வகுத்தார். இதுவே மன்றோ கோட்பாடு (Monroe's Doctrine) எனப்படும். இவருடைய கோட்பாடு புதிய தென்னமெரிக்கக் குடியரசுகளின் சுதந்திரத்தின் காவலனாக ஐக்கிய அமெரிக்காவைக் கருதச் செய்தது. ஐரோப்பிய நாடுகள் தலையிடாமலிருந்துவிட்டன. இவ்வாறு சைமன் பொலிவர் போன்ற தலைவர்களின் பணியினாலும், பிரிட்டனும், ஐக்கிய அமெரிக்காவும் உதவி செய்ததனாலும் லத்தீன் அமெரிக்கக் குடியரசுகள் சுதந்திர நாடுகளாயின.

— o —

## 4. ஐரோப்பாவில் தேசியஉணர்வு

### (1) இத்தாலிய இணைப்பு

### (Unification of Italy)

(1) முன்னுரை (2) வியன்னா அரசியல் ஏற்பாட்டில் இத்தாலியின் நிலைமை (3) இணைப்பை ஏற்படுத்துவதில் தலைமை தாங்கிய நால்வர் (4) இணைப்பின் பல்வேறு நிலைகள் (1) லாம்பர்டி (2) டஸ்கனி, மொடினா (3) சிசிலி நேப்பிள்ஸ் (4) போப்பின் நாடு (5) வெனிஸ் (6) ரோம்.

1. பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஐரோப்பிய வரலாற்றிலே குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி என்னவெனில், அது இத்தாலி, ஜெர்மனி ஆகிய இரு வலிமிக்க புதிய தேசிய அரசுகள் (Nation States) தோன்றியதே ஆகும். ஒவ்வொரு மக்கட் சமுதாயமும், மற்றவற்றினின்றும் வேறுபட்டுத் தாம், வரலாறு, இனம், மொழி, சமயம், பொருளியல் முதலிய துறைகளில் ஒன்றுபட்டு, அவ்வொற்றுமை உணர்வின் மூலமாகத் தங்களுக்குத் தாங்கள் வாழும் நிலத்தில் தனி அல்லது சுதந்திர அரசாங்க சட்ட முறைகளை வகுத்துக்கொண்டு வாழ விரும்பும் விருப்பமே நாட்டு அல்லது தேசீய உணர்வு (nationalism) எனப்படும். இத்தகைய உணர்வை அடிப்படையாகக் கொண்டே இக்காலத்தில் உலக அரசுமுறை இயங்குகிறது. இவ்வுணர்வு பிரஞ்சுப் புரட்சியினாலும். நெப்போலியப் போர்களினாலும், ஐரோப்பாவில் ஒரே அரசுமுறையில் வாழ்ந்து வந்த பல இனமக்களிடையே மறைமுகமாகப் பரவிற்று; எனினும் வியன்னா மாநாட்டின் அரசியல் வல்லுநர் தேசிய உணர்வைப் புறக்கணித்துப் பல்வேறு இன மக்களைப் பொதுவான அரசாங்க அமைப்புக்களில் வாழச் செய்தும், கூடிய வரை எதேச்சாதிகார முடியாட்சியை மீண்டும் ஏற்படுத்தியும், சில ஏற்பாடுகளைச் செய்தனர். இவ்வேற்பாட்டின்படி இத்தாலியருக்கும், ஜெர்மனியருக்கும் தங்களுக்கெனத் தங்களுடைய நாட்டில் இணைந்த சுதந்திர அரசுகளை ஏற்படுத்திக்கொள்ள வாய்ப்பு இல்லாமற் போயிற்று. எனினும் 1848-ம் ஆண்டுக்குப்பின் இத்தாலிய மக்கள் தங்களை ஆண்ட பல்வேறு அயல் அரசாங்கங்களை அகற்றிவிட்டுப் படிப்படியாக ஒரு இத்தாலிய அரசரின் அரசாங்கத்தின் கீழ் சுதந்திர அரசாக இணையலாயினர்.

2. 1815-ம் ஆண்டின் வியன்னா அரசியல் ஏற்பாட்டின்படி இத்தாலி நாடு முழுமையும் பல்வேறு அயல்

அரசாங்கங்களுக்கிடையே பங்கிட்டுக்கொள்ளப்பட்டது. வட இத்தாலியில் லாம்பர்டி சமவெளியும், வெனிஸ் மாகாணமும் ஆஸ்திரியப் பேரரசின் நேரடியான ஆட்சியில் வைக்கப்பட்டன; மிகச் சிறிய மாகாணங்களாகிய சவாய் (Savoy), பீட்மாண்ட் (Piedmont) முதலியவை சர்டினியாவை (Sardinia) ஆண்ட இத்தாலிய அரசருக்குக் கொடுக்கப்பட்டன. வட இத்தாலிய மாகாணங்களாகிய டஸ்க்கனி (Tuscany), மோடினு (Modena), பார்மா (Parma) முதலியவை ஒவ்வொன்றும் ஆஸ்திரிய அரசருக்கு உறவினரான ஒவ்வொரு பிரபுவுக்கும் கொடுக்கப்பட்டது. நடு இத்தாலியில் போப்புக்கு ரோம் நகரமும் (Rome), ரோமாக்னு (Romagna), அம்ப்ரியா (Umbria) முதலிய மாகாணங்களும் கொடுக்கப்பட்டன. தெற்கு இத்தாலியில் உள்ள நேப்பிள்ஸ்-சிசிலி அரசு (Kingdom of Naples and Sicily) பிரஞ்சு அரச குடும்பத்தை சேர்ந்த ஒருவருக்குக் கொடுக்கப்பட்டது.

3. இத்தாலிய இணைப்புப் பணியானது சர்டினிய அரசர் இரண்டாம் விக்டர் இம்மானுவல் (Victor Emmanuel II), ஜோசப் மாஸினி (Joseph Mazzini), கவூர் என்ற இத்தாலிய அரசரின் முதலமைச்சர் (Cavour), கரிபால்டி என்ற போர்வீரர் (Garibaldi) ஆகியோரால் வெற்றியாக நிறைவேற்றி வைக்கப்பட்டது. மாசினி இத்தாலிய இளைஞர்களடங்கிய பல கழகங்களைத் தோற்றுவித்து மக்களிடையே ஒற்றுமை உணர்வும், சுதந்திரப்பற்றும் மிகவோங்கச் செய்தார். இத்தாலிய அரசரின் முதலமைச்சரான கவூர் ஆக்கத்திறன்படைத்த சிறந்த அரசியல் வல்லுநர். இத்தாலிய அரசருடைய ஆட்சியின் கீழ் இத்தாலிய நாடு முழுவதையும் இணைத்தல் வேண்டும் என்றஒரே குறிக்கோளை அவர் மனத்தில்

கொண்டு, ஐரோப்பிய அரசியல் சூழ்நிலைகளை இடைவிடாமற் கண்காணித்து, அவற்றைத் தனது நோக்கத்திற்குத் தக்கவாறு பயன்படுத்தி, வாழ்நாள் முழுவதும் உழைத்துவந்தார். இத்தாலிய இணைப்புக்காக பிரிட்டன், பிரான்ஸ் முதலிய நாடுகளின் ஆதரவைப் பெறவேண்டுமென்ற நோக்கத்துடன், அவர் 1854–1856-ம் ஆண்டுகளில் நடைபெற்ற கிரிமியப் போரில் (Crimean War), ருஷ்யாவுக்கெதிராக பிரிட்டன், பிரான்ஸ் ஆகியவற்றுடன் இத்தாலிய அரசரைச் சேரச் செய்தார். மேலும் இதே நோக்கத்தோடு கவூர், 1859-ம் ஆண்டில் பிரஞ்சுப் பேரரசர் மூன்றும் நெப்போலியனுடன் (Napoleon III) விக்டர் இமானுவலை ஒரு உடன்படிக்கை செய்யும்படி ஏற்பாடு செய்தார்; இவ்வுடன்படிக்கையின்படி நெப்போலியன், ஆஸ்திரியரை லாம்பர்டு—வெனிஷியாவினின்றும் விரட்டி, அவைகளை விக்டருக்கு மீட்டுக் கொடுத்தல் வேண்டும்; இதற்குப் பதிலாக விக்டர் சவாய், நைசி (Nice) என்ற இரு சிறு மாகாணங்களை நெப்போலியனுக்குக்கொடுத்தல் வேண்டும். இணைப்பில் போர்முறையை வேண்டுமளவுக்குக் கையாண்டவர் கரிபால்டி என்ற போர்வீரர். இவர் நெப்போலியன் காலத்தில் நடைபெற்ற ஸ்பானியப் போரிலும், தென் னமெரிக்க விடுதலைப் போரிலும் கலந்துகொண்டார்.

4. இணைப்பில் முதற்படி: 1859-ம்ஆண்டின் உடன்படிக்கையை ஒட்டி நெப்போலியன் ஆஸ்திரியருக்கு எதிராக உதவிசெய்யும் பொருட்டுத் தனது படைகளை விக்டருக்கு அனுப்பிவைத்தார். பிரஞ்சு வீரரின் உதவியோடு இத்தாலியர் ஆஸ்திரியப் படைகளை 1859-ல் மெஜண்ட்டா (Magenta), சொல்பெரினோ (Solferino) ஆகிய போர்களில் தோற்கடித்தனர். இத்தாலியர் வலுவடைந்து விடுவரென்ற ஐயங்கொண்ட நெப்போலி

யன், திடீரென்று விக்டருக்குக் கொடுத்த படை உதவியை நிறுத்திவிட்டு, ஆஸ்திரியரோடு, வில்லா பிராங்க்கா (Villafranca) என்றஇடத்தில் போர்நிறுத்த உடன்படிக்கை செய்துகொண்டு விலகிவிட்டார். ஆஸ்திரியா வெனிஷியாவைத் தன் வசம் வைத்துக்கொண்டு லாம்பர்டியை விக்டருக்குக் கொடுத்து. இவ்வாறு இத்தாலிய அரசரின் நேர் ஆட்சியில் வந்த முதல் இத்தாலிய மாகாணம் லாம்பர்டி ஆகும். விக்டர் தான் வாக்களித்தபடி சவாய், நைசி என்னும் இரு மாகாணங்களையும் நெப்போலியனுக்குக் கொடுத்தார்.

(2) இரண்டாம்படி: இவ்வெற்றியைக்கண்ட வட இத்தாலிய மாகாணங்களாகிய டஸ்க்கனி, மொடினு, பார்மா ஆகியவற்றிலுள்ள இத்தாலிய மக்கள், தேசிய உணர்வு தூண்ட தாங்களாகவே கிளர்ந்தெழுந்து, தங்களை ஆண்ட ஆஸ்திரியப் பிரபுக்களை 1859ல் விரட்டிவிட்டு, 1860-ல் ஒரு பொதுக்குடியொப்பம் அல்லது பொது வாக்கெடுப்பின் மூலமாகத் (Plebiscite) தங்களையெல்லாம் விக்டர் இம்மானுவலின் நேரடி ஆட்சியின் கீழ் வைத்துக்கொண்டனர்.

(3) மூன்றாம்படி: அரசர் விக்டருக்காக நேப்பிள்ஸ்–சிசிலி அரசைக் கைப்பற்றுவதற்காகக் கரிபால்டி ஒரு பெரும்படையைத்திரட்டினார். இந்நாட்டிலுள்ள மக்கள் விக்டரின் ஆட்சியில் வர ஆவல் கொண்டிருந்தனர். ஜினோவாவிலிருந்து இவர்களை அழைத்துக்கொண்டு கப்பலில் 1860-ல் கரிபால்டி வந்து சிசிலியின் வட கரையிலுள்ள பட்டணங்களையெல்லாம் மிக எளிதில் கைப்பற்றினார். நேப்பிள்ஸின் அரசர் இரண்டாம் பிரான்சிசின் படையிலுள்ள இத்தாலிய வீரரெல்லாம் போர்க்களத்தில் கரிபால்டியின் பக்கம் சேரவே, கரி

பால்டி மிகக் குறைந்த காலத்தில் சிசிலி முழுவதையும் வென்று, நேப்பிள்ஸிலும் நுழைந்தார்.

(4) நான்காம்படி: கரிபால்டியின் வெற்றியைக் கண்ணுற்ற கவூர் ஒரு பக்கம் மகிழ்ச்சி அடைந்தாலும், கரிபால்டி ஒரு குடியரசுவாதி ஆகையால் (republican), அவர் தான் கைப்பற்றிய சிசிலி நேப்பிள்ஸ் நாட்டை அரசர் விக்டரிடம் ஒப்படைக்க மறுப்பாரோ என ஐயம் கொண்டார். எனவே அவர் ஒரு பெரும்படையுடன் போப்பின் அரசின்மீது படையெடுத்தார். போப்பின் ரோம் நகரத்தைப் பிரஞ்சுப் படைகள் காத்தமையால், கவூரின் வீரர்கள் அதை விட்டுவிட்டுப் போப்பின் படைகளை காஸ்ட்டல் பிடார்டோ (Caste fidardo) என்ற போரில் தோற்கடித்தனர். எனவே கவூரும் வெற்றி வீரர் என்ற சமநிலையில் கரிபால்டியைக் கண்டார். கவூரின் ஐயத்துக்கு மாருக, கரிபால்டி தான் கைப் பற்றிய நாட்டை விக்டரிடம் கொடுத்தார். 1861-ல் கவூர் இறந்தார். அச்சமயத்தில் ரோம் நகரமும், வெனிஷிய மாகாணமும் நீங்கலாக, மற்றெல்லா இத்தாலிய நாடுகளும் இத்தாலிய அரசரின் ஆட்சியின் கீழ் இணைந்து இருந்தன.

(5) ஐந்தாம்படி:- வெனிஷியாவை ஆஸ்திரியா விடமிருந்து மீட்பதற்கு இத்தாலிய அரசருக்கு 1866-ம் ஆண்டில் ஒரு நல்ல வாய்ப்புக் கிட்டிற்று. அவ்வாண்டில் ஜெர்மனிய இணைப்பை ஏற்படுத்திக் கொண்டிருந்த பெயர் பெற்ற ஜெர்மனிய அரசியல் சூழ்வலிமிக்க ஒட்டோ வான் பிஸ்மார்க் (Otto von Bismarck) என்பவர், ஆஸ்திரியாவைத் தோற்கடிக்கும் நோக்கத்துடன், பிரஷ்யா ஆஸ்திரியாவை வட பேற்கில் தாக்கும்போது, இத்தாலி ஆஸ்திரியாவைத் தெற்கில் தாக்கவேண்டுமென்றும், இதற்குப் பதிலாக, போரின்

பிரஷ்யா வெனிஷியாவை ஆஸ்திரியாவிடமிருந்து இத்தாலிக்கு மீட்டுக்கொடுக்குமெனவும் உடன்படிக்கை செய்தார். போரில் பிரஷ்யாவுக்கு உதவியாக இத்தாலி ஆஸ்திரியாவைத் தெற்கில் தாக்கவும், பிஸ்மார்க் எதிர்பார்த்தபடி பிரஷ்யா வெற்றி பெற்றது. பிஸ்மார்க் ஆஸ்திரியாவிடமிருந்து வெனிஷியாவை மீட்டு இத்தாலிய அரசருக்குக் கொடுத்தார்.

(6) ஆறாம்படி: ரோம் நகரம் இத்தாலிய ஆட்சியில் வருவதற்கு 1871-ம் ஆண்டில் வாய்ப்புத் தோன்றிற்று. 1870-71-ம் ஆண்டுகளில் நடைபெற்ற பிராங்கோ ஜெர்மன் போரில், பிரெஞ்சுப் பேரரசர் மூன்றாம் நெப்போலியன் ரோம் நகரத்தைக் காப்பதற்கு அங்கு வைத்திருந்த படைகளைத் திரும்ப வரவழைத்துக் கொள்ளவே, பாதுகாப்பு இன்றி இருந்த ரோம் நகரத்தினுள் விக்டர் இம்மானுவல் தன் படைகளுடன் நுழைந்து, அதனைக் கைப்பற்றிச் சுதந்திர இத்தாலி நாட்டின் தலைநகரமாக்கிக்கொண்டார். போப் இதனை ஏற்றுக்கொள்ள மறுத்தார். போப்புக்குத் தனி அரசரென்ற நிலைமையையும், திருச்சபையின் தலைமையும் ஒப்புக்கொண்டு, அரசர் உடன்படிக்கை செய்ய முன்வந்தார். ஆனால் போப்புக்கள் சவாய் அரசகுடும்பத்தாரை ஒப்புக்கொள்ளாமலே இருந்துவந்தனர். 1929-ம் ஆண்டில் இத்தாலிய சர்வாதிகாரி முஸோலினியின் ஆட்சியில்தான் போப்புக்கள் சவாய் அரசகுடும்பத்தவரை ஒப்புக்கொள்ளவும், போப்புக்கு வாடிகன் நகரப் பகுதியில் ஒரு சுதந்திர அரசருக்குரிய நிலைமையும், உரிமைகளும் இருக்கவும், உடன்படிக்கை செய்யப்பட்டது.

இவ்வாறு இத்தாலி ஒரே சுதந்திர நாடாக இணைந்தது. இவ்விணைப்புக்கு மாசினியின் தொண்டும், விக்டரின் தலைமையும், கவூரின் ஆக்கத்திறன் கொண்ட

அரசியல் சூழ்வலியும், கரிபால்டியின் வீரமும் துணை செய்தன. பண்டைய ரோமானியப் பேரரசில் இருந்ததைப்போல, மீண்டும், ரோம் நகரம் இத்தாலிய நாட்டின் தலைநகரமாக இயங்கி வரலாயிற்று.

— x —

## (2) ஜெர்மனிய இணைப்பு
## (Unification of Germany)

1. முன்னுரை 2. வியன்னா மாநாட்டு ஏற்பாட்டில் ஜெர்மனியின் நிலை 3. இணைப்புக்கு ஏற்ற சூழ்நிலைகள் 4. இணைப்பின் பல்வேறுபடிகள்.

1. இத்தாலிய இணைப்பைப் போல ஜெர்மனியின் இணைப்பும் பத்தொன்பதாம் நூற்றாண்டின் ஐரோப்பிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சிகளுள் ஒன்று ஆகும். ஜெர்மனியரிடையேயும் நெப்போலியப்போர்களினால் மறைமுகமாக தேசிய உணர்வு கிளர்ந்தோங்கி வளர்ந்தது. எனினும் வியன்னா மாநாட்டு அரசியல் ஏற்பாடுகளில் மூலம் ஜெர்மனிய சுதந்திரத்துக்கோ, இணைப்புக்கோ வாய்ப்புக் கிட்டவில்லை. 1865-ம் ஆண்டிலிருந்து ஆறு ஆண்டுகளுக்குள் ஜெர்மனி நாடு முழுவதும் பிரஷ்யாவின் (Prussia) தலைமையில் ஒரு நாடாக இணைந்தது.

2 ஜெர்மனியும் இத்தாலியைப் போலப் பல சிறு சுதந்திர நாடுகளாகவும், நகரங்களாகவும் பிரிந்து இருந்தது. ஏறக்குறைய 350 சுதந்திர நாடுகளும், நகரங்களும் அதில் இருந்தன. நெப்போலியன் 1806-ல் இந்த எல்லா ஜெர்மன் நாடுகளையும் வென்று அவற்றை யெல்லாம் 39 நாடுகளாகவும், நகரங்களாகவும் இணைத்துக் குறைத்து, அவற்றுக்கு ரைன் ஆற்று இணைப்பரசு

(Confederation of the Rhine) எனப் பெயரிட்டு, அதனைத் தமது தலைமையில் வைத்தார். இவ்விணைப் பரசில் பரம்பரையிலும், இராணுவ வலிமையிலும், செல்வத்திலும் பெரிய நாடாக இருந்தது பிரஷ்யா. 1815-ம் ஆண்டில் கூடிய மாநாட்டு அரசியல் வல்லுநர், நெப்போலியன் ஏற்படுத்திய இணைப்பரசை அப்படியே வைத்துக் கொண்டு, அதற்கு ஜெர்மானிய இணைப்பரசு (Germanic Confederation) என்று பெயரிட்டு, அதை ஆஸ்திரியாவின் தலைமையில் வைத்தனர். எனவே ஜெர்மானிய நாடுகள் விருப்பத்துக்கு மாறாக, ஆஸ்திரியாவின் அரசியல் கட்டுப்பாட்டில் வைக்கப்பட்டிருந்தன.

3. ஜெர்மனி முழுவதையும் பிரஷ்யாவின் தலைமையில் இணைப்பதற்கும், பிரஷ்யாவில் தாராள இயல்புடைய குடியாட்சி முறையை ஏற்படுத்தவும் 1848-ம் ஆண்டில் முயற்சிகள் செய்யப்பட்டன. பிரஷ்ய அரசாங்கமானது தொன்று தொட்டே எதேச்சாதிகார முடியாட்சியாக இருந்து வந்திருப்பதை முன்னரே பார்த்தோம். எனவே 1848-ம் ஆண்டில் பெர்லின் நகரத்தில் அரசியலமைப்புச் சட்டத்தை ஒட்டிய அரசாங்க முறையை ஏற்படுத்த வேண்டுமெனச் சிலர் கிளர்ச்சி செய்தனர். அந்தச் சமயத்தில் ஜெர்மானிய இணைப்பரசிலுள்ள மற்ற நாடுகளும் நகரங்களும் ஒன்று கூடி, பிரஷ்ய அரசின் தலைமையின் கீழ் ஜெர்மனி முழுவதற்கும் ஒரு பொதுவான அரசாங்கத்தை ஏற்படுத்தவும், பிரஷ்ய அரசருக்கு ஜெர்மனியப் பேரரசர் என்ற நிலையைக் கொடுக்கவும் தீர்மானித்தன. ஆனால் பிரஷ்ய அரசர் தனக்கு அளிக்கப்பட்ட ஜெர்மன் பேரரசர் என்ற பட்டத்தை ஏற்க மறுத்து விட்டார். மேலும், குடியாட்சி முறைக்கான சீர்திருத்தங்களைக் கோரி கிளர்ச்சி செய்தவர்களையெல்லாம் வியன்னா முதலிய இடங்களில் ஒடுக்கப்

பட்டதைக் கண்ட பிரஷ்ய அரசர், பெர்லினிலும் இக் கிளர்ச்சியை அடக்கி விட்டுத் தனது எதேச்சாதிகார ஆட்சியைத் தொடர்ந்தார். ஆஸ்திரியாவும் துணிந்து எல்லா ஜெர்மன் நாடுகளின் மீதும் தனக் குள்ள அரசியல் தலைமையை (Political leadership) மீண்டும் நிலைநாட்டிற்று; பிரஷ்யா ஆஸ்திரியாவுக்கெதி ராக ஒன்றும் செய்ய இயலாமல் பணிந்தது. ஆகையால் இந்நிகழ்ச்சிகளிலிருந்து ஜெர்மனிய இணைப்பானது அமைதியான அரசியலமைப்புச்சட்டத்தை ஒட்டிய வ ல் ஏற்பட முடியாது என்பதும், ஆஸ்திரியாவை ஜெர்மனியத் தலைமையினின்றும் நீக்குவதற்கும், ஜெர் மனியைப் பிரஷ்யாவின் தலைமையில் இணைப்பதற்கும், முற்றிலும் வேறான கொள்கைகளும, வேறான ஆயுதங் களும் வகுக்கப்படுதல் வேண்டுமென்பதும் தெளிவாயின.

3. பிரஷ்யாவின் தலைமையில் ஜெர்மனி வதற்கு ஏற்ற நல்ல சூழ்நிலைகள் இருந்தன. (1) ஜெர் மனியிலேயே மிகச் சிறந்த படை பிரஷ்யாவில்தான் இருந்தது. வயது வந்தோர் எல்லோருக்கும் கட்டாய இராணுவப் பயிற்சி அரசாங்கத்தால் அளிக்கப்பட்டது. போர்வீரர்களுக்குப் புதிய போர்க் கருவிகளை ஆளும் முறையில் திறமிக்க படைத்தளபதிகளால் நல்லபயிற்சி கொடுக்கப்பட்டது. மிகச்சிறந்த பிரஷ்யத் தளபதிகளான ரூவன் (Roon), மோல்ட்க் (Moltke) முதலியோர் பிரஷ்யாவின் படைவலிமையைப் பெருக்கினர். மேலும் இக் காலத்திய போக்குவரவு சாதனங்களும், செய்திச் சாதனங்களும் முதன்முதலாக இராணுவக் காரியங் களுக்காக பிரஷ்யாவில் கையாளப்பட்டன. இரயில் வேயும், தந்தி நிறுவனமும் முதன்முதல் பிரஷ்யாவில் இராணுவத்தினருக்கு உதவியாகக் கையாளப்பட்டன. (2) பிரஷ்யாவில் நல்ல கல்விப் பயிற்சி முறையும் பரவி

இருந்தது. அதன்மூலம் பெரும்பாலான மக்கட்குத் தம் நிலைமையை உணரவும், தேசிய உணர்வைப் பெருக்கவும் வழிஉண்டாயிற்று. (3) பொருளியல் துறையில் அல்லது வாணிபத்துறையில் எல்லா 39 ஜெர்மன் நாடுகளுக் கிடையிலும் ஒற்றுமை தோன்றிற்று. இந்நாடுகளெல் லாம், வாணிபப் பொருட்களை அனுப்பும்பொழுது, அவற் றின்மீது சுங்கத்தீர்வை விதிப்பது இல்லை எனத் தீர்மானித்துத் தமக்குள் பல பொருளியல் அல்லது சுங்கக் கூட்டுக்களை (Customs Unions or Zollvereins) ஏற்படுத்திக் கொண்டன. இவை இக்கூட்டுக்களில் ஆஸ்திரியாவைச் சேர்க்காமல் நீக்கிவிட்டன என்பது இங்கு கவனிக்கத்தக்கது. பொருளியல் துறையில் இவ்வாறு ஜெர்மனிய நாடுகளுக்குள் ஏற்பட்ட இணைப்பு, அரசியலிலும் இணைப்பை ஏற்படுத்த எளிதில் வழி வகுத்தது. (4) ஜெர்மனிய இணைப்புக்குப் படைவலி இருந்ததைப் போல அரசியல் சூழ்வலியும் அல்லது இராஜதந்திரமும் (diplomacy) ஒட்டோ வான் பிஸ்மார்க் (Otto Von Bismarck) என்பவரின் மூலம் கிடைத்தது. இவர் 1815 முதல் 1898 வரை வாழ்ந்த ஓர் உயர்குடிச் செல்வர். இவருக்குத் தாராள இயல்புடையதும், அரசிய லமைப்பை ஒட்டியதுமான சொற்போர் செய்தல் (debates), ஆய்வு செய்தல் (discussion), வாக்கெடுப்பு நடத்துதல் (Voting) முதலிய குடியாட்சி முறைகளில் அறவே நம்பிக்கை கிடையாது; அவர், ஜெர்மனிய இணைப்பு பிரஷ்யாவின் தலைமையில் வலுக்கட்டாயமான முறையில்தான் ஏற்பட முடியுமெனவும், அமைதியான பாராளுமன்ற முறைகளினால் அது ஏற்படவே முடியா தெனவும் உறுதியாக நம்பினார். இவர் படைவலியைக் காட்டித் தந்திர முறைகளில் ஜெர்மனிய இணைப்பை நிறைவேற்றி வைத்தாராகையால், இவர் கையாண்ட கொள்கை வன்மைக் கோட்பாடு அல்லது "குருதியும்

இரும்புமாகிய கோட்பாடு" (Policy of Blood and Iron) என்று வரலாற்றாசிரியரால் குறிப்பிடப்படும். இவர் பிரஷ்ய அரசர் முதலாம் வில்லியத்துக்கு உறுதுணையாக இருந்தார். 1862-ல் அவர் அரசருடைய முதலமைச்சராக அமர்த்தப்பட்டார். இவரும் எதேச்சாதிகார ஆட்சி முறையை ஆதரித்தார்.

4. இணைப்பின் முதற்படி: பிஸ்மார்க் ஆஸ்திரியாவை ஜெர்மனிய இணைப்பரசுத் தலைமையிலிருந்து வலுக்கட்டாயமாக நீக்குவதற்காக மிகத் தந்திரமாகத் திட்டங்களை வகுத்தார். முதற்படியாக அவர் ஜெர்மனிக்குச் சொந்தமாக இருந்த ஷ்லெஸ்விக் (Schleswig), ஹோல்ஸ்டீன் (Holstein) என்ற இரண்டு மாகாணங்களை டென்மார்க்கிடமிருந்து எடுத்துக்கொள்ளத் திட்டமிட்டார். இவை இரண்டும் ஜெர்மன் மாகாணங்களாயினும், டென்மார்க் அரசருடைய ஆட்சியில் இருந்து வந்தன. பிஸ்மார்க் 1865-ம் ஆண்டில் இவை இரண்டையும், பிரஷ்யாவுக்குத் தலைமையாகிய ஆஸ்திரியாவைக் கலந்துகொள்ளாமலே கைப்பற்றி, அவற்றைப் பிரஷ்யாவோடு இணைத்து விட்டார்.

இரண்டாம் படி: ஆஸ்திரியா இவ்வாறு பிரஷ்யாவினால் புறக்கணிக்கப் பட்டதை அது விரும்பவில்லை. பிரஷ்யா ஷ்லெஸ்விக்கையும், ஹோல்ஸ்டீனையும் இணைத்ததை ஆஸ்திரியா எதிர்த்து, அவற்றுக்கு ஈடாக சைலீஷியா மாகாணத்தைத் தன்னிடம் கொடுக்கும்படி, பிரஷ்யாவைக் கேட்டது. பிஸ்மார்க் இவற்றை ஏற்றுக்கொள்ளவில்லை; அவர் ஆஸ்திரியாவோடும், ஜெர்மனியிலுள்ள மற்ற நாடுகளோடும் போரிட்டு, பிரஷ்யாவுக்கு ஜெர்மனியின் தலைமை நிலையைத் தேடுவதற்குத் திட்டமிட்டார். இத்தாலியின் ஆதரவை அவர் பெற்றார். ஆஸ்திரியாவின் பக்கம் பவேரியா (Bavaria), சாக்சனி

(Saxony), ஹனேவர் (Hanover), ஆகியவையும், சிறிய ஜெர்மன் நாடுகளும் சேர்ந்தன. போர் 1866-ல் ஏழுவாரங்கள் நடந்தது. மோல்ட்க் என்ற பிரஷ்யத்தளபதி தந்தி முறைகளைக் கையாண்டும், இரயில்களைப் பயன்படுத்தியும் வெகுவிரைவில் போர்களை நடத்தினர், ஹனேவரின் படை தோற்றது. 1866 ஜூலை மாதத்தில் ஆஸ்திரியப் படை பிரஷ்யப் படையினுல் சடோவா அல்லது கோனிக்ராட்ஸ் (Sadova or Konigratz) போரில் தோற்கடிக்கப்பட்டது. பிரேக் உடன்பாட்டின்படி (Prague), ஆஸ்திரியாவுக்கு ஜெர்மனியின் மீதுள்ள அரசியல் தலைமை நீக்கப்பட்டது. வடஜெர்மனிய மாகாணங்களாகிய ஹனேவர், ஹெஸ்ஸி (Hesse), ஹாம்பர்க் (Hamburg), பிரெமன் (Bremen), லியூபெக் (Lubeck), கஸெல் (Cassal) முதலியவையெல்லாம் பிரஷ்யாவோடு இணைக்கப்பட்டன; இவையும் பிரஷ்யாவும் சேர்ந்து வட ஜெர்மனிய இணைப்பாக (North German Confederation) என பிஸ்மார்க்கினுல் ஆக்கப்பட்டன. பிஸ்மார்க் சான்ஸலர் (Chancellor) என்ற உயர்தர நிர்வாக அமைச்சராகஅமர்த்தப்பட்டார். எல்லா அமைச்சர்களும் அவருக்குக் கீழ்ப்பட்டிருந்தனர். அவர்களோ, பிஸ்மார்க்கோ சட்டமன்றத்துக்குப் பொறுப்பின்றி இருந்தனர். பிஸ்மார்க் அரசருக்கு மட்டுமே பொறுப்போடிருந்தார்.

(3) மூன்ரும்படி: பிராங்கோ ஜெர்மனியப் போர் (1870-71):- பிரஷ்யாவின் தலைமையில் ஜெர்மனிய இணைப்பு பிராங்கோ – ஜெர்மனியப் போரின் மூலம் முழுமையாக ஆயிற்று. இப்போருக்குக் காரணம், ஆஸ்திரியாவைத் தோற்கடித்துப் பிரஷ்யா ஜெர்மனியில் தலைமை நிலையை அடைந்தது போல, பிரான்சைத் தோற்கடித்துப் பிரஷ்யாவின் தலைமையில் ஜெர்மனியப்

பேரரசைத் தோற்றுவிக்க வேண்டுமென்று பிஸ்மார்க் கொண்டிருந்த நோக்கமே ஆகும். (1) பிரஞ்சு அரசர் மூன்றும் நெப்போலியன் தனது அரச நிலைக்குப் பிரான்சில் ஆதரவு தேடுவதற்காக, ஏதேனும் ஒரு வெற்றியான போரில் ஈடுபட விரும்பினார். அவர் தெற்கு ஜெர்மன் நாடுகளாகிய பவேரியா, உர்ட்டம்பர்க் (Wurtemburg), பேடன் (Baden) முதலியவை கத்தோலிக்க நாடுகளாகவும், வட ஜெர்மனிய பிராடஸ்ட்ண்ட் நாடாகிய பிரஷ்யாவுடன் பெரும்பாலும் மாறுபட்டும் இருந்ததைக் கண்டு, அவற்றுக்கும் பிரான்சுக்கும் இடையே நட்பு உடன்படிக்கையை ஏற்படுத்தமுயன்றார். எல்லா ஜெர்மனிய நாடுகளையும் பிரஷ்யாவோடு இணைக்கத் திட்டம் செய்துகொண்டிருந்த பிஸ்மார்க், நெப்போலியனுடைய முயற்சியை வெறுத்தார். அவர் அதே சமயத்தில் தெற்கு ஜெர்மனிய நாடுகளுக்கு பிரஷ்யா மீது இருந்த பகைமை உணர்ச்சி நீங்குவதற்காக, ஆஸ்திரியப்போர் முடிந்ததும், அவற்றைப் பிரஷ்யாவோடு இணைக்காமல், அவற்றைச் சுதந்திர நாடுகளாக மதித்தும், அவற்றுக்கு மற்ற ஜெர்மனிய நாடுகளோடு உள்ள பொதுவான தேசிய இன ஒற்றுமையை (common nationality) வற்புறுத்தியும் நடத்தினார். பிஸ்மார்க்கின் இத்தகைய கோட்பாட்டினால், தெற்கு ஜெர்மனிய நாடுகள், சில காலம் கழித்து, பிரஷ்யாவுக்கு எதிராகப் பிரான்ஸ் போர் செய்தால், தாம் பிரஷ்யாவுடன் சேருவதாக இரகசிய உடன்பாடுகளைச் செய்தன. இவ்வாறு நண்பர்களைத் தேடிக்கொண்ட பிஸ்மார்க், மோல்ட்க் என்ற தளபதியுடன் பிரான்ஸைத் தாக்கத் திட்டம் வகுத்தார். (2) ஸ்பானிய அரசுரிமைக்கு ஏற்றவராக லியோபால்ட் ஹோஹன்சோலர்ன் என்பவர் தேர்ந்தெடுக்கப்பட்டார்; இவர் பிரஷ்ய அரசருக்கு உறவினராகையால், இவர் அரசராவதற்கு மூன்றும்

நெப்போலியன் கடும் எதிர்ப்புத் தெரிவித்தார். இவ ருடைய எதிர்ப்பை பிரஷ்ய அரசர் முதலாம் வில்லியம் ஏற்றுக்கொண்டு, தான் லியோபால்டுக்கு ஆதரவு அளிக்கவில்லை என்று கூறினார். ஆனால் நெப்போலியன பின் எந்தக்காலத்திலும், எப்போதும், லியோபால்டுக்கு முதலாம் வில்லியம் ஆதரவு அளித்தல் கூடாது, என வாக்குறுதி கொடுக்குமாறு கேட்டார். வில்லியம் இவ் வாக்குறுதியைக் கொடுக்க மறுத்து, தான் தங்கியிருந்த எம்ஸ் (Ems) என்ற ஊரிலிருந்து பெர்லினிலிருந்த பிஸ்மார்க்குக்கு நடந்தவற்றைத் தந்திமூலம் தெரிவித் தார். பிஸ்மார்க் பிரஷ்ய அரசரைப் பிரஞ்சு அரசர் இகழ்ந்துவிட்டதாகத் தந்தியின் வாசகத்தை மாற்றி வெளியிடவே, ஜெர்மனியர் பிரான்சுக்கு எதிராகப் போர்க்குரல் எழுப்ப, பிரான்சும் போருக்கு விரைந்தது.

பிரஞ்சுப் படைகள் வொர்த் (Worth), என்ற இடத் தில் தோல்வியுற்றன; நெப்போலியன் தோற்று செடான் என்ற இடத்தில் (Sedan) ஜெர்மனியப் படையினரிடம் சரண் அடைந்தார். ஸ்ட்ராஸ்பர்க், மெட்ஸ் (Strasburg, Metz) முதலியவற்றிலும் பிரஷ்யருக்கு வெற்றிகள் கிடைத்தன. பிரான்சில் குடியரசு நிறுவப்பட்டது. 1871-ம் ஆண்டு பிராங்க்பர்ட் உடன்படிக்கையின்படி, (1) ஜெர்மனிக்கு ஸ்ட்ராஸ்பர்க், மெட்ஸ், அல்சேஸ், லொரெய்ன் (Alsace-Lorraine) முதலிய மாகாணங்களை யும், (2) ஒரு பெரும் போர் அபராதத் தொகையையும் பிரான்ஸ் கொடுத்தது. இந்த மாகாணங்களும், பேடன், உர்ட்டம்பர்க், பவேரியா ஆகியவையும் பிரஷ்யாவோடு இணைய, ஜெர்மனியப் பேரரசு தோன்றிற்று. முதலாம் வில்லியம், முதல் ஜெர்மனியப் பேரரசர் அல்லது கெய்ஸர் (Kaiser) என வெர்சேல்ஸ் கண்ணாடி அரண் மனையில் ஒப்புக்கொள்ளப்பட்டார்.

இவ்வாறு ஜெர்மனிய இணைப்பு பிஸ்மார்க்கின் போர்த்திறமிக்க அரசியல் சூழ்வலியால் நிறைவேற்றப் பட்டது.

—x—

## 5. புதிய கண்டங்களாகிய ஆப்பிரிக்காவும் ஆஸ்திரேலியாவும்

### (New Continents of Africa and Australia)

### A. ஆப்பிரிக்கா

1. முன்னுரை. 2. ஆப்பிரிக்காவில் ஐரோப்பியர் குடியேற ஆராய்தல். 3. ஆப்பிரிக்காவை ஐரோப்பியர் பங்கிட்டுக்கொள்ளுதல். 4. எகிப்தில் பிரிட்டிஷார் 5. தென்னாப்பிரிக்காவில் டச்சுக்காரரும் பிரிட்டிஷாரும்.

1. ஆப்பிரிக்காக் கண்டமானது நெடுங்காலமாக மற்ற நாட்டினரால் அறியப்படாமலிருந்து வந்தது; அதன் பூர்வீகக் குடிகள் கறுப்பு நிறத்தினர்; அவர்கள் ஐரோப்பிய நாகரிகத்தைப்பற்றி யாதொன்றும் அறியாம லிருந்து வந்தனர்; எனவே இது ஒரு "இருண்ட கண்டம்" (Dark Continent) எனப்பட்டது. முதன் முதலில் ஐரோப்பியருள் டச்சுக்காரர்கள் தென்னாப்பிரிக் காவின் முனையில் கேப்காலனி (Cape Colony) என்ற குடியேற்றநாட்டைநிறுவி இருந்தனர். அந்த குடியேறி, அங்குள்ள கறுப்புநிறப் பூர்வீகக் குடிகளாகிய ஆப்பிரிக்க மக்களுடைய உதவியால் டச்சுக் குடியானவர் வேளாண் மைத் தொழில் செய்து வந்தனர்; இந்த டச்சுக் குடியானவருக்குப் 'போயர்' (Boers) என்று பெயர். இதைத்தவிர 1830ல் பிரஞ்சுக்காரர் அல்ஜீரியா என்ற வடமேற்கு ஆப்பிரிக்க நாட்டைக் கைப்பற்றினர். இதன்பின்னர் ஏழு ஐரோப்பிய நாடுகள் பல்வேறு

காரணங்களுக்காக ஆப்பிரிக்காவின் பல்வேறு பகுதிகளையும் (எத்தியோப்பியா அல்லது அபிசீனியா என்ற நாட்டையும், லைபீரியா என்ற சுதந்திர நீக்ரோ மக்களால் நிறுவப்பட்ட சிறுநாட்டையும் தவிர), 1880-ம் ஆண்டிலிருந்து 1914-ம் ஆண்டுக்குள்ளாகத் தமக்குள் பங்கிட்டுக்கொண்டனர்.

2. 1884-ம் ஆண்டிலிருந்து ஆப்பிரிக்காவில் தம் பங்கைப் பெறுவதற்குப் பல ஐரோப்பிய நாடுகள் வலிய போட்டியிட்டன. இவ்வாறு ஆப்பிரிக்காவில் அவர்கள் நாடு பிடிப்பதற்குப் பல நோக்கங்கள் இருந்தன; (1) பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பெல்ஜியம், பிரான்சு, ஜெர்மனி முதலிய நாடுகள் தொழிற்புரட்சியின் மூலமாக முன்னேறி வந்தன; அவை தமக்கு வேண்டிய மூலப்பொருள்களைப் பெறவும், தாம் செய்யும் பொருள்களை விற்கவும் குடியேற்ற நாடுகளைச் சந்தைகளாகப் பெற விரும்பின; எனவே ஆப்பிரிக்காவை ஆராய்ச்சி செய்வதற்கு முயற்சிகள் செய்யப்பட்டன. (2) ஐரோப்பிய நாடுகளில் வளர்ந்து வரும் மக்களின் எண்ணிக்கை, அவர்கள் வாழ்வதற்குக் குடியேற்ற நாடுகளை நிறுவும்படி தூண்டிற்று. (3) பிரான்ஸ், இங்கிலாந்து, ஜெர்மனி, இத்தாலி முதலிய தேசிய அரசுகளில் நாட்டுப்பற்று உணர்வு மிகுந்து, மக்கள் குடியேற்ற நாடுகளை நிறுவ விரும்பினர். (4) ஆப்பிரிக்க மக்களை நாகரிக வாழ்வுக்கு உயர்த்தவும், கிறிஸ்தவ சமயத்தை அவர்களிடையே பரப்பவும், ஐரோப்பியர் விரும்பினர். ஆப்பிரிக்காவின் பல்வேறு பகுதிகளில் பல்வேறு காலங்களில் சிலர் ஆராய்ச்சி செய்தனர். பர்ட்டன் என்பவரும், ஸ்பேக் என்பவரும் 1857–1860ல் தங்கனிகா, நியாசா முதலிய ஏரிகளைக் கண்டுபிடித்தனர். பேக்கர்

என்பவர் (1860 - 64ல்) ஆல்பர்ட் ஏரியையும், தாக்டிகல் என்பவர் 1869ல் லிபியப் பாலைவனத்தையும், ஷ்வைன்பர்த் என்பவர் (1862–71ல்) அபிசீனிய, நைல் முகத்துவாரப் பகுதிகளையும் ஆராய்ந்தனர். ஆப்பிரிக்காவை ஆராய்ந்தவருள் முக்கியமானவர் டாக்டர் டேவிட் லிவிங்ஸ்டன் என்ற ஸ்காட்லாந்திய மருத்துவரும், ஸ்டான்லி என்பவருமாவர். லிவிங்ஸ்டன் 1840ல் ஆப்பிரிக்காவுக்கு வந்து, பெக்குவானலாந்தில் நீக்ரோக்களுக்கு மருந்துவப்பணி செய்தார்: சாம்பெசி ஆற்றின் போக்கில் சென்று, விக்டோரியா அருவியையும், காங்கோ ஆற்றின் பிறப்பையும் அவர் ஆராய்ந்து கண்டுபிடித்தார். 1869லிருந்து 1871வரை அவரைப்பற்றி யாதொன்றும் வெளியுலகத்தாருக்கு அறியமுடியவில்லை. பெல்ஜிய அரசர் இரண்டாம் லியோபால்ட் ஸ்டான்லி என்ற ஆராய்ச்சியாளரை காங்கோ பகுதியில் பூர்வீகக் குடிகளுடன் வாணிபத்துக்காக நிலையங்களை நிறுவ வசதி உண்டா, எனக்கண்டுவரும்படி அனுப்பினார். ஸ்டான்லி லிவிங்ஸ்டனைக் கண்டார். ஆனால் லிவிங்ஸ்டன் திரும்ப மறுத்துத் தனது நீக்ரோமக்களுக்காக உழைத்து அங்கேயே இறந்தார். ஸ்டான்லி 1870 லிருந்து 1887 வரை காங்கோ பகுதியை ஆராய்ந்து அதில் வாணிப நிலையங்களை ஏற்படுத்த வசதிகளுள்ளன என்று காட்டினார்.

3. இதனைத் தொடர்ந்து வெகு விரைவில் ஆப்பிரிக்காவில் ஐரோப்பியக் குடியேற்ற நாடுகள் தோன்றின. முதலில் 1885ல் நிறுவப்பட்டது காங்கோ சுதந்திர அரசு என்ற பெல்ஜியக் குடியேற்றநாடு ஆகும்; இங்கு உலோகச் சுரங்கங்களும், ரப்பர், தேக்கு, தந்தம் முதலியனவும் வாணிபப் பெருக்கத்திற்கு வழிவகுத்தன. மற்ற ஐரோப்பிய நாடுகளும் இத்தகைய முயற்சிகளைச்

செய்யவே, 1884 ல் பெர்லினில் கூடிய மாநாடு ஒன்று, அவைகளிடையே மோதலைத் தவிர்த்து, ஒவ்வொரு ஐரோப்பிய நாட்டுக்கும் ஆப்பிரிக்காவில் ஒருபகுதியைக் குடியேற்றத்துக்காக ஒதுக்கிற்று. ஸ்பெயின் ஆப்பிரிக்காவின் வடமேற்குக்கரை ஓரத்தில் சிறு பகுதியைப்பெற்றது; ஜிப்ரால்ட்டருக்கு எதிரேஉள்ள ஆப்பிரிக்கக்கரை ஸ்பெயின் வசமாயிற்று. இத்தாலிநாடு 1870க்குப்பின்னர் செங்கடலைஒட்டிஎரிட்ரியா, சோமாலிலாண்ட் என்றஇரு நாடுகளைப்பெற்றது.அது 1911ல்லிபியாவை வென்றது. ஆப்பிரிக்காவின் தென்பகுதியில் மேற்குக் கடலை ஒட்டிய பகுதியில் அங்கோலா என்ற குடியேற்ற நாட்டையும், கிழக்கில் மொசாம்பிக் என்ற குடியேற்ற நாட்டையும் போர்ச்சுகல் நிறுவிற்று. ஜெர்மனி, அங்கோலாவிற்குத் தெற்கே ஜெர்மன் தென்மேற்கு ஆப்பிரிக்காஎன்ற குடியேற்ற நாட்டையும், கிழக்குக் கரையில் ஜெர்மன் தென் கிழக்கு ஆப்பிரிக்கா என்ற குடியேற்ற நாட்டையும் நிறுவிற்று. பிரான்ஸ் 1830-ல், வட ஆப்பிரிக்காவில் அல்ஜீரியாவைவென்றது;இங்கிலாந்தின்ஆதரவுடன் பிரான்ஸ் 1904-ல் மொராக்கோ நாட்டைத் தன் கட்டுப்பாட்டில் கொண்டுவர முயன்றது; ஆனால் ஜெர்மன் அரசர் இரண்டாம்வில்லியம்மொராக்கோசுல்த்தானுக்குஆதரவு அளிக்கவே, சுல்த்தானின் முயற்சியால் அல்ஜெஸிராஸில் கூடிய ஒரு மாநாடு பிரஞ்சு முயற்சியைத் தவிர்த்தது. 1911-ல் மொராக்கோவின் குடிகள் சிலர் கலகம் செய்யும், பிரான்ஸ் மொராக்கோவில் வாழும் தனது குடிகளைக் காப்பாற்றுவதற்காகத் தனது படையைமொராக்கோவில்வைத்தது. ஜெர்மனி மீண்டும் தலையிட்டது. ஆனால் இங்கிலாந்து பிரான்சுக்கு உதவி செய்யவரவே, நிலைமை நெருக்கடியாகஆயிற்று. ஆனால் மொராக்கோவில் பெரும் பகுதியைப் பிரான்ஸ் கட்டுப்படுத்தவும், ஒரு பகுதியை ஸ்பெயினுக்குக் கொடுக்கவும்

ஜெர்மனி இணங்கவே, நெருக்கடி தவிர்க்கப்பட்டது. 1881-ல் பிரான்ஸ் டியூனிஸ் நாட்டை இணைத்தது. அது சகாரா பாலைவன நிலம் முழுவதையும், 1896-ல் மடகாஸ்கர் தீவையும் தனது ஆதிக்கத்தில் வைத்துக் கொண்டது.

எல்லா ஐரோப்பிய நாட்டினருள்ளும் பிரிட்டிஷா ருக்குத்தான் ஆப்பிரிக்காவின் வளமான பெரும்பகுதி குடியேற்ற நாடுகளாக அமைந்தது. வடமேற்கு ஆப்பிரிக்காவில் நைஜீரியா, காம்பியா, சியரா லியோன், கோல்ட்கோஸ்ட் முதலியவை பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளாயின. வடகிழக்கில் பிரிட்டிஷ்சோமாலிலாண்ட், பிரிட்டிஷ் கிழக்கு ஆப்பிரிக்கா, உகண்டா முதலியவை யும், தென்னாப்பிரிக்க யூனியனும், வடக்கே எகிப்தும், சூடானும் பிரிட்டிஷ் பேரரசின் உறுப்புக்களாக ஆயின. இவற்றில் பிரிட்டிஷ் பேரரசு எகிப்திலும், சூடானிலும் நிறுவப்பட்ட வரலாற்றைக் கீழே சுருக்கமாகக் கூறுவோம்.

4. எகிப்து, முன்பு துருக்கியை ஆண்ட சுல்தான் களின் ஆட்சியில் அடங்கிய ஓர் மாகாணமாக இருந்தது; அதனை ஆண்ட உயர்தர அலுவலருக்கு கெடிவ் என்ற பட்டம் உண்டு. 1833-ல் மெகமட் அலி என்ற அதன் கெடிவ் சுல்தானுக்கு எதிராகக் கலகம் செய்து. சுதந்திர ஆட்சியாளராக ஆயினர். பிரஞ்சு—எகிப்தியக் கூட்டுற வினல், மத்திய தரைக் கடலையும், செங்கடலையும் இணைக்கும் சூயஸ் கால்வாய் தோண்டப்பட்டு, 1869-ல் கப்பல் போக்கு வரவுக்குத் திறந்து விடப்பட்டது. பிரிட்டிஷ் முதலமைச்சர் பெஞ்சமின்டிஸ்ரலி, 1876-ல் சூயஸ் கால்வாய்க் கழகத்தில் கெடிவ் இஸ்மேல் பாஷா வுக்குச் சொந்தமாக இருந்த பங்குகளை பிரிட்டனுக்காக வாங்கினர். இந்தியாவைக் கட்டுப் படுத்துவதற்கு

இன்றியமையாத நீர்வழியாக உள்ள சூயஸில், பிரிட்டிஷாருக்கு அதிகாரம் இருத்தல் வேண்டுமென்று கருதியே டிஸ்ரலி இவ்விதம் செய்தார்; நாளா வட்டத்தில் எகிப்தின்மீது பிரிட்டிஷாருக்குத் தமது ஆட்சியை நிறுவும் வாய்ப்புத் தோன்றிற்று. ஊதாரியான இஸ்மேல்பாஷா தனதுபங்குகளை பிரிட்டிஷாருக்கு விற்றபின்னும்,அவருக்குப்பணம் தேவைப்பட்டது;அவர் பெருவாரியாக பிரான்சு, பிரிட்டிஷ் பாங்குகளில் கடன் வாங்கினர். பிரான்சும்,பிரிட்டனும் எகிப்தின் நிதியாட்சியைக் கண்காணிப்பதற்காக இரு கட்டுப்பாடு முறை (Dual Control) ஒன்றை ஏற்படுத்தின. பிரிட்டன் சர். எவெலின் பாரிங் என்பவரைத் தன் சார்பாக எகிப்தை ஆளும்படி அமர்த்திற்று. இந்த அயல்நாட்டுக் கட்டுப்பாட்டை எதிர்த்த இஸ்மெயில் நீக்கப்பட்டு, டியூபிக் பாஷா கெடிவ் ஆக அமர்த்தப்பட்டார். இப்பொழுது எகிப்தியப் படையில்இருந்த அராபிபாஷா என்ற தளபதியின் தலைமையில் படையினர் கலகம் செய்யவும், அயல்நாட்டினர் தாக்கப்பட்டனர். அராபி பாஷா அலக்சாண்டிரியாவைக் கைப்பற்றிச் சில ஐரோப்பியரைக் கொன்றுர். இந் நிலையில் பிரிட்டன் கேட்டுக்கொண்டும், பிரான்ஸ் எகிப்தில் தலையிட மறுத்தது. எனவே ஒரு பிரிட்டிஷ் கப்பற்படை அலக்சாண்டிரியாவைத் தகர்த்தது; ஒரு பிரிட்டிஷ் படை உல்ஸ்லி என்ற தளபதியின் தலைமையில் அராபி பாஷாவை 1882-ல் டெல் எல் கெபீர் என்ற களத்தில் வென்றது. சர். எவலின் பாரிங் என்ற ஆட்சியாளர் 1884 முதல் 1909 வரை எகிப்து முழுவதிலும் ஆட்சியைச் சீர்திருத்தினர்; அவர் அமைதியை நிலைநாட்டி, வரிவிகிதத்தைக் குறைத்து, இரயில்வே, பாசன வசதிகள் முதலியவற்றை ஏற்படுத்தி, எகிப்தைத் தற்கால நாகரிகமுள்ள ஒரு நாடாக ஆக்கினர். (இவரே குரோமர் பிரபுவாகஆக்கப்பட்டார்).

இவர் நடைமுறையில் ஆட்சியாளராக இருக்க, டியூபிக் பாஷாவை, இங்கிலாந்து எகிப்தின் அரசராக,மதித்தது

எகிப்திற்குச் சொந்தமான தெற்கிலுள்ள சூடான் மாகாணத்தையும் பிரிட்டன் கெடிவின் ஆட்சியில் கொண்டுவந்தது. இங்கு கெடிவின் ஆட்சி சீராக இல்லை. சூடானில் செல்வாக்குள்ள ஒரு முஸ்லீம் தலைவர் தன்னை நபி நாயகத்தின் வழித்தோன்றல் அல்லது மஹ்தி எனக் கூறிக் கொண்டு தனது படையினருடைய உதவியால் கலகம்செய்தார்; இதனை அடக்க முடியாமல், கெடிவ் ஆங்கில முதலமைச்சர் கிளாட்ஸ்டனின் உதவியை நாடினார். கெடிவ் சூடானைக் கைப்பற்றி ஆளக் கூடிய அளவுக்கு வலிமைபெறும் வரை, பிரிட்டிஷாரும், எகிப்தியரும் சூடானை விட்டு விலகுவது நல்லது, என கிளாட்ஸ்டன் எண்ணி, சூடானின் தலைநகரமாகிய கார்ட்டூமிலுள்ள எகிப்தியப் படைகளை விலக்கிக் கொள்ளும்படி, பிரிட்டிஷ் தளபதி சார்ல்ஸ் கார்டனுக்கு ஆணை செய்தார். இதனைப் பல எதேச்சாதிகாரப் போக்குள்ள ஆங்கிலஅமைச்சரும்வெறுத்தனர்.கார்டனும்,அவருடையபடைகளும் கார்ட்டூமில் 1885-ல், மஹ்தியின் படையினரால் கொல்லப்பட்டனர்.எகிப்திய அரசாங்கம் (குரோமர் பிரபுவினாட்சியில்) சூடானுக்குள் இரயில்வே பாதைகளை நிறுவிற்று, கிச்சனர் பிரபு என்ற பிரிட்டிஷ் தளபதி எகிப்தியப் படையைச் சீர்திருத்தி அமைத்து, 1898-ல் ஆம்டுர்மான் (Omdurman) போர்க்களத்தில் மஹ்தியின் படைகளை அழித்தார். சூடான் எகிப்தின் ஆட்சிக்குள் வந்தது. எகிப்தும் இங்கிலாந்தும் சூடானின்மீது தமது இணைப்பரசை (Condominium) ஏற்படுத்தின.

## தென்னாப்பிரிக்காவில் டச்சுக்காரரும்,பிரிட்டிஷாரும்.

5. அண்மைக்காலம் வரையில் காமன் வெல்த்தில் Commonwealth} ஒரு உறுப்பு நாடாக இருந்துவந்த

தென்னாப்பிரிக்க யூனியன், பிரிட்டிஷாருடைய ஆட்சியில் முழுவதும் இந்த நூற்றாண்டின் தொடக்கத்தில் தான் வந்தது. அதுவும் பிரிட்டனுக்கும், தென்னாப்பிரிக்காவிலுள்ள ஆரஞ்ச் சுதந்திர நாடு, டிரான்ஸ்வால் என்ற இரு போயர் குடியரசுகளுக்குமிடையே இரு போர்கள் நடைபெற்ற பின்னரே, பிரிட்டனால் கைப்பற்றப் பட்டது.

கேப் காலனி (Cape Colony) முதலில் டச்சுக்காரர் வசமிருந்தது: நெப்போலியப் போர்களில், அவருக்கு உதவி செய்த ஹாலண்டினிடமிருந்து, இப்போர்கள் முடிந்ததும், 1815-ல் பிரிட்டன், கேப் காலனியைத் தனக்கு எடுத்துக்கொண்டது. அங்கு இருந்த டச்சுக் குடியானவர்களாகிய போயர் (Boers) மக்கள் ஆப்பிரிக்க அடிமைகளின் உதவியால் பயிர்த்தொழில் செய்தனர். முதல் போயர் சண்டை (1881): 1833-ம் ஆண்டில் பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளிலுள்ள அடிமைகளுக்குச் சுதந்திரம் வழங்கி, அவர்களை விடுவிக்கும் சட்டம் ஒன்றை, பிரிட்டிஷ் பாராளுமன்றம் செய்தது. இதன் மூலம் போயர்களுடைய பண்ணைகளில் வேலைசெய்த ஆப்பிரிக்க அடிமைகள் சுதந்திரம் பெற்றனர். இதனால் மலிவான அடிமை உழைப்புத் தங்களுக்குக் கிடைக்காமற் போகவும், போயர்கள் பிரிட்டிஷ் அரசாங்கத்தை வெறுத்தனர். மேலும் தங்களை அடிக்கடி தாக்கி வந்த காபிர்களுடைய (Kaffirs) நாட்டைக் கைப்பற்றாமல், தங்களை அவர்களிடமிருந்து காப்பாற்றாமல், பிரிட்டிஷ் அரசாங்கம் இருப்பதாகக் கருதிய போயர்கள், தங்களுடைய குடும்பங்களோடும், ஆடு, மாடுகளோடும் கேப் காலனியைவிட்டுக் குடிபெயர்ந்து, வடக்கே போய் ஆரஞ்சு சுதந்திர நாடு, டிரான்ஸ்வால் என்ற இரு குடியரசுகளை நிறுவினர். 1647-ல் இந்த இரு

போயர் குடியரசுகளையும் பிரிட்டன் கேப்காலனியோடு இணைத்தது. ஆயினும் 1852 – ல் மீண்டும் டிரான்ஸ்வாலையும், ஆரஞ்சு நாட்டையும் சுதந்திர நாடுகளாக பிரிட்டன் ஒப்புக்கொண்டு, உடன்படிக்கை செய்தது. ஆயினும் போயர்களை மிகவும் வலுவாக சூலூக்கள் என்ற ஆப்பிரிக்கக் குடிகள் அடிக்கடி தாக்கியமையால், பிரிட்டன் தனது கேப்காலனியைப் பாதுகாக்கும் பொருட்டு, இந்த இரு குடியரசுகளையும் கேப்காலனியோடு 1877-ல் மீண்டும் இணைத்தது. இதனைச் செய்யும்படி தூண்டியவர் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியக் கொள்கையினரான பெஞ்சமின் டிஸ்ரேலி ஆவார். பிரிட்டிஷ் படையினாலும் சூலூக்களை அடக்க முடியவில்லை. போயர்கள் பிரிட்டிஷாரை எளிதில் தங்கள் நாட்டினின்றும் அகற்றிவிடக்கூடுமென்று எண்ணினர். அவர்கள் பிரிட்டிஷார் வசமிருந்த நேட்டால் மாகாணத்தின் எல்லையில் ஒரு படையைத் திரட்டி, பிரிட்டிஷ் படையைத் தோற்கடித்து, மஜுபாஹில் என்ற இடத்தையும் கைப்பற்றினர். ஆங்கில அமைச்சர் கிளாட்ஸ்டன், போயர்களுடைய விருப்பத்துக்கு மாறாக அவர்களுடைய குடியரசுகளை இணைக்க விரும்பாததால், அவற்றைச் சுதந்திர நாடுகளாக ஒப்புக்கொண்டார். (1881)

### இரண்டாவது போயர் சண்டை (1899-1902)

காரணங்கள் (1) முதல்போரில் பிரிட்டிஷார் தோற்றதனால், அவர்களை எளிதில் தென்னாப்பிரிக்காவினின்றும் விரட்டித் தங்களுடைய ஆட்சியை நிறுவுதல் கூடுமென்று போயர்கள் எண்ணி முயன்றனர். (2) பிரிட்டிஷ் பேரரசுக் கொள்கையினரான ஸெஸில் ரோட்ஸ் (Cecil Rhodes) (1854–1902) என்பவரும், டிரான்ஸ்வால் குடியரசின் தலைவரான பால்க்ருகர் (Paul Kruger) என்ப

வரும் நேர்மாறான கருத்துக்களை உடையவராய்ப் பல செயல்களைச் செய்யவே, போர் தவிர்க்கமுடியாததாயிற்று. தென்னாப்பிரிக்காவில் பிரிட்டிஷாரையும், போயரையும் ஒரே ஆட்சியில் இணைக்க ரோட்ஸ் விரும்பினார்; அவர் பல வைரச் சுரங்கங்களின் உடைமையாளராவர். டிரான்ஸ்வாலுக்கு வடக்கேயுள்ள நாட்டை பிரிட்டிஷ் ஆட்சியில் கொண்டு வருவதற்காக அவர் ஒரு சொந்த கழகத்தை நிறுவினார். அவருடைய தூண்டுதலின் பேரில் பிரிட்டன் ஆலூரலாண்டை இணைத்து, தந்தி, ரயில் சாதனங்களை விரிவாக்கி, டிரான்ஸ்வாலுக்கு வடக்கேயுள்ள நிலத்தை பிரிட்டிஷ் குடியேற்ற நாடாக ஆக்கிற்று. இது 1895-ல் அவர் பெயரால் ரொடீஷியா என ஆயிற்று. ரோட்ஸ் கேப் மாகாணத்தின் முதலமைச்சராக 1890-ல் ஆயினார். இவ்வாறு இரு போயர் குடியரசுகளின் நாற்புறமும் பிரிட்டிஷ் குடியேற்றநாடுகள் தோன்றியதை போயரும், குருகரும் வெறுத்தனர். அவர்கள் பக்கத்திலுள்ள பிரிட்டிஷ் குடியேற்ற நாடுகளோடு பொதுவான தந்தி, ரயில்வே அமைப்புக்களை ஏற்படுத்த மறுத்தனர். 1889-ல் டிரான்ஸ்வாலில் ஜோஹன்னஸ் பர்க்கில் தங்கச் சுரங்கங்கள் நிறையக் கண்டுபிடிக்கப்பட்டன- எனவே விரைவில் பிரிட்டிஷாரும் மற்றவரும் பெருமளவில் டிரான்ஸ்வாலில் குடியேறித் தங்கம் திரட்ட முயன்றனர். இவர்கள் டிரான்ஸ்வாலின் குடிகளைப் போல் அவ்வரசாங்கத்துக்கு வரி செலுத்தினாலும் அவர்களுக்குக் குடியுரிமை வழங்காமல் அவர்களை 'அயலவர்' (Uitlanders) எனபோயர் அரசாங்கம் கருதிற்று. தங்களுக்கு உரிமை கொடுக்கப்படாமற் போகவே, இவ்வெளிநாட்டவர் போர்க்கருவிகளுதவியால் கிளர்ச்சி செய்ய முயன்றனர். இவர்களுக்கு உதவி செய்வதற்காக, ஸெஸில் ரோட்ஸின் தூண்டுதலின் பேரில், அவருடைய நண்பராகிய டாக்டர் ஜேம்ஸன்

என்பவர், ஒரு சிறுபடையுடன் டிரான்ஸ்வாலுக்குள் வர, போயர்கள் யாவரையும் பிடித்துவிட்டனர். போயர்கள், தங்களுக்குப் போர்க்கருவிகளை ஜெர்மனியிலிருந்து வரவழைத்தும், படையினருக்கு ஜெர்மன் படைத்தளபதிகளால் பயிற்சி கொடுக்கச்செய்தும், போருக்கு ஆயத்தம் செய்தனர். பிரிட்டிஷ் அரசாங்கம் தென்னுப்பிரிக்கா முழுவதிலும் பிரிட்டனின் ஆட்சி உரிமையை வலியுறுத்தி, வெளியாருக்குக் குடியுரிமை வழங்கும்படி போயர் குடியரசைக் கேட்டது; குருகர் மறுத்தார்; 1899-ல் போர் தொடங்கிற்று. டிரான்ஸ்வாலுடன், ஆரஞ்சு நாடும் சேர்ந்தது.

1899-ல் ஸ்டாம்பர்க்கிலும், லேடிஸ்மித், கிம்பர்லி, மேப்கிங் முதலியவற்றிலும் போயர்களால் பிரிட்டிஷ் படைகள் தோற்கடிக்கப்பட்டன; 1900-ல் கிச்சனர் பிரபு பிரிட்டிஷ் தளபதியாக ஆயினுர். அவர் மேற்கூறிய மூன்று இடங்களையும், ஆரஞ்சு நாட்டின் தலைநகரமான ப்ளோம்பான்ட்டினையும், டிரான்ஸ்வாலின் தலைநகரமான பிரிடோரியாவையும் கைப்பற்றினுர். 1902-ல் வெரீனிகிங் உடன்பாட்டின்படி இரு போயர்குடியரசுகளும் தங்கள் சுதந்திரத்தைக் கைவிட்டு, நேட்டால், கேப்மாகாணம் ஆகிய பிரிட்டிஷ் மாகாணங்களோடு இணைந்தன. 1909-ம் ஆண்டுச் சட்டத்தின்படி இந்த நான்கு மாகாணங்கள் ஒவ்வொன்றுக்கும் மாகாண சுய ஆட்சியும், நான்கும் சேர்ந்த அமைப்புக்குச் சுய ஆட்சியும் வழங்கப்பட்டன.

## B. ஆஸ்திரேலியா

(1) முன்னுரை, (2) ஆஸ்திரேலியா பிரிட்டனின் குடியேற்ற நாடாக ஆதல் (3) அதற்குத் தொடக்கத்திலிருந்த சில சிக்கல்கள் (4) உலக நாடுகளிடையே ஆஸ்திரேலியாவின் நிலை.

1 இப்பொழுது காமன்வெல்த் கழகத்தில் ஓர் நாடாக ஆஸ்திரேலியா இருந்து வருகிறது. இதனை 1642-ல் டாஸ்மன் என்பவரும், 1688-ல் வில்லியம் டாம்பியர் என்ற ஆங்கிலேயரும் கண்டனர். ஆனால் 1770-ம் ஆண்டில் கேப்டன் ஜேம்ஸ் குக் என்பவர் ஆஸ்திரேலியாவுக்கு வந்து, அதன் வடகரைப் பகுதியையும், கிழக்குக் கரைப்பகுதியையும் ஆராய்ந்து, அங்கு ஆங்கிலக் கொடியை நட்டபின்னரே, ஆஸ்திரேலியா பிரிட்டிஷார் வசமாயிற்று.

2 முதலில் ஆஸ்திரேலியா பிரிட்டிஷார் குடியேற்றத்துக்குரிய நாடாகவே கருதப்படவில்லை. 1838-ம் ஆண்டுவரை தீவாந்தர ஆயுள் தண்டனை பெற்ற குற்றவாளிகளுக்குச் சிறைக்கூடமாகவே இந்நாடு பயன்பட்டுவந்தது. முதன் முதலில் 1788ல் நியூ சௌத் வேல்ஸ் தான், குற்றவாளிகளைச் சிறை வைக்கும் குடியேற்ற மாகாணமாக நிறுவப் பட்டது. 1839-ம் ஆண்டு தீவாந்தர தண்டனைமுறை நிறுத்தப்பட்டது. குற்றவாளிகளைக்கொண்டு சாலைகள் சில அமைக்கப்பட்டன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் பகுதியினர் மூக்காற்பங்கு குற்றவாளிகளாக இருந்தனர். 1825ல் டாஸ்மேனியாவும், 1827ல் மேற்கு ஆஸ்திரேலியாவும், 1835-37ல் தெற்கு ஆஸ்திரேலியாவும், 1851-ல் விக்டோரியாவும், 1859-ல் குயின்ஸ்லாண்டும் தனி மாகாணங்களாக அமைக்கப் பட்டன. இவற்றில் 'பொறுப்பாட்சி" முறையும் நிறுவப் பட்டது; மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அமைச்சர்கள், பாராளுமன்றத்துக்குப் பொறுப்போடு இருந்து ஆளும் இந்த முறை, நியூ சௌத் வேல்ஸ், தென் ஆஸ்திரேலியா, விக்டோரியா, டாஸ்மேனியா முதலிய மாகாணங்களில் 1856-ம் ஆண்டிலும், 1859-ல் குயின்ஸ்லாண்டிலும்,

1853-ல் மேற்கு ஆஸ்திரேலியாவிலும் நிறுவப்பட்டன. 1803-லிருந்து கம்பளி மயிர் கொடுக்கும் ஆடுகளை வளர்க்கும் தொழில் பெருகிறது. 1851-ல் தென் ஆஸ்திரேலியாவில் தங்கம், வெள்ளி, செம்புச்சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்படவும், வெளிநாட்டவர் பெருமளவில் வந்து குடியேறவும், வாணிபமும், தொழிலும் பெருகி, மக்கள் தொகை முன்னிருந்ததிலும் கூடுதலாக ஆயிற்று. நியூசௌத்வேல்ஸ் தடையற்ற வாணிபக் கொள்கையையும், மற்றவை காப்பு வாணிபக்கொள்கையையும் (Protection) ஆதரித்து நின்றமையால், இவை தமக்குள் வேற்றுமைகளை நீக்கிக் கூட்டாசு முறையை (federation) ஏற்படுத்த விரும்பாமல் இருந்தன. ஆனால் ஆஸ்திரேலியாவில் ஏராளமாக அயலவர் குடியேறி, மலிவான கூலிக்குத் தொழில் செய்வதைத் தடுக்கும் பொருட்டும், கிழக்காசியாவில் புதிய ஓர் வல்லரசாகத் தோன்றிய ஜப்பான் நாடு பசிபிக் சமுத்திரத்தைத் தனது கட்டுப்பாட்டில் கொண்டுவருவதைத் தடுக்கும் பொருட்டும், பொதுவான சில கோட்பாடுகளை வகுக்கவும், அவற்றை நிறைவேற்றவும், பொதுவான ஆட்சி தேவைப்படுவதை மாகாணங்கள் உணர்ந்தன. எனவே இவை சேர்ந்த ஓர் கூட்டரசு அமைப்பு 1900-ம் ஆண்டு ஆஸ்திரேலிய காமன்வெல்த் சட்டத்தின் மூலம் தோன்றிற்று. ஐக்கிய அமெரிக்கக் கூட்டரசைப் பெரிதும் இந்நாட்டின் அரசியலமைப்பு ஒத்திருக்கிறது. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் பிரதிநிதியாக ஒரு கவர்னர் ஜெனரல் நாடு முழுவதற்கும் ஆட்சியாளராகப் பெயரளவில் இருக்கிறார்.

3. ஆஸ்திரேலிய மாகாணங்கள் சில சிக்கலான கேள்விகளைத் தொடக்கத்தில் தீர்த்து வைக்கவேண்டிய நிலைமையிலிருந்தன. (1) அரசாங்கப் பள்ளிக்கூடங்

கள் சமயச் சார்புள்ள கல்விப்பயிற்சியையா, அல்லது சமயச் சார்பற்ற கல்விப்பயிற்சியையா அளித்தல் வேண் டும், (2) வாணிபத்தைக் காப்புக் கோட்பாட்டை ஒட்டி நடத்துவதா. (3) இரகசிய வாக்கெடுப்பைக் கையாளுவதா, (4) வயது வந்தோர் யாவருக்கும் வாக்குரிமை கொடுப்பதா, (5) தீவாந்தரக் குற்றவாளி முறையை நீக்குதல் வேண்டுமா, (6) அளவு செய்யப் படாத நிலங்களைக்குடியேறுவோர் தமது விருப்பம்போல் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாமா, என்பனவெல்லாம் அவற்றால் இருபது ஆண்டுகளுக்குள் தீர்த்துவைக்கப் பட்டன. நிலத்தில் நிலையாகக் குடியேறும் முறையை ஆதரித்தும், பெரும் பண்ணைகள் மேய்ச்சல் நிலங்களாக மாற்றப்படுவதைத் தடுத்தும் மாகாண அரசுகள் சட்டங் களைச் செய்தன.

இவை எல்லாவற்றிலும் மிக முக்கியமானவை, மாகாணங்களெல்லாம் அயலவர்கள் ஆஸ்திரேலியாவில் குடியேறுவதைத் தடுப்பதற்காக அவ்வப்போது நிறை வேற்றிய சட்டங்களே ஆகும். ஆசியாவில் மிகப் பெரியதும், மக்கள் தொகையில் மிகப் பெரியதுமாகிய சீனநாடுதம்நாட்டுக்கு அருகில்இருப்பதையும், சீனர்கள் மிக மலிவான சம்பளத்தில் கடுமையாக உழைத்துத் தம் தங்கச் சுரங்கங்களில் பெரும்பொருள் ஈட்டுவதையும், மாகாணங்கள் நன்குணர்ந்தன. 1860-ல் நியூசௌத் வேல்ஸ் சுரங்கங்களிலிருந்து சீனர் அகற்றப்பட்டனர். மாகாணப் பிரதிநிதிகளடங்கிய பல மாநாடுகளில் சீன இடர்ப்பாடுபற்றி நன்கு ஆராய்ந்து, வெள்ளையரல்லாத வெளியார் ஆஸ்திரேலியாவில் குடியேறுவதைத் தடுக் கும் பொருட்டுப், பொது நடவடிக்கை எடுக்கக்கூடிய கூட்டரசு அரசாங்கத்தை ஏற்படுத்துவதென்று மாகா ணங்கள் தீர்மானித்து அவ்வாறு செய்தன. இத்தகைய

மாநாடுகளில் 1888-ம் ஆண்டு சிட்னியில் கூடிய மாநாடு மிகமுக்கியமானது. சீனர்களுக்கு எதிராகச்செய்யப்பட்ட சட்டங்களெல்லாம் மற்றெல்லா ஆசிய மக்களுக்கு எதிராகவும் கையாளப்பட்டன. இதுவே ஆஸ்திரேலியாவில் வெள்ளையர் மட்டுமே குடியேற வகைசெய்யும் கோட்பாடு தோன்றிய வரலாறு. இதனைக் கையாளுவதில் ஆஸ்திரேலியத் தொழிற்சங்கங்களும் தொழிற்கட்சியும் மிகவும் ஊக்கம் காட்டின. 1890-ம் ஆண்டிற்குப் பின்னரே தொழிற் சங்கங்கள் அரசியலில் கலந்து கொண்டு, தொழிற் கட்சியைத் தோற்றுவித்தன. நாளொன்றுக்கு எட்டுமணி நேர வேலை, உயர்ந்த சம்பளம் முதலியவற்றைப் பல தொழில்களில் சங்கங்கள் 1890-க்கு முன்பே அடைந்துவிட்டன. நாடு விரிந்தும், மக்கள் தொகை சுருங்கியும், பல செல்வ வளங்கள் பெருகியும் இருப்பதனுல், வாழ்க்கைச் செலவு (Cost of living) இந்நாட்டில் பல ஆண்டுகளாகக் குறைந்தே இருந்து வந்துள்ளது. எனினும் தொழிலாளர் ஊதியம் உயர்ந்திருப்பதனுல், உயர்ந்த வாழ்க்கைத் தரத்தைப் பெற்றுள்ள இந் நாட்டு மக்கள், சிறப்பாகத் தொழிற் கட்சியினர், இதனை அழிக்கக்கூடிய வெள்ளையரல்லாதார் குடியேறுவதை விரும்பவில்லை. எனவே இவர்களுடைய முயற்சியால் வெள்ளையரல்லாதார் குடியேற்றத் தடைச் சட்டங்கள் நிறைவேற்றப் பட்டுள்ளன. அரசாங்கங்கள் ஏற்றுமதி வாணிபத்துக்கு உதவியும், தொழில்களுக்கு மானிய உதவி அளித்தும் பல சட்டங்களை நிறைவேற்றியுள்ளன. காப்பு வாணிபக் கோட்பாடு, வெள்ளையரே ஆஸ்திரேலியாவில் குடியேற வகை செய்தல்—ஆகிய இரண்டுமே இந்நாட்டு அரசாங்கங்களின் குறிக்கோள் என நாம் சுருக்கிக் கூறலாம்.

4. ஆஸ்திரேலியா இரண்டு உலகப்போர்களிலும், கலந்துகொண்டு பிரிட்டனுக்கு உதவி செய்தது. சர்வ

தேச சங்கத்திலும், இப்போதுள்ள ஐக்கிய நாடுகள் சங்கத்திலும், இவற்றின் தொழிலாளர் நிறுவனம் போன்ற பல்வேறு நிறுவனங்களிலும் இது உறுப்பு நாடாக இருந்து வருகிறது. 1919-ம் ஆண்டின் வெர்சேய்ல்ஸ் அமைதி உடன்படிக்கையின்படி, ஜெர்மனிக்குப் பசிபிக் சமுத்திரத்தில் சொந்தமாக இருந்த நியூகினி தீவு தேச நாட்டினரால் எடுத்துக்கொள்ளப் பட்டு, பொறுப்பு நாடாக ஆக்கப்பட்டு (Mandated teritory) ஆஸ்திரேலியாவின் ஆட்சியில் வைக்கப்பட்டது; ஆஸ்திரேலியா இப்பொறுப்பை நிறைவேற்றியது. இந்நாட்டில் பிரிட்டிஷ் இன மரபுகள், கருத்துக்கள், முதலியன இருந்து வருகின்றன; எனினும் இது வெள்ளையரல்லாத இன மக்களுக்கு அருகில் இருப்பதால், மேற்கூறியவெல்லாம் பல மாறுதல்களுக்கு உட்பட்டே கையாளப்பட்டு வருகின்றன.

— o —

## 6. (A) தொழிற் புரட்சி

### (Industrial Revolution)

1. முன்னுரை. 2. தொழிற் புரட்சி தோன்றுதற்கு ஏற்ற சூழ்நிலைகள். 3. இயந்திரங்கள் கண்டுபிடிப்பு. 4. விளைவுகள்.

1. உலக வரலாற்றின் பல்வேறு முக்கியமான நிகழ்ச்சிகளுள், இங்கிலாந்தில் பதினெட்டாம் நூற்றுண்டின் பிற்பகுதியில் நடைபெற்ற தொழிற் புரட்சியும் ஒன்று ஆகும்; இது சில காரணங்களினுல் மற்ற முக்கிய வரலாற்று நிகழ்ச்சிகளையும்விட மிக முக்கியமானதாகவும் கருதப்படுகிறது: எவ்வாறெனில் இது ஒவ்வொரு மனிதனுக்கும் மற்றவரோடு வாழ்வின் எல்லாத்

துறைகளிலுமுள்ள தொடர்பை முற்றிலும் மாற்றி அமைத்துள்ளது; மேலும், இது இன்றளவும்தொடர்ந்து நடைபெற்று வருவதையும் நாம் காண்கிறோம்; எனவே இது வருங்காலத்திலும் தொடர்ந்து இருக்குமென்பதை நாம் நன்ருக உணரலாம்.

பொருள்களைச் செய்வதில் உள்ள பல்வேறு நிலைகளிலும் (Processes), தொன்று தொட்டுக் கையாளப் பட்டு வந்த மனித ஆற்றலுக்குப் பதிலாக, இயந்திர ஆற்றலைக் (Machine power) கையாண்ட மாறுதலே தொழிற்புரட்சி எனப்படும் வாழ்க்கைக்குத் தேவையான உணவு, உடை, போக்குவரவுசாதனங்கள் முதலியவற்றையெல்லாம், மனித இனம் தோன்றிய நாளிலிருந்து, மக்கள் பெரும்பாலும் தங்களுடைய ஆற்றலை நேரே கையாண்டு, செய்து வந்தனர்; ஆனால் 18-ம் நூற்றுண்டின் பிற்பகுதியில் மக்கள் இயந்திரங்களினுற்றலைக் கொண்டு பொருட்களைச் செய்யவும், தேவைகளை நிறைவேற்றவும் தொடங்கவே, இது ஒரு புரட்சியாக ஆயிற்று. இப்புரட்சியும் பிரஞ்சுப் புரட்சியைப்போல வன் செயல்கள் நிறைந்ததாகவும், யாருக்கும் தெரியக் கூடியதாகவும் இல்லாமல், அமைதியாக, ஆனால் நாளாவட்டத்தில், யாவரும் வாழ்வின் எல்லாத்துறைகளிலும் நன்ருக உணரக்கூடியவகையில், விளைவுகளைத் தோற்றுவித்து நடைபெற்றது. அமைதியாகச் சில தனிப்பட்டவர்கள் சில இயந்திரங்களைக் கண்டுபிடித்துப் பொருட்களை விரைவில் பெருமளவில் செய்து காட்டவும், இயந்திரமுறை நிலைபெற்றது; பழைய கைத்தொழில் முறை மறைந்தது. இயந்திரங்களைக் கண்டுபிடித்தல், நிலக்கரியையும், இரும்பையும் பயன்படுத்துதல், ஆலைத் தொழில் முறையையும், முதலாளித்துவ முறையையும் கையாளுதல், பழைய வாணிபத் தடைகளை நீக்குதல்—

இவை யாவற்றையும் சேர்த்தே 'தொழிற் புரட்சி' எனக் குறிப்பிடுவர்.

2. தொழிற் புரட்சி முதன்முதலில் இங்கிலாந்து நாட்டில் தோன்றிற்று; இது பதினெட்டாம் நூற்றாண்டுக்கு முந்திய காலங்களிலேயே அவ்வப்போது சிறிது சிறிதாகத் தோன்றி இருந்தாலும், பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் பெருமளவு நடைபெற்றது; எனவே இது இங்கிலாந்தில் நடைபெற்ற காலத்தை 1760-லிருந்து 1830-ம் ஆண்டுவரை என வரலாற்றாசிரியர் குறிப்பிடுவர். இது இங்கிலாந்தில் முதன்முதலில் நடைபெறுவதற்குத் தக்க சூழ்நிலைகள் இயற்கையாகவே அங்கு காணப்பட்டன. இந்நாடு நில அமைப்பைப் பொறுத்தவரையில், பொருளாதார வளர்ச்சிக்கும், தொழிற் புரட்சிக்கும் ஏற்ற நிலையில் இருந்தது; அதன் கிழக்குப்பக்கத்தில் மற்ற ஐரோப்பிய நாடுகளும், மேற்கே அமெரிக்கக் குடியேற்ற நாடுகளும் அதில் செய்யப்படும் பொருள்களை வாங்குவதற்கு ஆயத்தமாக இருந்தன. இந்நாட்டின் தட்பவெப்ப நிலையும் இதன் வடக்குப் பகுதிகளில் நெசவுத் தொழில் வளர்ச்சிக்கு (textile industries) மிகவும் ஏற்றதாக அமைந்திருக்கிறது. இதனுடைய கடற்கரை உடைபட்டுப் பல இயற்கையான துறைமுகங்கள் தோன்றுவதற்கு ஏற்றதாக இருந்தது. இதனுடைய பல்வேறு ஆறுகளும், ஒன்றோடொன்று இணைக்கப்படவும், அவற்றின் வழியாகப் பொருட்களைக் கொண்டு செல்லவும் உதவின. இயந்திரங்களைச்செய்வதற்குப்பெருமளவுக்குப் பொருள் முதலீடு (Capital) செய்யவும். நிலக்கரி, இரும்பு முதலியவைகளைப் பெறவும் இந்நாட்டில் வாய்ப்பு இருந்தது. பிரான்சில்நடைபெற்றதைப்போலத்தனியார் உடைமை உரிமைகளை அழிக்கும் வலிய புரட்சி ஒன்றும்

இங்கிலாந்தில் நடைபெற்றதில்லை; எனவே அரசாங்கம் அளித்த பாதுகாப்பைப் பயன்படுத்தி, இயலுமளவுக்கு எவரும் முதல் சேர்க்கக் கூடிய நிலையில் இருந்தனர். எனவே புதிய இயந்திரங்களைச் செய்யவும், ஆலைகளை (factories or mills) நிறுவவும் பலருக்குப் பொருள்வள மிருந்தது. மேலும் இயந்திரங்களைச் செய்வதற்கு வேண்டிய நிலக்கரியும், இரும்பும் இங்கிலாந்தின் வட பகுதிகளில் அருகருகே பல இடங்களில் நிறையக் கிடைத்தன.

3. முதன்முதலில் பருத்தி நெசவுத் தொழிலில் தான் புரட்சி நடைபெற்றது. மிக மெல்லிய பருத்தி நூலை நூற்கும் இயந்திரத்தை ஜேம்ஸ் ஹார்கிரீவ்ஸ் என்பவர் கண்டுபிடித்தார். இதற்கு ஜென்னி என்று பெயர். ரிச்சர்ட் ஆர்க்ரைட் என்பவர் கண்டுபிடித்த நீர்ச்சட்டம் என்ற நூற்பு இயந்திரம் உறுதியான நூலை நூற்றது. சாமுவல் கிராம்ப்ட்டனுடைய மியூல் என்ற இயந்திரம் மெல்லிய உறுதியான நூலை நூற்க உதவிற்று. நெசவு இயந்திரம் ஒன்றை ஜான் கேய் என்பவர் கண்டுபிடித்தார்; அதற்குப் 'பறக்கும் ஓடம்' (Flying Shuttle) என்று பெயர். கார்ட்ரைட் என்பவர் கண்டுபிடித்த விசைத்தறி (Power loom) மிகவும் விரை வில் கையாளப்பட்டது. 1833-ல் 85,000 விசைத்தறிகள் இங்கிலாந்தில் இயங்கின. விசைத்தறிகளின் மூலம் பருத்தி ஆடை மட்டுமின்றி, கம்பளி, லினன், பட்டு ஆடைகளும் நெய்யப்பட்டன. பருத்தி விதைகளைப் பஞ்சிலிருந்து பிரிப்பதற்கு 1793-ல் எலிவிட்னி என்பவர் ஜின் (Jin) என்ற கருவியைக் கண்டுபிடித்தார்.

இயந்திரங்களை இயக்குவதற்கு முதன்முதலில் நீர் ஆற்றலையே (Water power) பயன்படுத்தினர். ஆலைகள் ஆற்றோரங்களில் இருந்தன. பின்னர் நீராவி

ஆற்றலைக் (Steam power) கையாண்டனர். 1705-ல் தாமஸ் நியூகோமன் என்பவர் கண்டுபிடித்த நீராவி இயந்திரம் சுரங்கங்களில் ஊறும் நீரை வெளியே இறைக்க உதவிற்று. 1769-ல் ஜேம்ஸ் வாட் (James Watt) நீராவி இயந்திரத்தைச் செய்து இயக்கினர். நீராவி இயந்திரம் பஞ்சாலைகளை இயக்கவும், அச்சகங்களை (Press) இயக்கவும் கையாளப்பட்டது.

இயந்திரங்களைச் செய்வதற்கு வேண்டிய எஃகு இரும்பை, இரும்புத்தாதை நிலக்கரியினுதவியால் பிரித்துச் செய்யும் முறையை அறிந்துகொண்டனர். ஸ்மீட்டன் என்ற ஸ்காட்லாந்தியர் புது முறையைக் கையாண்டு இரும்பை உருக்கினர்.

போக்கு வரவு சாதன முறைகளும் மாறுதலுக்குள்ளாயின. ஜான் மக்கடம் என்பவர் சாலையின் மேற்பரப்பில் சிறு பரல்களைப் பரப்பிக் கடினமாகவும் உறுதியாகவும் ஆக்கினர். இதுவே இப்போது மக்கடமுறைச் சாலை என்று சொல்லப்படுகிறது. பல ஆறுகள் கால்வாய்கள் மூலம் இணைக்கப்பட்டு, நிலக்கரி முதலிய பளுவான பொருட்களைக் குறைந்த செலவில் கொண்டு செல்வதற்கு உதவின. 1759-ல் ஜேம்ஸ் பிரின்ட்லி என்பவர், மான்செஸ்டர் பட்டணத்தையும், பிரிட்ஜ் வாட்டர் பிரபுவுக்கு உரிமையில் சொந்தமாக இருந்த நிலக்கரிச் சுரங்கத்தையும், ஓர் கால்வாய் தோண்டி இணைத்தார். இதிலிருந்து கால்வாய்கள் தோண்டப்பட்டன. நீராவியினாற்றலால் புகைவண்டி இயந்திரத்தை (Locomotive) இயக்கி, வண்டிகளை இழுக்க இயலும் என்பதை ஜார்ஜ் ஸ்டீபன்சன் (1781 - 1848) என்பவர் செய்துகாட்டினர். ஸ்டாக்டன் என்ற ஊருக்கும், டார்லிங்டன் என்ற ஊருக்கும் புகைவண்டித் தொடர் சுரங்கவேலைக்காகவும், பின்னர் மான்செஸ்ட

ருக்கும் லிவர்பூலுக்குமிடையே பொருட்களையும், ஆட்களையும் கொண்டு செல்வதற்காகவும் ஏற்படுத்தப்பட்டது. இதேபோலக் கடலில் புகைக் கப்பல்களை இயக்குவதற்கு நீராவி இயந்திரங்களைக் கையாண்டு காட்டியவர் ராபர்ட் புல்டன் (Robert Fulton) (1765 - 1815) என்பவர் ஆவார்.

4. (1) பொருளியல் விளைவுகள்: பொருள்களைச் செய்வதில் இதுகாறும் வழக்கத்திலிருந்துவந்த வீட்டுக் கைத்தொழில் முறை (Domestic system) மறைந்து, ஆலைத்தொழில் முறை (Factory system) தோன்றிற்று. பழைய முறையில் ஒவ்வொரு வீட்டிலும் ஒவ்வொருவரும் வேலையைப் பகிர்ந்து செய்தனர். அதற்கு அதிக முதலீடு தேவை இல்லை; எனவே தேவைக்கு மட்டும் பொருள் செய்யப்பட்டது. வேலை நேரம் தவிர மற்ற நேரத்தில் வேளாண்மையையும் அவர்கள் கவனித்தனர். ஆனால் இயந்திரங்கள் கண்டுபிடிக்கப் பட்டுப் புதிய ஆலைத் தொழில் முறை வரவும், ஆலை முதலாளிகள் தங்களுக்குத் தேவையான எண்ணிக்கைப் படியே தொழிலாளிகளுக்கு வேலை கொடுத்தனர். பெரும்பாலானவர் வேலையின்றித் தவித்தனர். மேலும் புதிய முறையில் ஒவ்வொரு தொழிலாளியும் வேலையின் ஒரு பகுதியையே கவனித்தார். ஆலைகள் ஒரே மாதிரியான பொருளை விரைவில் குறைந்த செலவில் பெருமளவில் செய்து குவித்தன. ஆலைகளை முதலீடு உள்ளவரே நிறுவ முடியுமாகையால், ஒருசிலரே ஆலை முதலாளிகளாகவும், சாதாரண மக்களெல்லாம் அவர்களை அண்டிப் பிழைக்கும் தொழிலாளிகளாகவும் மாறினர். ஆலைத் தொழில் வளர்ச்சி பெருகப் பெருக வேளாண்மைத் தொழில் அழியத் தொடங்கிற்று. நிறையப் பொருள் செய்யப்படவே, இங்கிலாந்து தனது

தேவைக்குக் கூடுதலாக உள்ளதை வெளிநாடுகளுக்கு விற்றுப் பொருள் தேடிற்று. அந்நாடு உலகத்தின் தொழில் நிலையமாக (Workshop) மாறிற்று.

2. சமுதாய விளைவுகள் (Social effects): தொழிற் புரட்சிக்கு முன்னர் ஆங்கிலச் சமுதாயத்தில் பெரும் முதலாளிகள் இல்லை; பெரும்பாலானவர்க்குச் சிறிதளவேனும் நிலமிருந்தது. தொழிற்புரட்சிக்குப் பின்னர் முந்தி இருந்த நிலைமைமாறி, சமுதாயத்தில் அளவில் சிறிய முதலாளிகள் வகுப்பு ஒன்றும், அளவில் பெரிய தொழிலாளிகள் வகுப்பு ஒன்றும் தோன்றின. முதலாளிகள் ஆலைகளை நிறுவி, பொருட்களைச் செய்து, வாணிபம் செய்து, அரசாங்கத்தையும் தங்களுடைய செல்வாக்கினுல் கட்டுப்படுத்தினர். கிராமங்களிலுள்ள சிறு நில உடைமையாளர் பலரும் தமது நிலங்களைப் பெருநிலக் கிழார்களுக்கு விற்றுவிட்டு, சிலர் அவர்களிடம் நாள் கூலி பெறும் வேளாண்மைத் தொழிலாளிகளாகவும், சிலர் குடியேற்ற நாடுகளுக்குச் சென்றும், சிலர் புதிய தொழிற் பட்டணங்களை நாடியும் பிழைப்புக்காகப் போயினர்; எனவே, பல கிராமங்கள் மறைந்தன. (இதனையே ஆலிவர் கோல்ட்ஸ்மித் என்ற புலவர் தான் எழுதிய ‘பாழடைந்த கிராமம்’ Deserted Village என்ற பாட்டில் நயமாக எடுத்துக் கூறுகிருர்). பட்டணங்களில் தோன்றிய தொழிலாளர் வகுப்பும் தொழிற் புரட்சியால் மிகவும் அல்லலுற்றது. முதலில் அவர்கள் உரிமையிழந்து, பிழைப்புக்காகச் செல்வமுள்ள ஆலை முதலாளிகளைச் சார்ந்திருந்த நிலைமையே, அவர்களுடைய எல்லா இடுக்கண்களுக்கும் காரணமாயிருந்தது. தொழிற்சாலைகளில் ஆண்கள் சாதாரணமாக நாளொன்றுக்கு 16, 17 மணிகள் வயிற்றுப் பிழைப்புக்காக வேலை செய்யவேண்டிய நிலையில் இருந்தனர்; பெண்களும், 5, 6, 7 வயதுள்ள

குழந்தைகளும் வேலை செய்யவேண்டிய நிலை இருந்தது. அவர்களுடைய உடல்நலம் சீர்கெட்டது; அவர்களுக்குக் கிடைத்த கூலியோ மிகவும் குறைவு; அதை மறுத்தால் வேலை கிடையாது. சிறிய பண்ணைமுறை மறைந்ததால், நிலமில்லாத பெரும்பாலோருக்கு வேலையில்லை. தொழிலாளருடைய வேலைநேரத்தை வரையறுக்கவும், கூலியை விதிக்கவும், வேலைசெய்யும் சூழ்நிலைகளையும், தொழிலாளருடைய சுகத்தையும் கண்காணிக்கவும் அரசாங்கம் யாதும் செய்யாததால், முதலாளிகள் தம் விருப்பப்படி தொழிலாளரிடம் வேலை வாங்கினர்.

3. அரசியல் விளைவுகள் : மேற்கூறிய தீயவிளைவுகளே அவற்றை நீக்கும் வழியையும் காட்டின. நெடுநாட்களுக்குப் பிறகு, தொழிலாளர்களுக்குப் பாராளுமன்றத்தேர்தல்களில் வாக்காளர்களாகவும், வேட்பாளர்களாகவும் கலந்துகொள்ள உரிமை வழங்கப்பட்டது. பிற்காலத்தில் அரசாங்கம் தொழிலாளர்களுடைய குறைகளைப் போக்கச் சட்டங்கள் பலவற்றைச் செய்தது. தொழிலாளர் தங்கள் குறைகளைத் தீர்த்துக் கொள்ளத் தொழிற்சங்கங்களை நிறுவவும், இயக்கங்களை நடத்தவும் உரிமை பெற்றனர். இப்பொழுது பிரிட்டிஷ் அரசியலில் வலிமை பெற்றுள்ள தொழிற்கட்சி (Labour Party) என்ற அரசியல்கட்சி தொழிற் சங்கங்களினின்றும் தோன்றியதாகும். முதலில் முதலாளிகளையும், பெருநிலக்கிழார்களையும் உடையதாக, பிரபுக்களாட்சிக்கு (Aristocracy) ஏற்றதாக இருந்த பாராளுமன்றம், நாளாவட்டத்தில் குடியாட்சிக்கு ஏற்றதாக மாறிற்று. முதலில் அரசாங்கம் 'தலையிடாக் கொள்கை' அல்லது தடையற்ற வாணிபக்கொள்கை முறையைக் கடைப்பிடித்தது. இதனை வரைந்தவர் ஆடம்ஸ்மித் என்பவர். 'தொழில், வாணிபம் முதலியவற்றில் முதலாளிகள் தமதுவசதிக்கும்

திறமைக்கும் ஏற்பச் செயல் படும்படி அவர்களைச் சுதந்திரமாக அரசாங்கம் விட்டுவிடுதல்' என்பதே இக் கொள்கையின் சாரம். இக்கொள்கை நெடுங்காலமாகச் செயல்பட்டது. அதனால் நன்மைகள் சிலருக்கு விளைந்தன; பலர் கூலிகளாக ஆயினர். எனவே சமுதாயத்தில் தொழிலாளர்களுடைய கோணத்தில் யாவற்றையும் ஆராய்ந்து, கார்ல்மார்க்ஸ் (Karl Marx) என்ற ஜெர்மனிய யூதர் 'முதல்,' பொதுவுடமைத் திட்டம் முதலிய நூல்களை எழுதி பொதுவுடைமை அல்லது சோஷலிஸக் கொள்கைகளை, வெளியிட்டார். மேலும் பிரிட்டன், தனது ஆலைகளுக்கு, வேண்டிய கச்சாப் பொருட்களை வாங்குவதற்கும், அவற்றில் செய்யப்பட்ட பொருள்களை விற்பதற்கும் வேண்டிய சந்தைகளைப் பெறுவதற்காகக் குடியேற்ற நாடுகளைத் தேடும் நோக்கத்துடன் தனது அயல்நாட்டுக் கொள்கைகளை வகுத்தது.

— x —

## (B) வேளாண்மைப் புரட்சி

### (Agrarian Revolution)

(1) முன்னுரை (2) வேளாண்மைப் புரட்சியின் காரணங்கள் (3) நிலங்கள் வேலியால் அடைக்கப்படுதல் (4) புதிய முறையில் பயிரிடுதல்—ஆடுமாடுகளை வளர்த்தல் (5) விளைவுகள்.

1. பயிர்த் தொழிலில் புதிய முறைகளைக் கையாளுதலும், ஆடுமாடுகளைப் புதிய முறைகளில் வளர்த்தலும், புதிய அளவில் வேலி அடைப்புள்ள பெரிய பண்ணைகளை அல்லது வயல்களை வேளாண்மைக்குப் பயன்படுத்துதலும் இங்கிலாந்தில் 17-ம் நூற்றாண்டிலிருந்தே பலரால்பழக்கத்துக்குக்கொண்டுவரப்பட்டன. இவையே

வேளாண்மைப் புரட்சி எனப்படும். ஆகையால் இப் புரட்சி தொழிற் புரட்சியும், ஆலைகளும், பட்டணங்களும் வருவதற்கு முன்னரே தோன்றிவிட்டது. இது தொழிற் புரட்சியை அடுத்த காலத்தில் தொழிற் பட்டணங்கள் பெருகியபோதுதான், நல்ல பயனுள்ளதாக ஆயிற்று.

2. நெடுங்காலமாக இங்கிலாந்தின் மக்கள் தொகை ஏறக்குறைய ஒரே அளவாக இருந்து வந்தது. ஆனால் 17-ம் நூற்றண்டின் பிற்பகுதியில் வாணிபமும், தொழிலும் வளர வளர, நகரங்களில் மக்கள் தொகை பெருகிற்று. எனவே மக்களுக்கு உணவளிப்பதற்காக நிறைய உணவுப் பயிர்களை விளைவிக்கவேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. இச்சூழ்நிலையில் பெரிய அளவில் நிலங்களை உடையவர்கள், தங்களுடைய நிலங்களில் புதிய முறைகளைக்கையாண்டு பயிர்விளைச்சலைக் கூடுதலாக்க முயற்சி செய்தனர். வேளாண்மைப்புரட்சி தொடர்ந்து நடைபெற்றதற்கு இன்னொரு காரணம், தொழிற்புரட்சியினால் ஆலைகள் தோன்றி, வீட்டுக் கைத்தொழில் முறை மறையவும், வேலை இழந்து,வேளாண்மை ஒன்றையே நம்பிப் பிழைக்க வேண்டிய நிலையிலிருந்த குடியானவர்கள், பயிர்த் தொழில்முறையைச் சீர்திருத்தி அமைக்கும் இயல்போடு இருந்ததுதான்.

3. முன்பு 'திறந்த வயல்' முறை (Open field system) இருந்தது; இம்முறையில் வயல்களுக்கு வேலி அடைப்பு இடப்படாமல், ஒவ்வொரு கிராமவாசிக்கும் மூன்று அல்லது நான்கு பெரிய வயல்களில் சிறுசிறு பகுதிகள் உடைமையாக இருந்தன. ஒவ்வொருவருடைய பகுதியையும் மற்றவருடைய பகுதியிலிருந்து பிரிப்பதற்குச் சிறு புல்வரப்புக்கள் இருந்தன; ஒரே சமயத்தில் ஒரே வயலில் எல்லாப் பகுதிகளிலும் ஒரே மாதிரியான தானியமே பயிர் செய்யப்பட்டது. எனவே

இத்திறந்த வயல் முறையினால், புதியமுறையில் எவரும் தனியாகப் பயிர்செய்ய முடியாமலிருந்தது. உயர்ந்த விலைக்கு உணவுத் தானியங்கள் விற்கப்படும்போது, அவற்றைப் புதிய முறையில் நிறையப் பயிரிட்டு, ஊதியம் பெற எண்ணிய பெருநிலக் கிழார்கள், திறந்த வயல் முறையை நீக்கிவிட்டுக், கிராம நிலங்களோடு, பொதுவான மேய்ச்சல் நிலங்களையும், பாழ் நிலங்களையும் சேர்த்து வேலி அடைப்புப் போடவும், எல்லா நிலங்களையும் தொடர்பான அளவு களில் பிரிக்கவும், வேலி அடைப்புச் சட்டங்களை (Enclosure Acts) நிறைவேற்றும்படி பாராளுமன்றத் தைக் கேட்டுக்கொண்டனர். 1760லிருந்து 1850 வரை நிறைவேற்றப்பட்ட வேலி அடைப்புச் சட்டங்களின் விளைவாக, ஏறக்குறைய ஏழுமில்லியன் ஏக்கர் நிலங்கள் வேலி அடைக்கப்பட்டுப் பெருநிலக்கிழார்களின் தனி உடைமைகளாகி விட்டன. இச்சட்டங்களால் இங்கிலாந் தில் தொன்றுதொட்டு இருந்துவந்த சிறுநில உடைமை யாளர் மூன்று வகைகளில் மிகவும் பாதிக்கப்பட்டனர். (1) வேலி அடைப்புப் போடப்பட்டு கிராமநிலம் முழுதும் மீண்டும் பிரிக்கப்பட்டபோது, சிறுநில உடைமையாள ருக்குக் கிடைத்த பங்கு, முன்பு அவருக்குச் சொந்த மாக இருந்த வளமான நல்ல நிலப் பகுதியாக இல்லா மல், வளமற்றதாக அமைந்தது; இதைத் தவிர்க்க வேண்டுமானால் அவர் தனக்குச் சொந்தமான நிலப் பகுதிகளுக்கு வேலி போட்டாக வேண்டும்; இதற்கு அவருக்குப் பொருள் இல்லை. (2) மேலும் இதுவரை கிராம மக்கள் யாவருக்கும் பொதுவாக மேய்ச்சல் நில மாக இருந்துவந்த பொது நிலங்களை (Commons), அவர் இனி பயன்படுத்த இயலாமல், அவையெல்லாம் வேலி போடப்பட்டுப் பெரு நிலக்கிழார்களால் பகிர்ந்து கொள்ளப்பட்டன. (3) சிறு நிலங்களில் புதிய முன்ற

மையக் கையாள வசதி இல்லாதவர்கள், தங்களுடைய நிலங்களைப் பெருநிலக் கிழார்களுக்கு அவர்கள் கேட்ட விலைக்கு விற்றனர். இவர்களில் சிலர் அப்பெருநிலக் கிழார்களிடமே வேளாண்மைக் கூலிகளாகவும், சிலர் குடியேற்ற நாடுகளுக்குப் பிழைப்புத் தேடியும், சிலர் அருகிலுள்ள தொழிற் பட்டணங்களில் ஆலைகளில் கூலிகளாக வேலை செய்யக் குடி பெயர்ந்தும் போயினர்.

4. ஜெத்ரோ டல் (Jethro Tull,) (1674-1741) என்பவர் ஹங்கர் போர்டில் தனக்குச் சொந்தமாக இருந்த பண்ணையில் புதிய விதைப்பு முறையைக் கையாண்டு, அது சிக்கனமும், நல்ல பயனும் உடையதென்பதைக் கண்டார். விதைகளை அள்ளித் தெளிக்காமல், வரிசைகளில் ஊன்றி வைப்பதற்காக ஒரு துளைக் கருவியைக் (Drill) கண்டு பிடித்தார். டௌண்ஷெண்ட் பிரபு (1674–1738) தனக்கு நார்பக்கில ரெய்ன்ஹாம் என்ற ஊரில் சொந்தமாக இருந்த பண்ணையில், புதிய பயிர் முறையைக் கையாண்டார். ஆழ உழுவதற்காக அவர் புதிய இரும்புக் கலப்பைகளைப் பயன்படுத்திப், பாழ் நிலங்களை விளைச்சல் நிலமாக மாற்றினார். மேலும் முன்பு இருந்துவந்த மூன்று ஆண்டுகளுக்கு ஒருமுறை விளை நிலங்களைத் தரிசாக (fallow) விடுவது, என்ற முறையை, இவர் கைவிட்டுவிட்டு அதற்கு மாறாக, நான்கு ஆண்டுகளுக்கு ஒருமுறை உணவு தானியத்தைப் பயிர்செய்து, மற்ற ஆண்டுகளில் வேறுபொருள்களைப் பயிரிட்டால் நல்ல பயன் உண்டு, என்று காட்டினார். இவர் நிலங்களைத் தரிசாகப் போடாமல் நான்கு ஆண்டுகளுக்கு ஒரு ஆண்டில் கோதுமை, மறு மூன்று ஆண்டுகள் ஒவ்வொன்றிலும் கிழங்குகள், பார்லி, மணப்புல் (Clover) முதலியவற்றைப் பயிரிட்டுக்காட்டினார். நல்ல விளைச்சல் இருந்தது. இவர் விளைவித்த

கிழங்குகள் நல்ல பருமனாக இருந்தன. மேலும் கிழங்கு முதலியவை குளிர்காலத்தில் ஆடுமாடுகளுக்கு நல்ல உணவாக அமையவும், ஆண்டு முழுவதும் நல்ல இறைச்சி கிடைத்தது.

ஆடுமாடுகளை வளர்த்தலில் லீஸ்டர்ஷயரிலுள்ள டிஷ்லி பண்ணையின் உடைமையாளரான ராபர்ட் பாக்வெல் (1725 - 1795) என்பவர் டௌன்ஷெண்ட் காட்டிய முறைகளைப் பின்பற்றினர். ஆடுமாடுகளுக்குக் கிழங்குகளை உணவாகக் கொடுத்து, அவைகளைப் பருக்க வைத்தார். நல்ல ஊன் இவ்வகையாக இங்கிலாந்தில் நெடுகக் கிடைப்பதற்கு வழி உண்டாயிற்று. நிறையப் பாலளிக்கும் வகையில் பசுக்கள் வளர்க்கப்பட்டன.

மூன்றும் ஜார்ஜ் அரசர் தனது விண்ட்ஸர் மாளிகையில் ஒரு மாதிரிப் பண்ணையை நடத்திக் காட்டினர். அதில் புதிய முறைகள் கையாளப்பட்டன. நாடு முழுவதிலும் இவ்வாறு வேளாண்மைத் தொழில் மாறுதலுக்குள்ளாயிற்று.

5. நல்ல விளைச்சலும், நல்ல கொழுத்த ஆடு, மாடு, பன்றி முதலியனவும் தோன்றின. ஓரளவு தனது உணவுப்பொருள் தேவையை இங்கிலாந்து தன் நிலங்களிலேயே நிறைவு செய்து கொள்ளக்கூடிய நிலைமை இருந்தது. எனினும் வேளாண்மைப் புரட்சியாலும், தொழிற்புரட்சியாலும் சிறுநிலக்கிழார் அடங்கிய வகுப்பு மறைந்தே போயிற்று. இவ்வகுப்பினரே முன்பெல்லாம் நாட்டின் படையில் பற்றுதியோடு பணி புரிந்தவர்கள். புதிய வேளாண்மை முறைகளினால் பெருநிலக்கிழார்கள்தான் பயன் பெறக்கூடியவராக இருந்தனர்; எனவே சிறுநில உடைமையாளர்கள் வகுப்பு மறைந்து போயிற்று.

—o—

# 7. இக்கால ஆசியா

## (1) ஜப்பானின் எழுச்சி

1. முன்னுரை, 2. நாடு, சமூகம், பண்டைய வரலாறு. 3. அரசியல் மாற்றம், தொழில், வாணிபம் வளர்ச்சி, 4. ஜப்பானிய அரசியல் வலி பெருகுதல்: (1) ஜப்பானிய சீனப் போர் 1894; (2) ரஷ்ய ஜப்பானிய போர் 1904-5, (3) மற்றைய்ப் போர்களும், பேரரசு பரவுதலும், (4) இரண்டாம் உலகப் போரும், ஜப்பானின் இன்றைய நிலையும்.

1. இன்றைய உலக அரசியலில் பங்கு பெற்றுள்ள ஆசிய நாடுகளுள் ஜப்பானும் ஒன்று ஆகும். பண்டைக் காலத்திலிருந்தே சுதந்திர நாடாக இருந்து வந்துள்ள ஜப்பான், இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் சில ஐரோப்பிய நாடுகளைப்போல ஓர் பேரரசு நாடாகச் சில காலம் இருந்து, இப்போது அது சாதாரண ஓர் ஆசிய நாடாக இருந்து வருகிறது. இரண்டாம் உலகப்போரில் (1939-45) தோல்வியுற்றது, வீழ்ச்சி அடைந்தாலும், அது தொழிலிலும், வாணிபத்திலும் வளர்ச்சியும் முன்னேற்றமும் அடைந்துள்ளது.

2. நான்கு பெரும் தீவுகளிலாகியது ஜப்பான் நாடு. ஜப்பானியர் தங்கள் நாட்டை 'சூரியனின் மூலாதாரம்' எனப் பொருள்படும் நிப்பான் (Nippon) என்ற சொல்லால் குறிப்பிடுகின்றனர். சூரிய தேவதை ஜப்பானியத் தீவுகளைப் படைத்ததாகவும், அதன் பின் தோன்றல்களில்ஒருவனாகிய ஜிம்மு டென்னோ என்பவன் கி. மு. 660-ல் ஜப்பானின் முதல் பேரரசராக வந்தான் எனவும் பலகதைகள் கூறப்படுகின்றன. கி. மு. 6-ம் நூற்றாண்டில் சீனபௌத்தகுருமார் ஜப்பானுக்கு வந்து, அங்கு எழுதப்பட்ட ஒரு மொழிவகையையும், சீனக் கலைகளையும், சீனத்தொழில்களையும் புகுத்தினர். ஜப்பானியர் சீன நாகரிகத்தை ஏற்றுக்கொண்டனர். ஜப்பானிய

சமுதாயத்தில் சாதாரண மக்களடங்கிய வகுப்பும், நிலமானியப் பிரபுக்களடங்கிய வகுப்பும் இருந்தன. நிலமானியப் பிரபுக்களுடைய குடும்பங்கள் தாம் ஜப்பானை 1100 ஆண்டுகளுக்கு நடைமுறையில் ஆட்சி செய்துவந்தன. பெயரளவில்தான் அரசருக்கு அதிகாரம் இருந்து வந்தது. கியோட்டோ என்பதுதான் தலைநகரமாக இருந்தது. நிலமானியப் பிரபுக்களுள் மிகவும் வெற்றியுடன் ஆண்ட திறமை வாய்ந்த படைத் தளபதிகள் சிலர் இருந்தனர். இவ்வாறு ஆட்சி செய்த படைத் தளபதிகளுக்கு ஷோகுன் என்ற பட்டப் பெயர் உண்டு. ஆட்சியில் படைத் தளபதிகளுக்கு உதவி செய்த வீரர்களுடைய வகுப்பு சாமுராய் என்றழைக்கப்பட்டது. ஜப்பானியர் பண்டைக் காலத்திலேயே அவ்வப்போது கொரியாவின் மீது படையெடுத்து சில இடங்களைக் கைப்பற்றி ஆட்சி செய்து வந்திருக்கின்றனர். ஜப்பானியத் தொழில் முறைகளும், சமுதாய அமைப்பும், ஆட்சி அமைப்பும் 1867-ஆம் ஆண்டு வரை எந்தவித மாறுதலும் இல்லாமல் பண்டைய வழக்கங்களை ஒட்டியே இருந்து வந்தன.

ஜப்பானுக்கும், வெளியுலகத்திற்கும் நெடுங்காலமாகத் தொடர்பு இல்லை. 13-ம் நூற்றாண்டில் சீனாவுக்கு வந்த மார்க்கோபோலோ என்ற வெனீஷியரிடமிருந்து ஐரோப்பியர் ஜப்பானைப்பற்றிக் கேள்விப்பட்டிருந்தனர். 1274-ல் சீனாவை ஆண்ட குப்ளாய்கான் என்ற மங்கோலிய அரசர் ஜப்பானைக் கைப்பற்றுவதற்காக அனுப்பிய கப்பற்படை, புயலால் சிதறுண்டு போயிற்று. 1338 லிருந்து ஜப்பானை அஷிகாகா குடும்பத்தினர் ஆண்டனர். 1549-ல் இயேசு சங்கத்தைச் சேர்ந்த பிரான்ஸிஸ் சேவியர் என்ற ஸ்பானியகுரு ஜப்பானுக்கு வந்தார். பல போர்ச்சுக்கீசிய ஸ்பானிய கிறிஸ்தவ

குருமார்கள் ஜப்பானுக்கு வந்து கிறிஸ்தவ மதத்தைப் பரப்பினர். 17-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இங்கிலாந்து, ஹாலந்து ஆகிய நாடுகளிலிருந்து வணிகர்கள் ஜப்பானுக்கு வந்தனர். ஜப்பானை வெல்லுவதற்காக, ஐரோப்பியப் படைகளைக் கொண்டுவருவதற்குக் குருமார்கள் வந்திருக்கின்றனர், என்று ஜப்பானிய அரசர்கள் அஞ்சினர். எனவே 1614-லிருந்து அயல் நாட்டினரெல்லாம் ஜப்பானிலிருந்து வெளியேற்றப் பட்டனர்; ஜப்பானியரும் வெளிநாடுகளுக்குப் போக அனுமதிக்கப்படவில்லை. ஜப்பானுக்கு அருகில் கரைதட்டி உடைந்துபோன ஒரு கப்பலிலிருந்து தப்பிய சில அமெரிக்க மாலுமிகளை ஜப்பானியர் கொடுமையாக நடத்தினர். இதனால் சினங்கொண்ட அமெரிக்க அரசாங்கம் 1853-ம் ஆண்டில் மாத்யூ ஸி பெரி என்ற அமெரிக்கக் கப்பற்படைத் தளபதியை நான்கு போர்க்கப்பல்களுடன் ஜப்பானுக்கு அனுப்பி, ஜப்பானை அமெரிக்காவோடு தூதியலுறவை ஏற்படுத்திக்கொள்ளும்படியும், ஜப்பானுக்குவரும் அமெரிக்க வணிகர்களையும், மாலுமிகளையும் நல்லமுறையில் நடத்தும்படியும் கேட்டது. ஜப்பானிய அரசாங்கம் முதலில் மறுத்தது; ஆனால் 1854-ல் பெரி மீண்டும் நிறைய அமெரிக்கப் போர்க் கப்பல்களுடன் ஜப்பானுக்கு வரவே, அப்பொழுது ஜப்பானை ஆண்ட டோகுகாவா குடும்பம் அச்சமடைந்து, அமெரிக்காவோடு உடன்படிக்கை செய்து, 1857ல் அமெரிக்கருடைய வாணிபத்திற்காக, நாகசாகி, யோகோகாமா, மற்றும் இருதுறைமுகங்கள் ஆகியவற்றைத் திறந்துவிட்டது. இதை ஒட்டி பிரிட்டன், பிரான்ஸ், ரஷ்யா, ஹாலந்து, மற்றும்பல ஐரோப்பிய நாடுகளெல்லாம் ஜப்பானோடு உடன்படிக்கைகள் செய்தன.

3. வெளியுலகத் தொடர்பை ஒட்டி, ஜப்பானின் அரசியல் முறையிலும், தொழில் முறையிலும் பல

மாறுதல்கள் ஏற்பட்டன; அமெரிக்கருடைய வருகைக்கு இடம்கொடுத்த டோகுகாவா ஆட்சிக் குடும்பத்தவரிடம், ஜப்பானியருக்குவெறுப்பு ஏற்பட்டுப்பகையும்வளர்ந்தது. பலர் பேரரசருடன் சேர்ந்து, அவர் படைத்தளபதிகளிட மிருந்து அதிகாரத்தைத் திரும்பப் பெற்றுக்கொள்ளு வதற்கு உதவிசெய்தனர். இவ்வாறு பொதுமக்களுடைய ஆதரவைப் பெற்ற பேரரசர் மட்சு ஹிட்டோ என்பவர் 1868-ல் படைத்தளபதிகளிடமிருந்து எல்லா அரசியல் அதிகாரங்களையும் எடுத்துக்கொண்டார்; படைத்தளபதி கள் பதவியிழந்தனர். நிலமானியப் படைவீரர் வகுப்பும் மறைந்தது. ஜப்பானியத் தரைப் படையும், கப்பற்படை யும் ஐரோப்பியநாடுகளில்உள்ளவற்றைப்போலதற்கால முறையில் திருத்தி அமைக்கப்பட்டன. நாட்டில் யாவருக் கும் கட்டாயக் கல்விப்பயிற்சி கொடுக்கப்பட்டது. ஆலைத் தொழில், சுரங்கத் தொழில், போக்குவரவு, பாங்கு முதலியவற்றில் எல்லாம் ஜப்பானியருக்கு ஐரோப்பாவி லிருந்தும், அமெரிக்காவிலிருந்தும் வல்லுநர்கள் வரவழைக்கப்பட்டுப் பயிற்சியளிக்கப்பட்டது. ஜப்பானில் உள்ள எல்லாத் தொழில்களையும், வாணிப நிறுவனங் களையும் செய்தித் தாள்களையும் எட்டு செல்வக் குடும்பங் கள் கட்டுப்படுத்தி வந்தன. 1889-ம் ஆண்டின் அரசிய லமைப்புச் சட்டத்தின்படி, பேரரசரே ஜப்பானியஅரசாங் கத்தின் எல்லா அதிகாரங்களுக்கும் ஆதாரமாகவும், அரசாங்கத்தின் தலைவராகவும் இருந்தார். எல்லா உயர் தர அரசாங்க அலுவலரையும் அவரே அமர்த்தவும், அவர்கள் எல்லோரும் அவருக்கே பொறுப்போடு இருந் தனர். 1890-ல் ஜப்பானுக்குக் குற்றவழக்குச் சட்டமும், சிவில் சட்டமும் தொகுக்கப்பட்டன.

4. 19-ம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஜப்பான் சில மேற்கத்திய ஏகாதிபத்திய வல்லரசுகளைப் பின்பற்றி ஏகாதிபத்திய அல்லது பேரரசுக் கொள்கையைக்

(Imperialist policy) கடைப்பிடிக்கத் தொடங்கிற்று. இதன் விளைவாக அதுபல ஆக்கிரமிப்புச் செயல்களிலும், அழிவைத்தரும் போர்களிலும் ஈடுபட்டது. 1880-ல் அது கடைப்பிடித்த உறுதியான அயல்நாட்டுக் கொள்கையின் விளைவாக, பிரிட்டன், அமெரிக்கா, மற்றும் பல நாடுகளுக்கெல்லாம் ஜப்பானில் இருந்த விசேட நிலச்சலுகைகள் (Extra territorial rights) நீக்கப்பட்டன. இத்தகைய சலுகைகளினால் ஜப்பானில் வசித்த மேற்கத்தியர்கள் ஜப்பானியச் சட்டத்திற்கு உட்படாமலிருக்க உரிமை பெற்றிருந்தனர்; இவற்றையெல்லாம் நீக்கி, மேற்கூறிய நாடுகள் ஜப்பானுடன் உடன்படிக்கைகளைச் செய்தன.

### 1. சீன ஜப்பானியப் போர் (1894)

சீனப் பேரரசின் ஓர் மாகாணமாகிய கொரியா வளமும் செல்வமும் உடையதாக ரஷ்யாவுக்கும், ஜப்பானுக்கும் வெகு அருகிலிருந்தது. இராணுவ முக்கியத்துவமுடைய கொரியாவை ஜப்பான் பெற விரும்பிற்று. அது 1894-ல் தன் படைகளை அனுப்பி கொரியாவில் கிங்செள, டேக்கின், போர்ட் ஆர்தர் ஆகியவற்றைக் கைப்பற்றி, சீனக் கப்பற்படையையும், தரைப்படையையும் தோற்கடித்தது. இந்த முதல் போரில் வெற்றிபெற்ற ஜப்பானுக்கு சீனு, 1896-ம் ஆண்டின் உடன்படிக்கையின் படி, சீனுவில் பல வாணிப உரிமைகளைக் கொடுத்து, பார்மோஸா தீவையும், லியோட்டங் தீபகற்பத்தையும், பெரும்போர் அபராதத் தொகையையும் கொடுத்தது. கொரியா மாகாணம் சுதந்திரமானதாக ஒப்புக்கொள்ளப்பட்டது; அங்கும் தென் மஞ்சூரியாவிலும், ஜப்பானுக்குப் பல விசேட சலுகைகள் கொடுக்கப்பட்டன.

## 2 ரஷ்ய ஜப்பானியப் போர் (1904-1905)

இருபதாம் நூற்றாண்டின் ஜப்பானிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி, அது மிகப்பெரிய ஐரோப்பிய நாடாகிய ரஷ்யாவோடு 1904-1905-ல் வெற்றியாக நடத்திய போர் ஆகும். இதற்குக் காரணங்களாவன: (1) 1895-ம் ஆண்டின் உடன்படிக்கையின்படி, ஜப்பான் சீனாவிடமிருந்து பெற்ற இடங்களெல்லாம் ரஷ்யாவின் ஆதிக்கம், மஞ்சூரியாவில் பரவுவதைத் தடுப்பதற்கு உதவின. இவ்வாறு தனது ஆதிக்கம் தடுக்கப்படுவதை ரஷ்யா விரும்பவில்லை. எனவே அது பிரான்ஸ், ஜெர்மனி ஆகியவற்றோடு சேர்ந்து, ஜப்பான் லியோட்டங் தீபகற்பத்தையும், போர்ட் ஆர்தரையும் கைவிடவேண்டுமென்று வற்புறுத்திற்று. ஜப்பானும் இவ்வாறே செய்தது. ரஷ்யா 1897-ல் போர்ட் ஆர்தரை சீனாவிடமிருந்து எடுத்துக்கொண்டு, மாஸ்கோவிலிருந்து மஞ்சூரியா வழியாக விளாடிவாஸ்டாக், போர்ட் ஆர்தர் ஆகிய துறைமுகங்களுக்கு இருப்புப்பாதை அமைத்தது. இவ்வாறு தன்னிடமிருந்து சீனாவுக்குக் கொடுக்கப்பட்ட பகுதிகளில் ரஷ்யா ஆதிக்கம் செலுத்துவதை ஜப்பான் விரும்பவில்லை. எனவே இரு நாடுகளுக்கும் பகைமூண்டது. (2) 1902-ல் இங்கிலாந்தும், ஜப்பானும் ஒரு இரட்டை நேச உடன்படிக்கை (Dual Alliance) செய்துகொண்டன. அதன்படி இருவருள் எவரையேனும் இரண்டு பகைவர்கள் தாக்கினால், அவருக்கு மற்றவர் உதவி செய்வதென்றும், சீனாபோன்ற பின்தங்கிய நாடுகளில் அயல்நாட்டு மக்களுக்கு வாணிபம் செய்வதற்கு ஒத்த உரிமைகள் இருக்க வேண்டுமென்றும் ஒப்புக்கொள்ளப்பட்டன. இந்த ஒப்பந்தத்தினால், ஜப்பானுக்கு மற்ற ஐரோப்பிய நாடுகளுக்கும் எதிராக பிரிட்டனின் உதவியைப் பெறவும், தனது கடல் வலிமையைப் பெருக்கவும், சீனாவில் வாணிப உரிமைகளைப் பெறவும், வழி உண்டா

மிற்று. இதுவும் ஜப்பானுக்கும், ரஷ்யாவிற்கும் உள்ள பகையை வளர்த்தது. (3) 1904-ல் ரஷ்யா, மஞ்சூரியாவைத் தனது மாகாணமாக ஆக்கவும், ஜப்பான் அதை எதிர்த்தது. எனவே போர் மூண்டது.

இப்போரில் வியக்கத்தக்க வகையில், சிறந்த பயிற்சி பெற்றிருந்த சிறிய ஜப்பானியக் கப்பற் படையும், தரைப் படையும்,மிகப்பெரிய ரஷ்யப்படைகளைத் தோற்கடித்தன. யாலு ஆறு, லியோயாங், முக்டன், ஆகியவற்றில் ரஷ்யத் தரைப்படைகள் தோல்வியுற்றன; சுஷிமா கடற்சண்டையில் ஜப்பான் வெற்றி பெற்றது. ஐக்கிய அமெரிக்க நாட்டின் தலைவராகிய தியோடோர் ரூஸ்வெல்ட் தலையிட்டு இருநாடுகளும் போரை நிறுத்தும்படி செய்தார். 1905ல் கையெழுத்தாகிய போர்ட்ஸ்மத் உடன்படிக்கையின்படி, ரஷ்யா, லியோடங் தீபகற்பம், போர்ட் ஆர்தர், தென் மஞ்சூரிய இருப்புப்பாதை ஆகியவற்றையும், ஸக்காலின் தீவின் தென்பகுதியையும் ஜப்பானுக்குக் குத்தகையாகக் கொடுத்தது. மேலும் அது, கொரியாவில் ஜப்பானுக்கு உள்ள செல்வாக்கை ஒப்புக்கொண்டது.

இப்போரில் ஜப்பானிய வெற்றியினால் பல விளைவுகள் ஏற்பட்டன; அந்நாடு ஐரோப்பிய நாடுகளோடு போட்டி போடக்கூடிய வலிமையுடைய நாடாக மதிக்கப்பட்டது. முதன் முதலில் ஒரு ஐரோப்பியநாடு, ஓர் ஆசிய நாட்டினால் இவ்வாறு தோற்கடிக்கப்பட்டதனால், ஐரோப்பிய ஆதிக்கத்துக்கு உட்பட்டிருந்த மற்ற ஆசிய நாடுகளில் தேசிய உணர்வு கிளர்ந்து எழுந்தது. சீனாவில் இருந்தவலியற்றமுடியாட்சிக்கு எதிர்ப்புத்தோன்றி, 1911-ல் சீனக் குடியரசு நிறுவப்பட்டது. ரஷ்யாவிலும் இந்நிகழ்ச்சி நாளாவட்டத்தில் முடியாட்சிக்கு எதிரான புரட்சியைத் தோற்றுவித்தது.

## (3) ஜப்பான் செய்த மற்றப் போர்களும், அது நிறுவிய பேரரசும்

முதல் உலகப் போரில் ஜப்பான், பிரிட்டனோடு ஜெர்மனிக்கு எதிராகச் சேர்ந்து, சீனாவில் ஜெர்மனியிடமிருந்து ட்சிங் டோவையும், பசிபிக் தீவுகளையும் கைப்பற்றிற்று. 1915-ல் அது சீனாவில் சில தனிப்பட்ட சலுகைகளைப் பெற்றது. சர்வதேச சங்கம், மார்ஷல், கரோலின், மரியானா முதலிய தீவுகளின் ஆட்சிப் பொறுப்பை ஜப்பானிக்குக் கொடுத்தது. 1930-ம் ஆண்டிற்குப் பின் ஜப்பானில் தாராளக் கொள்கையினருடைய ஆட்சி மறைந்து, ராணுவ ஆட்சி வந்தது. அவர்கள் சீனாவுடன் போர்க் கொள்கையைக் கையாண்டனர்; அவர்கள் பாராளுமன்றத்தையோ, அமைச்சரவையையோ கலந்து கொள்ளாமல், பேரரசரின் பெயரால் எதனையும் செய்தல் கூடும். ஜப்பானியத் தொழிலதிபர்கள், தங்களுடைய பொருள்களை விற்பதற்காகச் சந்தைகளைப் பெறும் நோக்கத்துடன், ஏகாதிபத்தியக் கொள்கைகளை அரசாங்கம் கடைப்பிடிக்க வேண்டுமென்று விரும்பினர். ஜப்பானியருக்கு உலகை ஆளும் புனிதக் கடமை உண்டு, என்ற கருத்தை ஜப்பானியத் தீவிர தேசிய வாதிகளின் இரகசியக் குழுக்கள் பரப்பி வந்தன. 1931-ல் ஜப்பான் மீண்டும் சீனாவின் மீது போர் தொடுத்து, மஞ்சூரியாவைக் கைப்பற்றி, அங்கு ஓர் பொம்மை அரசாங்கத்தை நிறுவிற்று. சர்வதேச சங்கம் இதில் தலையிடவே, ஜப்பான் அச்சங்கத்திலிருந்து 1933-ல் விலகி விட்டது. இராணுவச் சூழ்ச்சியாளர் ஆட்சியைக் கைப்பற்றி, ஜப்பானை மையமாகக் கொண்ட சகவளமான நிலப் பகுதிகளை உடைய பெரிய கிழக்கு ஆசியாவை (Coprosperity sphere of Greater Eastern Asia) ஏற்படுத்தப் போவதாகக் கூறினர். 1937-ல் வட சீனப் பகுதியில்

ஜப்பான் தனது செல்வாக்கை உறுதிப்படுத்திற்று. அது பீகிங் உட்படப் பல சீன நகரங்களைக் கைப்பற்றிற்று. 1936-ல் அது நாஸிச ஜெர்மனியோடும், பாஸிச இத்தாலியோடும் சேர்ந்து, ரஷ்யக் கம்யூனிஸ எதிர்ப்புக் கூட்டணியை அமைத்தது. எனவே அது இரண்டாம் உலகப் போரில் (1939-45) அச்சு நாடுகளாகிய ஜெர்மனியோடும், இத்தாலியோடும் சேர்ந்து, 1941 டிசம்பரில் அமெரிக்காவின் பெர்ல் துறைமுகத்தைத் தாக்கி, அதனையும், குவாம், பிலிப்பைன்ஸ், வேக் தீவுகளையும் கைப்பற்றிற்று. தென்கிழக்கு ஆசியாவிலுள்ள ஐரோப்பியக் குடியேற்ற நாடுகளையும் அது கைப்பற்றிற்று. 1945-ல் மேற்கே வெற்றியாகப் போரை முடித்த நேசநாடுகள் ஜப்பானைத் தாக்கின. ரஷ்யா ஜப்பான் மீது போர் தொடுத்தது. 1945 ஆகஸ்டு 6-லும், 9 லும் அமெரிக்கா, ஜப்பானிய நகரங்களாகிய ஹிரோஷிமாவிலும், நாகசாகியிலும் அணுக்குண்டுகளை வீசி அழித்தது. ஜப்பான் சரணடைந்தது. நேசநாட்டினரின் இராணுவ ஆக்கிரமிப்பில், ஜப்பான் போர்க் கொள்கைகளைக் கைவிட்டு, தரை, கப்பற்படைகளைக் கலைத்து, குடியாட்சி அரசாங்க முறையை ஏற்றுக்கொண்டது. அது அமெரிக்காவோடு நட்பு பூண்டு அதனோடும், வேறுபல நாடுகளோடும், அமைதி உடன்பாட்டை 1951-ல் ஏற்றுக்கொண்டது. 1956-ல் அது ஐக்கிய நாடுகள் கழகத்தில் ஓர் உறுப்பு நாடாக ஏற்றுக்கொள்ளப்பட்டது. இப்பொழுது அது அணு ஆற்றலை அறியும் தொழிலிலும், மின் ஆற்றல் கருவிகளைச் செய்யும் தொழிலிலும் முன்னேறி விளங்குகின்றது.

## (2) சீனு

(1) முன்னுரை (2) பண்டைக்காலத்தில் சமுதாய, பொருளியல் நிலைமைகள் (3) பண்டைய அரசியல்

வரலாறு: மிங்கு, மஞ்சு அரசகுடும்பத்தவரின் ஆட்சி (4) 1911-ம் ஆண்டுப் புரட்சியின் காரணங்கள் (5) குடியரசில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் (6) பொதுவுடைமைக் கட்சியின் ஆட்சியும் இக்கால நிலையும்.

1 இன்றைய உலகத்தில் மக்கள் தொகையில் மிகப் பெரிய நாடு சீனு. ஓரளவு இந்தக் காரணத்தினாலும், வேறு சில காரணங்களினாலும், இந்நாடு, இன்றைய உலக அரசியலரங்கில், முக்கியமாக ஆசிய அரசியலரங்கில் யாவருடைய கவனத்துக்கும் உள்ளாகி இருக்கிறது.

2. பண்டைய எகிப்து, சுமேரியா, இந்தியா ஆகிய நாடுகளைப் போன்று பண்டைய சீனுவும், உலகத்தின் பழங்கால நாகரிகங்கள் வளர்ந்த 'தொட்டில்'களில் ஒன்று. கி. மு. மூன்றும் நூற்றுண்டில் இந்நாட்டை ஆண்ட 'சின்' என்ற அரச குடும்பத்தாருடைய ஆட்சிக் காலத்தில், இதனைப்பற்றிக் கேள்விப்பட்ட அயலவர், இதனைச் சீனு என அழைத்தனர். இந்நாட்டின் பொருளியல் நிலைமையே இதனுடைய சமுதாய அமைப்பையும் உருவாக்கிற்று. கி. பி. 1910–ம் ஆண்டுவரையில் சீனுவிற்பழங்காலக் கருத்துக்களே வேருன்றி இருந்தன. இங்கு தொன்றுதொட்டுக் கையாளப்பட்ட முக்கியமான தொழில்கள் வேளாண்மையும், நெசவும் ஆகும். நெல், கோதுமை, பார்லி, பருத்தி, சோளம், தேயிலை, பட்டுப்புழுக்களுக்கான முசுக்கட்டை மரம், புகையிலை முதலியவை இங்கு விளைவிக்கப்பட்ட பொருள்கள். பயிர்த் தொழிலை ஏற்றுக்கொண்ட எல்லாக் குடும்பங்களும் பெரும்பாலும் கிராமங்களில் தத்தம் பண்ணைகளில் வீடுகளை அமைத்துக்கொண்டன, பெரும் நிலப்பிரபுக்கள், வணிகர், அரசாங்க அலுவலர் முதலியோர் அடங்கிய சிறுவகுப்பு நகரங்களில் வாழ்ந்தது. சீனர் கையாண்ட சமயக் கொள்கைகள், கன்பூசியஸ்

என்பவரால் கி. மு. ஆரும் நூற்ருண்டில் வகுக்கப் பட்டன; இவர், மக்கள் ஒருவருக்கொருவர் கையாள வேண்டிய ஒழுங்கு விதிகளை வகுத்தார்; ஏறக்குறைய இதேகாலத்தில் வாழ்ந்த லாவோட்செ என்பவர் இயற்கை வாழ்வுக் கோட்பாட்டை வகுத்தார். கி. பி. முதலாம் நூற்ருண்டுக்குப் பின்னர் பௌத்த சமயம் இந்தியாவிலிருந்து வந்தது. பாகியான், ஹியூவன் சாங் முதலிய சீன பௌத்தர்கள் இந்தியாவுக்கு வந்துள் ளனர். (கி. பி, நான்காம், ஏழாம் நூற்ருண்டுகளில்.) இந்நாட்டில் பண்டைக் காலத்தில் அச்சுத்தொழில், காகிதம் செய்தல், பட்டு நெசவு, வெடி மருந்து செய்தல், பீங்கான் பொருள் செய்தல் முதலியவை முதன்முதலில் தோன்றின. எனினும் பல உலோகச் சுரங்கங்கள் நன்கு பயன்படுத்தப்படாமலும், போக்குவரவுத் துறைகள் விரிவாக்கப்படாமலும் இருந்தன. சீனர் தம் குடும்பத் துக்கே பற்றுறுதி கொண்டு, நாட்டு உணர்வு குறைந்து இருந்தனர்.

3. இந்நாடு கி. மு. 2200 முதல் கி. பி. 1911-ம் ஆண்டுவரை பல்வேறு அரச குடும்பங்களினுடைய ஆட்சியில் இருந்தது. கி. பி. 1260-ம் ஆண்டுவரை இதனை ஆண்ட அரச குடும்பங்கள், ஹ்சியா, ஷாங், சௌ, சின், ஹான், சுயி, டாங், சுங் முதலியவை; சின் குடும்பத்தில்வந்த முக்கியமான அரசராகிய ஷிஹ்வாங்டி என்பவர் (கி. மு. மூன்ரும் நூற்ருண்டு) தனது நாட்டின் மீது அடிக்கடி படைஎடுத்துவந்த தார்த்தாரிய மக்கள் கூட்டத்தைத் தடுப்பதற்காக, வடஎல்லையில் பெரும் பகுதியில் சீனப்பெருஞ்சுவர் என்ற சுவரைக் கட்டினுர். அரசர்கள் நாட்டின் எல்லாப்பகுதிகளையும் இணைக்க முடியாமல் இருந்தனர். குடிகளிடமிருந்து வரிப் பொருளைத் திரட்டவும், படைக்குவேண்டிய வீரர்களைத் திரட்டி வைத்திருக்கவும், பலதரப்பட்ட அலுவலர் இருந்

தனர். பதின்மூன்றும் நூற்றுண்டில் மேற்கு ஆசியா விலிருந்து வந்த மங்கோலிய இனமக்கள், சீனுவின்மீது படையெடுத்து அதனுள் நுழைந்தனர். மங்கோலிய வீரரான செங்கிஸ்கான் ஆசியாவின் பெரும்பகுதியை ஆண்ட ஓர்பேரரசர். அவருடைய பேரரே சீனுவின் பேரரசராகிய குப்ளாய்கான் (1259-1274) என்பவர். இவரே சீனுவைச் சிறிதுகாலம் ஆண்ட மங்கோலிய யுவான் அரச குடும்பத்தை நிறுவினுர். இவருடைய ஆட்சியில் இத்தாலிநாட்டின் வெனிஸ் நகரத்தைச் சேர்ந்த மார்க்கோபோலோ என்பவர் சீனுவுக்கு வந்து, பல இடங்களைப் பார்த்துவிட்டுத் தனது நாட்டுக்குச் சென்று, சீனுவின் நாகரிகத்தையும், செல்வத்தையும் புகழ்ந்து கூறினுர், அவர் இந்நாட்டைக் கேதே (Cathay) எனக் குறிப்பிடுகிருர்.

மிங்கு குடும்பத்தவருடைய ஆட்சி: (1368-1644) மிங்கு அரசர்கள் சீனர்களே ஆவர். இவர்கள் யுவான் குடும்பத்தவருடைய ஆட்சியை ஒழித்தனர். எனினும் மங்கோலிய இனமக்கள் சீனரோடு கலத்துவிட்டனர். இவர்களுடைய காலத்தில் சீனநாடு நடு ஆசியாவிலும், தெற்கிலும் பரவிவரலாயிற்று. போர்ச்சுக்கீசியரும், டச்சுக்காரரும் பதினுறும் நூற்றுண்டில் கடல்வழியாகச் சீனுவுடன் வாணிபத்தொடர்பு வைத்துக்கொள்ள முயன்றனர். மஞ்சு அரசர்கள் (1634–1911): இவர்களே சீனுவை ஆண்ட கடைசி அரச குடும்பத்தார். இவ்வரசர் களுடைய காலத்தில் ஐரோப்பியர் வாணிபத்துக்காகச் சீனுவில் நுழைய முயன்று, சீனுவின் ஒரு சில இடங் களில் 19-ம் நூற்றுண்டுவரை வாணிபம் செய்தனர். பின்னர் பல்வேறு சூழ்நிலைகளில் மஞ்சு அரசர்கள் ஐரோப்பியருக்குத் தமது நாட்டில் நுழைய இடங் கொடுக்கவேண்டியதாயிற்று. இந்த நிலைமை இவ்வரசர்

களுடைய ஆட்சியின் வலிமையைக் குறைத்து, முடிவில் முடியாட்சியை ஒழிக்க இருந்த பல்வேறு காரணங்களில் ஒன்ருக ஆயிற்று.

(4) 1911-ம் ஆண்டின் குடியரசுப் புரட்சியைத் தோற்றுவித்த காரணங்கள்:-

(1) சீனவிலிருந்த மஞ்சுக்களின் முடியாட்சி பொதுவாக நாட்டின் ஒற்றுமைக்கும், வளர்ச்சிக்கும் வழிவகுக்கவில்லை. பண்டைக் காலத்திலேயே நில மானியப் பிரபுக்கள் நாட்டின் பலபகுதிகளிலும் சிற்றரசர்களாக இருந்து ஆட்சிசெய்தனர். நாடு முழுவதும் ஒரே அரசாங்கத்தின் அதிகாரத்துக்கும், சட்டங்களுக்கும் கட்டுப்பட்டநிலையில் இல்லை. நிலமானியச் சிற்றரசர்களுக்கிடையிலும், அவ்வப்போது சண்டைகள் நிகழ்ந்துகொண்டிருந்தன. இதனல் நாட்டில் அமைதியும், ஒழுங்கும் இன்றி, பெருவாரியான வறியமக்கள் அல்லலுற்றனர். இதுவே அரசர்களின் அதிகாரத்துக்கு இருந்த மதிப்பை மிகவும் குறைந்தது.

(2) நாட்டில் முன்பே இருந்த வகுப்பு வேறுபாடுகள், மக்கட் பெருக்கத்தினுலும், பொருளாதார வளர்ச்சி குன்றியதனுலும், மஞ்சு அரசர்கள் காலத்தில் மிகவும் விரிவாக ஆயின. நாட்டின் இயற்கைச் செல்வ வளத்தை நன்கு பயன்படுத்துவதற்கு வேண்டிய தொழில் கல்விப் பயிற்சி மக்களுக்கு இல்லை; அரசாங்கமும் இதற்காக ஏதும் செய்யவில்லை; எனவே சமுதாயத்தில் அளவில் பெரியதும், வறியவர் நிறைந்ததுமான வகுப்பைச் சேர்ந்தமக்கள், தத்தம் குடும்பங்களைக் காக்கும் முயற்சியோடும், உணர்வோடும் இருந்தனரே யன்றி, நாட்டு உணர்வையும், ஒற்றுமையையும வளர்க்கும் நிலையில் இல்லை; எனவே அயல்நாட்டவர் வந்து

சீனாவில் வன்முறையின் மூலம் வாணிபச் சலுகைகளைப் பெறத்தக்க சூழ்நிலை இருந்தது. இந்நிலை மஞ்சு அரசர்களுடைய அரசாங்கத்தின் நலிவைக் காட்டிற்று.

3 மஞ்சு அரசர்கள் ஐரோப்பிய நாட்டினருக்கு அளித்த வாணிபச் சலுகைகளும், நாளாவட்டத்தில் அவர்களுக்கெதிராக வலிய ஒரு எதிர்ப்பு உணர்ச்சியைத் தோற்றுவித்தன. பிரிட்டன் கஞ்சாப் பொருளைப் பெருமளவில் சீனாவில் இறக்கி வாணிபம் செய்தது; கஞ்சா வாணிபத்தை மஞ்சு அரசாங்கம் தடைசெய்தது; எனினும் கள்ளத்தனமான முறையில் இவ்வாணிபம் நடைபெறவே, 1842-ல் கஞ்சா கொண்டுவந்த ஒரு பிரிட்டிஷ் கப்பலை மஞ்சு அரசாங்க அதிகாரி ஒருவர் கைப்பற்றி அழிக்க, இதற்கெதிராக பிரிட்டன் சீனாவிடம் வாணிபம் செய்யும் உரிமைகளைக் கேட்க, சீனா மறுக்க, போர் மூண்டது. பிரிட்டன் வெற்றி பெற்றது. பிரிட்டனுக்குச் சீனா நஷ்டஈடு கொடுத்ததுமன்றி, ஹாங்காங்கையும் மேலும் ஐந்து துறைமுகங்களையும் பிரிட்டனின் வாணிபத்துக்குத் திறந்து விட்டது. இவ்வாறு செய்யப்பட்ட ஒப்பந்தமே "சமத்துவமில்லா ஒப்பந்தம்" (unequal treaty) எனப்படும். சீனாவில் வாணிபம் செய்யும் பிரிட்டிஷ் வணிகர், தாங்கள் வாழும் சீன நகரங்களில் சீன நாட்டுச் சட்டங்களுக்கு கட்டுப்பட்டு இராமல், பிரிட்டிஷ் சட்டங்களுக்கே கட்டுப்பட்டிருக்கும் உரிமை பெற்றனர். இத்தகைய உரிமைகளுக்கு விசேட நில உரிமைகள் (extra territorial rights) என்று பெயர். பிரிட்டன் அடைந்த இந்தச் சலுகைகளைப் பார்த்து, ருஷ்யாவும், ஜெர்மனியும், ஐக்கிய அமெரிக்காவும், தொழிலிலும், வாணிபத்திலும் முன்னேறிக்கொண்டு வந்தும், சந்தைகளுக்காகக் குடியேற்ற நாடுகளை அடைய முயன்றும் வந்த ஜப்பானும், சீனாவிடம் மேற்படி சலுகைகளைப் பெற முன்வந்தன. 1858லும், 1860-லும்

கையெழுத்தான பல ஒப்பந்தங்கள் மேலும் பல சீனத் துறைமுகங்கள் அயலவர் வாணிபத்துக்குத் திறந்து விடப்படவும், பல சலுகைகள் அயலவருக்கு வழங்கப் படவும் வழிவகுத்தன. இந்த அயலவர் வருகை மஞ்சு அரசர்களின் வலியற்ற நிலைமையைக் காட்டிற்று.

4. மஞ்சு அரசர்கள் அயலவர்களுக்கு அளித்த சலுகைகளைக் கண்ட சீனக் குடியானவர் அரசாங்கத்துக் கெதிராகக் கலகம் செய்தனர். சீனத் துறைமுகங்களில் அயலவருடைய வாணிப உரிமைகளைக் காப்பதற்காக அமெரிக்க பிரிட்டிஷ் படைகள் குடியானவர்களை அடக் கினர். சீனக் குத்துச்சண்டை வீரர்கள் 1900-ல் அயல வர்களுக் கெதிராக, மஞ்சு அரசர்களின் இரகசிய ஆதர வைப் பெற்றுக் கலகம்செய்தனர். இதனையும் அமெரிக்கப் படைகளடங்கிய ஒரு சர்வதேசப்படை அடக்கிற்று. நஷ்டஈடாக அயலவருக்குச் சீன அரசாங்கம் பெருந் தொகை 330,000,000 அளித்தது. சீனரிடையே அயல வர்மீது வெறுப்பு வளர்ந்தது.

5. ஜப்பான் சீனுவில் 1894 – 1895-ல் வெற்றியாகப் போரிட்டு லியோடங் தீபகற்பத்தைப் பெற்றது. 1899-ல் எல்லா நாடுகளுக்கும் பின் தங்கிய நாடாகிய சீனுவில் ஒத்த வாணிப உரிமை இருத்தல் வேண்டுமென்ற ஓர் கொள்கையை (open door policy) ஐக்கிய அமெரிக்கா வலியுறுத்திற்று. 1904 – 5-ல் ஜப்பான் ரஷ்யாவைத் தோற்கடித்து, சீன மாகாணமாகிய மஞ்சூரியாவைக் கைப்பற்றிய ஒரு செயல், சீனுவில் மஞ்சு அரசாங்கத்தின் செயலற்ற தன்மையை எடுத்துக்காட்டிற்று.

இத்தகைய காரணங்களால், நாட்டில் பொது வுடைமை உணர்வும், தேசிய உணர்வும், குடியாட்சி உணர்வும் பரவுதல் வேண்டுமெனவும், குடியரசு நிறுவப்

படுதல் வேண்டுமெனவும் டாக்டர் சன்யாட் சென் என்ற தலைவரின் கீழ், தேசியக் கட்சியினர் முயன்று வேலை செய்தனர். 1911-ல் அவர்கள் கலகம் செய்து, மஞ்சு அரசின் முடியாட்சியை ஒழித்தனர். 1912-ஜனவரியில் சீனக் குடியரசு தோன்றிற்று.

5. 1912 முதல் 1950 வரை சீனக்குடியரசில் பல் வேறு நிகழ்ச்சிகள் நடைபெற்றன. சன்யாட்சென் முதல் குடியரசுத் தலைவராக ஆயினர் அவரால் நாட்டை இணைக்க முடியவில்லை; பல இராணுவத் தலைவர்கள் படைதிரட்டி, குடிகளிடம் வரி வாங்கிப், பல்வேறு மாகாணங்களில் ஆட்சி செய்தனர். அவர்கள் தமக்குள் போரிட்டனர். சன்யாட்சென் தலைமைப் பதவியை நீத்துவிட, யுவான் ஷிகேய் என்ற தளபதி குடியரசுத் தலைவராக 1916 வரை இருந்தார். முதல் உலகப் போரில் சீனவில் பல இடங்களைக் கைப்பற்றிய ஜப்பான், அங்கு ஒப்பந்தங்களின் மூலம் பல சலுகைகளைப் பெற்ற ஐரோப்பிய நாடுகளைப்போல, அவற்றைத் தன்வசம் வைத்துக்கொண்டது. போர் முடிந்ததும் சீனவில் புதிய சூழ்நிலை ஒன்று உருவாயிற்று. சோவியத் ரஷ்யாவின் பொதுவுடைமை அரசாங்கம், சீனவில் பணமும், போர்க் கருவிகளும், ஆலோசகர்களும் அனுப்பி சன்யாட்சென்னின் கீழ் நாட்டை இணைப்பதற்கு உதவி செய்தது. 1925-ல் அவர் இறந்த பின், சியாங்கே ஷேக் தேசியக் கட்சியின் தலைவராக ஆயினர்; அவர் சீனவின் வட மாகாணங்களைக் கைப்பற்றினர். பொதுவுடைமைக் கட்சியினர் வலுவாயினர். முதலில் இக்கட்சியினரும், சியாங்கும் ஒத்துழைத்தாலும், பின்னர் பிரியலாயினர். சியாங் நாங்கிங்கைத் தலைநகரமாகக்கொண்டு, வட சீனவின் சில பகுதிகளை ஆட்சிசெய்தார். தேசியக் கட்சியின் இன்னெரு பிரிவு தெற்கில் ஆட்சி செய்தது. நாடு முழுவதையும் தனது ஆட்சியில் கொண்டு

வருவதற்கு சியாங் மேற்கொண்ட முயற்சிகள், ஜப்பான் 1931-ம் ஆண்டு மஞ்சூரியாவைக்கைப்பற்றத் தொடங்கிய நாளிலிருந்து, தோல்வியடைந்தன, ஜப்பான்மே பேரில், சியாங் வடசீன வெளியில் ஐந்து மாகாணங் களுக்குச் சுதந்திரம் அளித்தார். பொதுவுடைமைக் கட்சியினருடைய கையில் இருந்த மாகாணங்களை சியாங்கினல் கைப்பற்ற இயலவில்லை. 1937-ம் ஆண்டில் ஜப்பான் சீனக் கடற்கரைப் பகுதியைத் தாக்கிப் பெரும் பாலான இடங்களைப்பிடித்தது. இரண்டாம் உலகப் போரில் அமெரிக்கா முதலிய நேசநாடுகளோடு சீனு சேர்ந்து, அச்சு நாடுகளோடு (ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான்) போரிட்டது. அமெரிக்கப்படை அலுவலர் சியாங்குக்கு உதவியளித்தனர் சீனுவில் தமக்கு இருந்த விசேட நிலச் சலுகைகளையெல்லாம் பிரிட்டனும், அமெரிக்காவும் 1943-ம் ஆண்டில் கைவிட்டன, நாடு முழுவதையும் ஜப்பானிடமிருந்து விடுவிக்க பிரிட்டனும், அமெரிக்காவும், சீனுவுக்கு உதவி செய்வதாக ஒப்பந்தம் செய்தன.

6. போருக்குப்பின் பொதுவுடைமைக் கட்சியே நாடு முழுவதையும் கைப்பற்றி, ஆட்சியை நிறுவ வழி உண்டாயிற்று. இரண்டாம் உலகப்போரில் ரஷ்யப் படைகள் ஜப்பானிடமிருந்து கைப்பற்றிய வடகிழக்குச் சீனுவை 1946-ல் விட்டுவிட்டுத் திரும்பியதும், பொது வுடைமைப் படைகள் அவற்றைப் பிடித்துக்கொண்டு, தெற்கு நோக்கிச் சீனு முழுவதையும் கைப்பற்றி வரவும், சியாங்கின் தேசீயப் படைகளுடன் மோதல் தவிர்க்க முடியாததாயிற்று. அவற்றுக்கு ரஷ்யாவும், தேசீயப் படைகளுக்கு அமெரிக்காவும் உதவிசெய்தன. வறியவர் மிகுந்த சமுதாயமும், ஊழல்நிறைந்தசியாங்கின் தேசீய அரசாங்கத்தின்மீது அவர்களுக்கிருந்த வெறுப்பும், தேசீயக் கட்சியினருக்குத் தோல்வியைத் தந்தன. 1949

இறுதிக்குள் சீன நாடு முழுவதும் பொதுவுடைமைக் கட்சியின் ஆட்சிக்குள் வந்துவிட்டது. தேசிய அரசாங்கம் பார்மோசாவுக்குச் சென்றுவிட்டது; அதற்கு அமெரிக்காவின் பாதுகாப்பு இருக்கிறது. புதிய பொதுவுடைமைச் சீனாவின் அரசாங்கத்துக்கு, ஐக்கிய அமெரிக்க நாட்டைத் தவிர மற்ற நாடுகள் ஒப்புதல் அளித்தன. அதில் மாசேதுங் குடியரசுத் தலைவராக 1959-ம் ஆண்டுவரை இருந்தார். ஆட்சி பொதுவுடைமைச் சர்வாதிகார ஆட்சியே. அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில்தான் நாட்டின் வேளாண்மையும், எல்லாத் தொழில்களும் அமைக்கப்பட்டன. இதனுடைய அயல் நாட்டுக்கொள்கை, பெரும்பாலும் ரஷ்யாவினுடையதைப் போன்றே, அமெரிக்காவுக்கு எதிர்ப்புக் காட்டும் கொள்கையாக இருக்கிறது. அமெரிக்காவின் தடை அதிகாரத்தால் இப்பெரிய நாட்டுக்கு ஐ. நா. சபையில் உறுப்பினர் நிலைமை கிடைக்கவில்லை. இப்பொழுது ஆசியாவில் இது தலைமை இடம் பெறும் நோக்கத்தில், பல செயல்களைச் செய்துவந்துள்ளது. 1950ல் இது தென் கொரியாவைத் தாக்கியும், திபெத்தைக் கைப்பற்றியும், இந்தோ சீனாவில் கம்யூனிஸ்டுகளுக்கு உதவி அளித்தும், அணு ஆராய்ச்சி செய்தும், இந்தியாவைத் தாக்கியும் (1962), பொதுவுடைமை நாடுகளில் ரஷ்யாவுக்கு உள்ள தலைமை நிலைமையை எதிர்த்தும் வந்துள்ளது.

### (3) இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சியின் விளைவுகள்

1. முன்னுரை. 2. இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி நிறுவப்படுதல் 3. விளைவுகள்:- (1) அரசியல், (2) அரசாங்கம், (3) சமுதாயம், சமயம் (4) பொருளியல் முதலிய துறைகளில்.

1. இந்திய நாட்டின் வரலாற்றில் கடந்த இரண்டு நூற்றாண்டுக்காலத்தில் குறிப்பிடத்தக்க முக்கிய நிகழ்ச்சி, ஆங்கிலேயர் இந்நாட்டைச் சிறிது சிறிதாகக் கைப்பற்றித் தமது ஆட்சியை நிறுவியதும், பல செயல்களைச் செய்தபின் இந் நாட்டை விட்டுச் சென்றதும் ஆம். இந் நாடு முதன் முதலாக இனம், சமயம், நாகரிகம் ஆகியவற்றில் வேறு பட்ட ஓர் நாட்டினுடைய ஆட்சியில் ஏறக்குறைய இருநூறு ஆண்டுக் காலம் இருந்தது. எனவே இத்தகைய அவருடைய ஆட்சியில், வாழ்வின் எல்லாத்துறைகளிலும் என்னென்ன மாறுதல்கள் எந்த இயல்பில் ஏற்பட்டன, என்று நாம் கவனிக்கலாம்.

2, ஆங்கிலேயருடைய வருகைக்கு முன்பு நம்நாடு பல சுதந்திர அரசுகளாகப் பிரிந்து இருந்தது. இந்தியாவின் பெரும்பகுதியிலும் முகலாயப் பேரரசு பரவியிருந்தது. முகலரசர் ஜிஹாங்கீரின் ஆட்சியில் ஆங்கிலக்கிழக்கிந்தியக்கம்பெனி நம் நாட்டில் வாணிபம் செய்வதற்காகச் சில உரிமைகள் பெற்றது. சூரத், பம்பாய், சென்னை, கல்கத்தா முதலியவை அவர்களுடைய வணிக நிலையங்களாக இருந்தன. முகலரசு 18-ஆம் நூற்றாண்டில் மறையத் தொடங்கவும், வாணிபத்திற்காக இந்தியாவுக்கு வந்த ஆங்கிலேயரும், பிரஞ்சுக்காரரும் தத்தம் வாணிபவளர்ச்சிக்காகவும், ஆதிக்கத்துக்காவும் போட்டியிட்டனர். ஆற்காடு நவாப் முகமது அலிக்கு ஆங்கிலேயரும் சந்தாசாகிப்புக்குப் பிரஞ்சுக்காரரும் உதவியளித்தனர். பிரஞ்சுக்காரர் ஆங்கிலேயரால் இறுதியாக 1760-ல் தோற்கடிக்கப்படவும், தென் இந்தியா ஆங்கிலரது ஆதிக்கத்தில்வர வழிஏற்பட்டது. 1757-ல் வங்காளத்தில் பிளாசிச்சண்டையில் ஆங்கிலத்தளபதி கிளைவ் வங்காள நவாப் சிராஜ்உட்டௌலாவைத் தோற்கடித்தார். ஆங்கிலேயர், வங்காளம், பீகார், ஒரிசா ஆகிய மாகாணங்

களில் படைதிரட்டவும், அமைதியை நிலைநாட்டவும் உரிமைகள் பெற்றனர். 1764-ல் ஆங்கிலேயரால் தோற்கடிக்கப்பட்ட, முகலரசர் ஷா ஆலம் II, 1765-ம் ஆண்டின் அலகாபாத் உடன்படிக்கையின்மூலமாக, மேற்கூறிய மூன்று மாகாணங்களிலும், நிலவரியை வாங்கவும், நீதிவழங்கவுமான அதிகாரங்களை ஆங்கிலேயருக்குக் கொடுத்தார். இச்சூழ்நிலையில்தான், முதல் முதலாக, ஆங்கிலேயர் நம்நாட்டில் தாம் கைப்பற்றிய இடங்களில், தமது ஆட்சிப் பொறுப்புக்களை நிறைவேற்றத்தக்க ஆட்சித்துறைகளை உருவாக்கினர். பின்னர் அவர்கள் மைசூர் அரசர்களான ஹைதர்அலி, திப்புசுல்தான் முதலியோரைத் தோற்கடித்து, அந்நாட்டை ஆங்கிலேய ஆட்சிக்கு அடங்கிய சிற்றரசாக 1799-ல் ஆக்கினர். வெல்லெஸ்லி பிரபு தஞ்சாவூரை1799–லும், தமிழகத்தின் கிழக்குக்கரையிலுள்ள மற்றமாவட்டங்களை (கர்நாடகம்) 1801–லும், சென்னை அரசாங்கத்தோடு இணைத்து, சென்னை மாகாணத்தைத் தோற்றுவித்தார். மூன்று போர்களுக்குப் பின்னர், ஆங்கிலேயர் மராட்டியரைத் தோற்கடித்துப் பம்பாய் மாகாணத்தைத் தோற்றுவித்தனர். டல்ஹௌசி பிரபு சீக்கியரை 1849–ல் தோற்கடித்துப் பஞ்சாபை இணைத்தார்.; மேலும் அவர் வழி உரிமை இல்லாத ஏழு அரசர்களுடைய சிறு சுதந்திர நாடுகளையும் இணைத்தார். இதனாலும், வேறுசில காரணங்களாலும், ஆங்கில அரசாங்கத்தின் படையிலிருந்த இந்தியவீரர்கள் 1857–58-ல் ஆங்கில ஆட்சியை எதிர்த்துக் கலகம் செய்தனர். இது அடக்கப்பட்டு, ஆங்கிலப் பாராளுமன்றத்தின் ஆட்சியில், இந்தியா முழுவதும் வைக்கப்பட்டு, இந்தியச் சிற்றரசர்களுடைய வழி உரிமைகள் ஒப்புக்கொள்ளப்பட்டு, அவர்களுடைய அரசியல் நிலைமையும், ஆங்கில அரசாங்கத்திற்குக் கட்டுப்பட்டிருக்குமாறு அமைக்கப்பட்டன.

இவ்வாறு ஆங்கில ஆட்சியில் முழுவதும் வந்தநம்நாடு, 1947-ம் ஆண்டு, ஆகஸ்டு, மாதம், 15-ம் நாள் இரண்டு சுதந்திர நாடுகளாகப் பிரிக்கப்பட்டது.

3. இந்தியாவில் ஆங்கிலஆட்சியின்

நாம் தேசியக்கோணத்திலின்றும் நோக்காமல், காரண காரியவகையாக, விஞ்ஞான நோக்கில் பார்த்துச் சுருக்கிக்கூறலாம்.

1. அரசியல் விளைவுகள்:- அரசியல் இணைப்பு: (Political unification) அசோகரது ஆட்சிக்குப் பின்னர் நமதுநாடு, ஆங்கிலேயருடைய ஆட்சிக்காலத்திலேதான் ஒரே அரசாங்கத்தின் கீழ் இணைக்கப்பட்டிருந்தது. பல்வேறு இந்திய அரசுகள் இருந்தாலும், அவையெல்லாம் பிரிட்டிஷ் இந்தியஅரசாங்கத்தோடு,பல்வேறு ஒப்பந்தங்களினால்இணைக்கப்பட்டிருந்தன. எனவேநேராக பிரிட்டிஷாரால் ஆளப்பட்ட இந்தியமாகாணங்களிலும், இந்திய சிற்றரசுகளிலும், ஏறக்குறைய ஒரே முறையான ஆட்சி முறை நிலவ வழிஉண்டாயிற்று. இவ்வாறு நம்நாடு ஆங்கிலேயரது ஆட்சிக் காலத்தில் சுயஆட்சியின்றி இருந்தாலும், பண்டைய பலசுதந்திர அரசுகளெல்லாம் ஒரே அரசு முறையில் இணைக்கப்பட்ட நிலையில் இருந்தது; இவ்வரசியல் இணைப்பும், பிற்காலத்தில் தேசிய உணர்வு தோன்றக் காரணமாக இருந்தது.

2. அரசாங்க அமைப்பு:-பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் ஆங்கில அரசாங்கத்தின் கட்டுப்பாட்டில் இயங்கிய ஒரு சார்பு அரசாங்கமாக (dependent government) இருந்தது.

இந்தியருக்குச் சிறிது சிறிதாக அரசாங்கத்தில் பங்கு கொடுக்கப்பட்டது, (இதன் விவரங்களை அடுத்த கட்டுரையில் காணலாம்.) அரசாங்கத்தின் ஆட்சித் துறைகளிலும், 1835-ம் ஆண்டுக்கும் பின்னர்தான்

இந்தியருக்குச் சில அலுவல்கள் கொடுக்கப்பட்டன. நடைமுறை அரசியலில் இந்தியருக்குப் பெருமளவில் பங்கு இல்லாவிட்டாலும், அவர்கள் ஆங்கில அரசியலறிஞர்களுடைய குடியாட்சிக் கருத்துக்களையும், தற்காலப் பாராளுமன்றக் குடியாட்சி முறையின் பழக்க வழக்கங்களையும் கற்றறிந்தனர். ஆங்கில அரசாங்கம் ஆங்கில மொழியை இந்தியாவின் ஆட்சி மொழியாக 1835-ம் ஆண்டில் ஆக்கிற்று. ஆங்கில இலக்கிய வளர்ச்சியையொட்டி, உரைநடை, செய்யுள், திறனாய்வு இலக்கியங்கள் முதலியவை இந்திய மொழிகளில்எழுதப்படலாயின. ஆட்சித்துறையில் இம்மொழியின் மூலமாகப் பணிபுரிவதற்கு இந்தியர்களுக்குப்பயிற்சியளிக்கும்நோக்கத்தோடு, மேற்கத்திய பல்கலைக்கழக, உயர்தரக் கல்வி முறைகள் நம் நாட்டில் கொண்டுவரப்பட்டன. குறிப்பிட்ட இந்த நோக்கங்களுக்காக மேல்நாட்டுப் படிப்பை நம்மவர் மேற்கொண்டாலும், நாளாவட்டத்தில் மேற்கத்தியாருடைய அரசியற் கருத்துக்கள்—குறிப்பாக எட்மண்ட் பர்க் எழுதிய சுதந்திரப் பாராளுமன்ற ஆட்சிக் கருத்துக்களும், ஜான்ஸ்டுவர்ட்மில் (john S. Mill) என்பவர் எழுதியபிரதிநிதித்துவ அரசாங்கமுறை,சுதந்திரம்ஆகிய கருத்துக்களும் நம்மவரைப் பெரிதும் கவர்ந்தன; நம் பழைய தேசீயத் தலைவர்கள் இத்தகைய கருத்துக்களை வரவேற்று, நாட்டில் தேசீய உணர்வும், சுயாட்சி உணர்வும் உயிர்த்தெழச் செய்தனர். 1885-ம் ஆண்டில் திறுவப்பட்ட இந்திய தேசீய காங்கிரஸ், நாட்டின் விடுதலைக்காக நாளாவட்டத்தில் செயல்படலாயிற்று. இவ்வாறு ஆங்கிலக் கல்வி மறைமுகமாக நம் தேசீய உணர்வுக்கு வழிவகுத்தது.

(3) சமுதாய அமைப்பைப் பொறுத்தவரையில் பிரிட்டிஷ் ஆட்சியால் பெருமளவு மாறுதல் தோன்ற

வில்லை; எனினும் 'அரசாங்கச் சட்டத்தின் முன்னர், குடிமக்கள் யாவருக்கும் ஒத்தநிலையே உண்டு' என்ற கருத்து முதன்முதலாக நம் நாட்டில் செயல்படலாயிற்று. பண்டைக்காலத்தில் இந்து அரசாங்கங்களில், பல்வேறு வகுப்பினருக்கும், அரசாங்கச் சட்டத்தின் முன் ஒத்தநிலை இல்லை. 'குற்றவாளி எவ் வகுப்பினராயினும் சட்டத்தில் விதிக்கப்பட்ட தண்டனைக்கு உரியர்,' என்ற கொள்கையை ஒட்டி, ஆங்கில அரசாங்கம் நீதிவழங்கிற்று; இது சமூதாயத்தில் பல்வேறு வகுப்பாரிடையேயும் ஓரளவு சமத்துவ நிலையைத் தோற்றுவித்தது.

சமயத்துறை பற்றிய கருத்துக்களும், மேற்கூறிய சமத்துவக் கருத்தையொட்டி நம்மவரிடை வளரலாயின. கிறிஸ்தவ சமயக் கோட்பாட்டினால் வலியுறுத்தப்படும் சமுதாய சமுத்துவம் என்ற கருத்தையொட்டி, இந்து சமயத்துக்குப் புத்துயிரளிக்கும் நோக்கத்தோடு, பல மீட்பு இயக்கங்கள் (revivalist movements) தோற்றுவிக்கப்பட்டன. எடுத்துக்காட்டாக இராஜாராம் மோஹன்ராய் என்பவர் 1828-ல் பிரம்ம சமாஜத்தையும், தயானந்த சரஸ்வதி என்ற பெரியவர் 1875-ல் ஆரிய சமாஜத்தையும் நிறுவினர். சுவாமி விவேகானந்தர் (1862–1902) இந்து சமயத்துக்குப் புத்துயிரளித்தார்.

(4) பொருளியல் துறையைப் பொறுத்தவரையில், வரலாற்றில் காணப்படும் எல்லா ஏகாதிபத்திய நாடுகளும் செய்ததைப்போல, இங்கிலாந்தும் நம் நாட்டைத் தனது செல்வ வளத்தைப் பெருக்க ஆட்சி செய்ததனால், நம் நாடு பொருளாதார வளர்ச்சியில் தாழ்ச்சியுற்றது. அதனுடைய கச்சாப் பொருள்கள் ஆங்கில நாட்டுத் தொழிற்சாலைகளை இயக்கும் பொருட்டு, அந்நாட்டுக்கே ஏற்றுமதி செய்யப்பட்டன; இந்நாட்டில்

கனரகத் தொழில்கள் பெரும்பாலும் நிறுவப்படவில்லை. சிறுதொழில்களும், தற்காலப் போக்குவரவு சாதனங்களும், செய்தித்துறை வசதிகளும் ஆங்கில ஆட்சியால் நம்நாட்டில் கொண்டுவரப்பட்டாலும், அவை ஆங்கிலத் தொழில்களும், வாணிபமும் வளரவே பெரும்பாலும் கையாளப்படுதற்கு இருந்தன. தற்கால வாழ்க்கைக்குரிய புதிய பல பொருள்களை, நம் நாட்டவர் ஆங்கிலரின் மூலமாகப் பெற்றனர்; இவற்றாலும், நாம் ஆங்கில நாட்டவரின் தொழிலையும், வாணிபத்தையுமே சார்ந்திருக்க வேண்டியதாயிற்று.

ஆங்கில ஆட்சியின் விளைவாக நம் நாட்டில் பல நன்மைகளும், குறைபாடுகளும் தோன்றியதை நாம் காண்கிறோம்.

## (4) ]ந்திய 'ய இயக்கம்

(1) முன்னுரை (2) தேசிய உணர்வு தோன்றிய சூழ்நிலைகள் (3) தேசிய இயக்கத்தின் தோற்றம்: இந்திய தேசிய காங்கிரஸ்-நோக்கங்கள், செயல்கள் (4) பிரிட்டிஷ் அரசாங்கம் கையாண்ட கொள்கை. (1) 1909-ம் ஆண்டுச் சட்டம்; (2) 1919-ம் ஆண்டுச் சட்டம் (3) 1935-ம் ஆண்டுச் சட்டம் – காந்தியடிகளின் தலைமையில் தேசிய இயக்கம். (5) இரண்டாம் உலகப் போரும், இந்தியா சுதந்திரம் பெறுதலும்.

1. ஒரு மக்கட் சமுதாயமானது இனம், மொழி, சமயம் முதலியவற்றால் மட்டுமல்லாமல், பொதுவான வரலாற்று மரபினாலும் (common historic traditions) ஒற்றுமைப் படுத்தப்பட்டு, அது தனக்கெனச் சுதந்திர

னான அரசாங்க அமைப்பை நிறுவுதல் வேண்டுமென உரிமை கோரினால், அந்தச் சமுதாயமானது தேசிய உணர்வைப் (Nationalism) பெற்றிருப்பதாகக் கருதப் படும். நமது நாடு ஆங்கிலேயருடைய ஆட்சியில் ஏறக் குறைய நூற்றைம்பது ஆண்டுக்காலம் இருந்தது. அவ் வாறு அது இருக்கும்போதே 19-ம் நூற்றாண்டினிறுதி யிலேயே, நம் நாட்டினரிடையே தேசிய உணர்வு தோன்றி, வளர்ந்து, வலுவடைந்து, பல்வேறு சூழ்நிலை களினால் இந்தியா சுதந்திரம் அடைவதற்கு உதவி யாயிற்று.

2. இத்தகைய தேசிய உணர்வு தோன்றுவதற்குப் பிரிட்டிஷாருடைய ஆட்சியிலேயே பல நல்ல சூழ்நிலை கள் தோன்றின. ஆங்கிலேயர் நாடு முழுவதையும் ஒரே அரசாங்கத்தின் மூலமாக இணைத்ததும், அவர்கள் நிறுவிய ஒரேவகையான ஆட்சிமுறையும், நாட்டுமக்கள் நாளடைவில் சுதந்திரத்துக்காக ஒன்றுபடும் மன இயல்பை உண்டாக்கின. மேலும் ஆங்கில அரசிய லறிஞர்கள் எழுதிய குடியாட்சி அரசாங்கமுறைபற்றிய கருத்துக்களை இந்தியர் கற்கவும், நம்நாட்டு அரசாங் கத்தில் நமது மக்களுக்குப் பங்கும்,பொறுப்பும்,இருத்தல் வேண்டுமென்ற கருத்து அவர்களிடம் தோன்றிற்று. இந்த எண்ணத்தை நன்கு மதித்து, அதற்கு ஊக்கம் கொடுக்க வேண்டுமென்ற நல்ல எண்ணத்தோடு, வைசிராயாக இருந்த ரிப்பன் பிரபு (1880-1884), நம் நாட்டில் உள்ளூர் ஆட்சிக் கழகங்களில், அந்தந்த உள்ளூர்ப் பிரிவுகளிலுள்ள குடிகள், தம்மிடையேயுள்ள வரையே உறுப்பினராகத் தேர்ந்தெடுத்து, உள்ளூர் ஆட்சிப்பொறுப்பை ஏற்று நடத்துமாறு செய்தார். இதனால் இந்தியரெல்லாருடைய பெருமதிப்பையும் அவர் பெற்றார். இந்த நல்ல சூழ்நிலையில்தான் 1885-ம்

ஆண்டில் இந்திய தேசியகாங்கிரஸ் தோன்றிற்று. அதை நிறுவியோர் பானர்ஜி, தாதாபாய் நௌரோஜி என்போரும், ஏ. ஒ. ஹ்யூம் என்ற ஆங்கிலேயரும்ஆவர்.

3. தொடக்கத்தில் காங்கிரசின் நோக்கங்கள், இந்தியப் பிரதிநிதிகள் இந்திய அரசாங்கத்துக்குத் துணையாகச் சட்டமன்றங்களில் வரவேண்டுமென்பதும், இந்தியருக்கு அரசாங்க அலுவல்கள் நிறைய வழங்கப்படவேண்டுமென்பதும் ஆகும். ஆனால் நாட்டினுள்ளும், வெளியிலும் நடைபெற்ற சில நிகழ்ச்சிகள், காங்கிரசின் நோக்கங்களை மாற்றின. வைசிராயாகிய கர்சன்பிரபு (1899–1905), வங்காளத்தை இரண்டாகப் பிரித்ததும், காங்கிரசின் நோக்கங்களை இகழ்ந்ததும், பொதுவாக அரசாங்கக் கட்டுப்பாட்டைப் பல்கலைக்கழகங்கள் போன்ற நிலையங்களின்மீது மிகுதியாக நிறுவியதும், படித்த இந்தியரிடையே ஆங்கில ஆட்சியின்மீது பொதுவாக வெறுப்பையே உண்டாக்கின. 1904–5-ல் சிறிய ஆசிய நாடாகிய ஜப்பான், பெரிய ஐரோப்பிய நாடாகிய ரஷ்யாவைத் தோற்கடித்து, வெற்றிபெற்ற நிகழ்ச்சி, பொதுவாக ஆசிய மக்களிடையே ஒரு தன்னம்பிக்கையையும், ஐரோப்பிய ஆட்சிக்கு அடங்கி வாழும் இந்தியரிடையே, தேசீய உணர்வையும் கிளர்ந்தெழச் செய்தது. காங்கிரசின் புதிய தலைவர்களாகிய வ. உ. சிதம்பரம்பிள்ளை, பாலகங்காதர திலகர், லாலா லஜபதிராய் முதலியோர் காங்கிரசின் நோக்கங்களாக அயல்நாட்டுப் பொருள்களை ஒதுக்குதலும், நம் நாட்டுப் பொருட்களைப் பயன்படுத்துதலும், நாட்டுக்குச் சுய ஆட்சி தேடுதலும், என்பனவற்றை வகுத்தனர்.

4. இப்புதிய நோக்கத்துக்கிணங்க காங்கிரஸ் செயல்படவும், பல்வேறு நிகழ்ச்சிகள் நடைபெற்றன. அரசியற் குற்றங்கள் வரவர அதிகமாயின. அரசாங்க

அலுவலை ஏற்றவரெல்லாம் நாட்டின் பகைவரெனத் தாக்கப்பட்டனர். இந்நிலையில் பிரிட்டிஷ் இந்திய அரசாங்கம் ஒரு புறம் அடக்குமுறைக் கொள்கையையும், மறுபுறம் சிறிது அரசியலுரிமைகளை வழங்கும் கொள்கையையும் கடைப்பிடித்தது. முஸ்லிம் லீக் என்ற ஒரு கழகத்தை முஸ்லீம்கள் தங்களுடைய உரிமைகளை அடையும்பொருட்டு ஆகாகான் என்பவர் நிறுவினர்.

(1) பிரிட்டிஷ் பாராளுமன்றம் 1909-ல் இந்திய அரசாங்கச் சட்டத்தை நிறைவேற்றிற்று. (அப்போது இந்தியாவின் வைசிராயாக இருந்த மின்ட்டோ என்பவரும், இந்தியச் செயலாளராக இருந்த மார்லியும் இச்சட்டம் செய்யப்படுதற்குத் துணை செய்ததால் இது மின்டோ மார்லி சீர்திருத்தங்கள் எனப்படும்.) இந்திய அரசாங்கத்திலுள்ள சட்ட மன்றத்தில் முன்பு இருந்த 124 உறுப்பினருக்குப் பதிலாக, 331 உறுப்பினர் சேர்க்கப்பட்டனர்; இதில் தேர்ந்தெடுக்கப்பட்டவர் எண்ணிக்கை 39லிருந்து 126 ஆக உயர்ந்தது. அரசாங்க அலுவலரே பெரும்பான்மையாளராகச் சட்டமன்றத்தில் அமர்த்தப்பட்டு இருந்ததனுல், அவர்களினுதவியால் இந்திய அரசாங்கம் இங்கிலாந்திலிருந்து வரும் ஆணைகளை நிறைவேற்றிவைத்தது. மாகாணச் சட்டமன்றங்களில் நிர்வாக அதிகாரிகளுக்குத் தன்னுரிமை அதிகாரம் இருந்ததனுல், அவற்றில் அலுவலருக்கு இருந்த பெரும்பான்மை நிலை நீக்கப்பட்டது. இச்சட்டம் முஸ்லிம்களுக்குத் தனித் தொகுதிகளை ஏற்படுத்திற்று. இது இந்தியாவில் பாராளுமன்ற, பொறுப்பாட்சி முறையை ஏற்படுத்தவில்லையெனத் தீவிரத் தேசீயவாதிகள் குறை கூறினர்; கோகலே போன்ற மிதவாதிகள் இதனை வரவேற்றனர்.

(2) முதல் உலகப்போரில் (1914-18) இந்திய

வீரர்கள் இங்கிலாந்துக்குச் செய்த உதவியும், தேசீய சுயநிர்ணய உரிமையையும், குடியாட்சியையும் காக்கத் தாம் போர் செய்வதாக நேசக்கட்சியார் கூறிய உறுதி மொழியும், சுய ஆட்சிகோரி இயக்கம்ஒன்று இந்தியாவில் நடத்தப்பட்டதும், பிரிட்டிஷ் அரசாங்கத்தாருடைய இந்தியக்கொள்கையை மாற்றின. இந்தியச்செயலர் மான்டேகு இந்தியாவுக்கு வந்து, வைஸ்ராய் செம்ஸ்போர்ட் பிரபுவுடன் கலந்துபேசி, 1917-ல் பிரிட்டிஷ் பாராளுமன்றத்தில், "பிரிட்டிஷ் பேரரசில் ஓர் பாகமாக இந்தியா இணைந்திருப்பதற்கேற்ற முறையில். இந்தியாவில் சுய ஆட்சி நிறுவனங்களைப் படிப்படியாக விரிவாக்குதலும், இந்தியருக்கு ஆட்சியின் எல்லாத்துறைகளிலும் வர வரக் கூடுதலான அளவில் பங்கு கொடுத்தலும், அரசாங்கத்தின் கொள்கை" என்று கூறினர். 1919-ம் ஆண்டில் இந்திய அரசாங்கச்சட்டம் செய்யப்பட்டது. (இது மான்ட்போர்ட் சீர்திருத்தங்கள் எனப்படும்). இது இந்தியச் சட்டசபையில் மேல், கீழ் என இரு மன்றங்களை உண்டாக்கிற்று. ஆனால் இவற்றுக்கு அளிக்கப்பட்ட அதிகாரங்களைவிட கவர்னர் ஜெனராலுக்கு மிக்க அதிகாரங்கள் கொடுக்கப்பட்டன. மாகாணங்களில் இரட்டையாட்சி (Dyarchy) கொண்டுவரப்பட்டது. அதன்படி மாகாண நிர்வாகத்துறைகளில் நிதி, போலீஸ் முதலியவை மாகாணக் கவர்னரால் அமர்த்தப்பட்டு, அவருக்கே பொறுப்புள்ள நிர்வாக சபை உறுப்பினரால் ஆளப்பட்டன; இவையே (கவர்னருக்கு) ஒதுக்கிவைக்கப்பட்ட ஆட்சித்துறைகள் (Reserved Subjects) எனப்படும். மாகாணச் சட்டமன்ற உறுப்பினர்களிலிருந்து அமர்த்தப்பட்டு, அதற்குப் பொறுப்பாகவுள்ள நிர்வாகசபை உறுப்பினருக்கு, உள்ளூர் ஆட்சித்துறை, சுகாதாரம், கல்வி, மராமத்து முதலிய துறைகள் மாற்றப்பட்டன;எனவே இவை மாற்றப்பட்ட

லைாகாக்கள் (transferred subjects) எனப்படும். மாகா ணச் சட்டமன்றங்களுக்குச் சில அதிகாரங்கள் கொடுக் கப்பட்டாலும், கவர்னருக்கும் நிறைய விசேட அதிகா ரங்கள் கொடுக்கப்பட்டன. இந்திய முஸ்லீம்கள், சீக்கி யர், இந்தியக்கிறிஸ்தவர் ஆகியோருக்குப் பிரதிநிதித்து வம் வழங்கப்பட்டது.

இச் சீர்திருத்தம் காங்கிரஸ் கோரிய மாகாண சுயாட்சியை (provincial autonomy) நிறைவேற்றாத தால், இதனை அது ஏற்க மறுத்தது. மேலும் போர்க் காலத்தில் ஆப்பிரிக்காவில் வழக்கறிஞராகப் பணியாற்றி யும், நமது சமுதாய, அரசியல் கேள்விகளைச் சாத்வீக முறையில் தீர்ப்பதற்குரிய அகிம்சை முறையைக் கையாண்டும் வந்த காந்தியடிகள், இந்தியாவுக்கு வந்து காங்கிரசின் தலைமையை ஏற்றார். 1919-ல் பஞ்சாபில் ஆங்கில இராணுவ அதிகாரி ஒருவர் பல மக்களைச் சுட்டுக் கொன்றார். காந்தியடிகள் பிரிட்டிஷ் அரசாங்கத் திற்கு எதிராக அகிம்சையை ஒட்டி ஒத்துழையாமை இயக்கத்தை நடத்தலானார். பல மாகாணங்களிலும், நடு அரசாங்கத்திலும், கவர்னர், கவர்னர்ஜெனரல் ஆகியோரின் விசேட அதிகாரங்களினால் அடக்குமுறைச் சட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. காந்தியும், காங்கிர சாரும் சிறை சென்றனர். பல மிதவாதக் கட்சிகள்மாகா ணங்களில் இரட்டை ஆட்சியை நடத்தினர். சென்னை மாகாணத்தில் ஜஸ்டிஸ்கட்சியார் நிர்வாகத்தை நடத்தி னர். 1929-ல் இந்தியாவுக்குவந்த சைமன் குழுவை (Simon Commission) காங்கிரஸ் புறக்கணித்து, முழுச் சுயஆட்சியே தனது நோக்கம் எனத் தீர்மானித்தது. ஜவகர்லால் நேரு தலைவரானார். இக் குழு இந்தியாவில் சிற்றரசர்களுடைய ஒத்துழைப்பின்பேரில்ஓர் கூட்டரசை நிறுவவும், மாகாணங்களில் சுயாட்சியைக் கொண்டு வரவும் ஆலோசனைகள் கூறிற்று. லண்டனில் கூடிய

வட்டமேசை மாநாடு ஒன்றில் காங்கிரசின் சார்பாக காந்தி 1931-ல் கலந்துகொண்டார்; ஆனால் வகுப்பு வாரித் தொகுதி பற்றி இதில் ஒரு உடன்பாடும் ஏற்படவில்லை. காந்தி திரும்பி விட்டார்; அவரை இந்தியாவின் புதிய வைசிராய் வில்லிங்டன் சிறையி லிட்டு, காங்கிரசையும் அடக்க முயன்றார்.

3. சைமன் குழு கூறியவாறு 1935-ம் ஆண்டு செய்யப்பட்ட இந்திய அரசாங்கச் சட்டம், நடு அரசாங் கத்தில் கூட்டரசு முறையை ஏற்படுத்தவும், அது ஏற்படும்வரை தற்காலிக அரசாங்கம் ஒன்றை நிறுவவும் வழிசெய்தது. கூட்டரசை ஏற்படுத்தும் முயற்சி தோல்வி யுற்றது; கூட்டரசுக்கு உரிய நீதிமன்றம், பொதுப்பணிக் குழு முதலியன ஏற்படுத்தப்பட்டன. இச் சட்டத்தில் மாகாணங்களில் இரட்டையாட்சி நீக்கப்பட்டு, முழுச் சுய ஆட்சி நிறுவப்பட்டது; ஆனால் கவர்னருக்கும், வைசிராய்க்கும், இந்தியச் செயலருக்கும் நிறைய விசேட அதிகாரங்கள் கொடுக்கப்பட்டிருந்ததனால், 1937-ல் நடைபெற்ற தேர்தல்களில் வெற்றி பெற்ற காங்கிரஸ், இச்சீர்திருத்தத்தைச், சில வாக்குறுதிகளை ஆங்கில அர சாங்கம் கொடுத்தபின், செயல்படுத்த இசைந்தது. 1937-முதல் 1939-ல் இரண்டாம் உலகப்போர் தொடங் கும் வரை காங்கிரஸ் அமைச்சரவைகள், அது வெற்றி பெற்ற மாகாணங்களில் ஆட்சி செய்தன. காங்கிரசைக் கலந்துகொள்ளாமல் வைசிராய் லின்லித்கோ பிரபு போரில் இந்தியாவைச் சேர்த்ததனால், காங்கிரஸ் அலுவலைத் துறந்தது. மேற்கூறிய சட்டப்படி மாகாணங் களில் கவர்னர்கள், ஆலோசகர் ஆட்சியை நிறுவினர்.

இரண்டாம் உலகப் போரில் ஜப்பான் அச்சுநாடு களின் பக்கம் சேர்ந்து, தென்கிழக்கு ஆசியாவைக் கைப்பற்றி, இந்தியக் கரையில் (1942-ல்) சில நகரங்

களையும் தாக்கிற்று. இந்த நெருக்கடியில் இந்தியரின் ஒத்துழைப்பைப் பெறுதற்கு பிரிட்டிஷ் அரசாங்கம் ஸர். ஸ்டாப்பர்ட் கிரிப்ஸ் என்ற அமைச்சரை இந்தியாவுக்கு அனுப்பிப் போர்முடிந்ததும், இந்தியாவுக்குச் சுதந்திரம் வழங்குவதாகவும், வெற்றி பெறுவதற்கு இங்கிலாந்தோடு ஒத்துழைக்குமாறும், காங்கிரஸ், முஸ்லிம்லீக் தலைவர்களை வேண்டிற்று. இரு கட்சிகளும் இவற்றை ஏற்கவில்லை. 1942 ஆகஸ்டில் ஆங்கிலேயரை இந்தியாவைவிட்டு வெளியேறுமாறு கேட்டு, காங்கிரஸ் ஓர் தீர்மானத்தைநிறைவேற்றவும், பிரிட்டிஷ்அரசாங்கம் காந்தியையும், காங்கிரசையும் அடக்க நடவடிக்கைகள் எடுத்தது. போர் முடிந்ததும், பிரிட்டன், காங்கிரஸ், முஸ்லிம் லீக் தலைவர்களுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தி, இந்திய அரசியற் கேள்வியை ஆராய்ந்து, இரு
ிர நாடுகளாக இந்தியாவைப் பிரிப்பது என்ற
வந்தது. அதன்படி வடமேற்குப், பகுதியும், கிழக்கு வங்காளமும் பாகிஸ்தான் என்ற சுதந்திர நாடாகவும், மற்றப் பகுதி இந்தியா என்ற சுதந்திர நாடாகவும் ஆயின.

நம் நாடு 1947-ம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15-ம் நாள் சுதந்திர நாடாக ஆயிற்று. அது சுதந்திரம் பெறுவதற்கு ஓரளவு காங்கிரஸ் இயக்கமும், காந்தியடிகளின் தலைமையும், ஓரளவு உலக அரசியல் சூழ்நிலையில் ஏகாதிபத்திய ஆட்சி முறைக்கு எதிராக ஏற்பட்ட மாறுதலும் காரணங்களாக அமைந்தன.

— o —

## 5. ஹாலண்டும் கிழக்கிந்தியத் தீவுகளும்

1. முன்னுரை. 2. பழைய வரலாறு. 3 டச்சுக்

காரர்களின் ஆட்சி. 4. இரண்டாம் உலகப் போரும் விடுதலையும். 5. இன்றைய நிலை.

1. இந் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஆசிய நாடுகளுள் சுதந்திரம்பெற்று, பல அரசியல் நிகழ்ச்சிகள் நடைபெறுவதற்கு ஓர் அரங்கமாக இருந்து வருவது இந்தோனேஷியா ஆகும். இது பூமத்தியக் கோட்டுக்கு இருபுறமும், தென்கிழக்கு ஆசியாவுக்கும், ஆஸ்திரேலியாவுக்கும் நடுவில், போர்னியோ, செலிபிஸ், ஜாவா, சுமத்திரா முதலிய நான்கு பெருந் தீவுகளும், பலி, லொம்பாக் முதலிய 3000க்கும் மேற்பட்ட சிறு தீவுகளும் அடங்கிய ஓர் நாடு ஆகும்.

2. இம் மக்கள் தென்கிழக்கு ஆசியா நிலத்திலிருந்து 5000 ஆண்டுகளுக்கும் முன்னர் இத் தீவுகளில் குடியேறியிருத்தல் வேண்டுமெனக் கூறப்படுகிறது. கி. பி. முதலாம் நூற்றாண்டளவில் இந்து சமயக் குருமாரும், புலவர்களும், வணிகரும் இங்குக் குடியேறி மக்களிடையே நாகரிகத்தைப் பரப்பினர். கி. பி. 9-ம் நூற்றாண்டில் சுமத்ராவில் ஸ்ரீ விஜயா என்ற இந்து அரசும், 13-ம் நூற்றாண்டில் ஜாவாவில், முஜாப்பகித் என்ற இந்து அரசும் தோன்றின. பின்னர் இஸ்லாம் சமயம் பரவிற்று. 16-ம் நூற்றாண்டில போர்ச்சுகீசியரும், அதற்கடுத்து டச்சுக்காரரும் வாணிபத்துக்காகவந்தனர். இத்தீவுகள் வளமானவை; நெல், தேங்காய், அவரை வகைகள், மிளகு, தேயிலை, சர்க்கரை, ரப்பர், மரவகைகள், வாசனைத்திரவியங்கள் முதலியவற்றை விளைவித்து, பண்டு தொட்டே ஏற்றுமதி செய்து வந்துள்ளன. இவையே ஐரோப்பியருக்குத் தேவையான வாசனைப் பொருட்களை மிகுதியும் நெடுங்காலமாகக் கொடுத்து வந்தமையால், இவை 'வாசனைப் பொருள் தீவுகள்' (Spice Islands) என ஐரோப்பியரால் அழைக்கப்பட்டன.

3. பதினேழாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இங்கு வாணிபத்துக்காக வந்த டச்சுக்காரர்கள், இங்கு முன்னரே வந்திருந்த போர்ச்சுகீசிய, ஸ்பானிஷ், ஆங்கில வணிகரையெல்லாம் விரட்டிவிட்டனர். 1602-ம் ஆண்டில் டச்சு ஈஸ்ட் இண்டியா கம்பெனி என்ற வணிகக் கழகம் நிறுவப்பட்டது. இந்தோனேஷியாவின் பல பகுதிகளை ஆண்டுவந்த பல சுதந்திர அரசர்களை, பீட்டர்சன் கோயன், அன்ட்டன் வான் டிமான் முதலிய டச்சுத் தலைவர்களின் ஆட்சியில், அவர்களுடைய வாணிபக் கழகம் தோற்கடித்து, நாடு முழுவதையும் வென்றது; பின்னர் அக்கழகத்தில் கடன்தொல்லை பெருகவும், 1798-ல் ஹாலண்டின் டச்சு அரசாங்கம் இந்நாடு முழுவதையும் தனது ஆட்சியில் கொண்டு வந்தது. இந்நாட்டுக்கு நெதர்லண்ட்ஸ் ஈஸ்ட் இண்டீஸ் என்ற பெயர் கொடுக்கப்பட்டது.

டச்சுக்காரர்களின் ஆட்சியில் இந்நாட்டில் தொழிலும், வாணிபமும் ஓரளவு வளர்ந்தன. பல தனியார் பண்ணைகள் நிறுவப்பட்டன. ஆனால் கல்விப்பயிற்சியிலோ, அரசியலிலோ முன்னேற்றம் இந்தோனேஷியரிடை காணப்படவில்லை. முதல் உலகப் போருக்குப் பின்னர், ஹாலண்ட் அரசாங்கம் இந்நாட்டில், மக்கள் ஆலோசனை மன்றம் எனப்படும் வால்க்ஸ்ராட் என்ற மன்றத்தை நிறுவிற்று; மக்களுக்கு இந்நாட்டு அரசாங்கத்தில் ஓர் அளவு பங்கு இருத்தற்காக இம்மன்றம் நிறுவப் பட்டாலும், இதற்கு வழங்கப்பட்ட அதிகாரம் மிக மிகக் குறைவு.

4. இரண்டாம் உலகப்போரில் ஜப்பான் இந்நாட்டைக் கைப்பற்றித், தனது ஆட்சிக்குக் கட்டுப்பட்டு இயங்கக்கூடிய உள்ளூர் சுய அரசாங்கங்களை நிறுவுவற்கு, இந்தோனேஷியத் தேசியவாதிகளுக்கு அனுமதி

கொண்டிருந்தது. முதலில் சில தேசியத்தலைவர்கள் ஜப்பானியரை எதிர்த்தாலும், பின்னர் அவர்களுடைய அரசாங்கத்தோடு ஒத்துழைத்தார்கள்; ஜப்பான் போரினிறுதியில் இந்நாட்டை விட்டு நீங்கும்போது, தேசியத் தலைவர்களை நாடு முழுமைக்கும், சுதந்திர அரசை நிறுவ இடமளித்தது. முகமது ஹட்டா என்பவரும், சுகர்னோ என்பவரும் அப்போதே தேசியத்தலைவராயிருந்து வந்தனர். அவர்களே 1945, ஆகஸ்டு 17-ஆம் நாள் இந்தோனேசியாவைச் சுதந்திர நாடாக விளம்பரம் செய்தனர்.

1945-ம் ஆண்டிலிருந்து 1949-ம் ஆண்டுவரை டச்சுக்காரரை எதிர்த்து,இந்தோனேசியர் சுதந்திரத்துக்காகப் போரும், புரட்சிகளும் செய்தனர். சுமத்ராவிலும், ஜாவாவிலும், சுகர்னோவின் தலைமையில் சுதந்திர இந்தோனேசியக் குடியரசு நடைபெற்றது. இதற்கெதிராக டச்சுக்காரர்கள் இதே தீவுகளில் பல அரசாங்கங்களை நிறுவினர். 1946லும், 1948லும் இருமுறை டச்சுக்காரரும், இந்தோனேசியரும் போர் நிறுத்த உடன்படிக்கைகளைச் செய்தனர். எனினும் 1949-ம் ஆண்டு முடிய போர்கள் நடைபெற்றன. இந்தியாவும் ஓர் மாநாட்டை 1949ல் கூட்டி, மற்ற ஆசிய நாடுகளின் ஆதரவை இந்தோனேசியச் சுதந்திரக் கோரிக்கைக்குத் தேடிக்கொடுத்தது. அவ்வாண்டு டிசம்பர் மாதத்தில் ஹாலண்டில், ஹேக் நகரத்தில் டச்சுக்காரரும், இந்தோனேசியப் பிரதிநிதிகளும் கூடிப் பேசியபின், ஹாலண்டு, இந்த நாட்டின்மீது தனக்குள்ள இறைமை அதிகாரத்தை (Sovereignty) இந்தோனேசிய அரசாங்கத்துக்கு மாற்றவும், நெதர்லண்ட்ஸ் இந்தோனேசிய யூனியன் என்ற நாடு தோன்றிற்று. இதில் 16 மாகாணங்கள் இருந்தன.

5. 1950ல் குடியரசு அரசியலமைப்பு நிறுவப் பட்டது. ஒரு தலைவரும், ஒரு உபதலைவரும், இரு மன்றங்களுள்ள பாராளுமன்றமும், ஒரு முதலமைச்சரின் கீழ் ஒரு காபினெட்டும் அமைக்கப்பட்டன. சுகர்னோ முதல் தலைவர். 20 அரசியல் கட்சிகள் இருந்தன. படைத் தளபதிகளுக்கும், பொதுவுடைமைக் கட்சியினருக்கும் போட்டி இருந்தது. நடு அரசாங்கத்துக்கெதிராகப் பல புரட்சி அரசாங்கங்கள் பல பகுதிகளில் இயங்கின. இவற்றை ஒடுக்க, சுகர்னோ நிறைய அதிகாரங்களைக் கையாண்டார். சீனரும், பொதுவுடைமைக் கட்சியினரும் சுகர்னோவுக்கு ஆதரவளித்தனர். புரட்சி அரசாங்கங்கள் மறைந்தன. எனினும் சீனரும், பொதுவுடைமையரும் கையாண்ட ஆதிக்கம் 1965ல் மறைந்து, இப்போது இராணுவ அலுவலரின் ஆதிக்கமே நிலவிவருகிறது.

-o—

## (6) பிரான்சும் இந்தோசீனாவும்

1. முன்னுரை 2. பழைய வரலாறு 3. பிரஞ்சுக் குடியேற்ற நாடு 4. இரண்டாம் உலகப் போரும் விடுதலையும் 5. உள்நாட்டுப் போர்கள் – லாவோசிலும், வியட்நாமிலும்.

1. இரண்டாம் உலகப் போருக்குப் பின்னர் ஆசியாவில் சுதந்திரம் பெற்ற ஐரோப்பியக் குடியேற்ற நாடுகளில் இந்தோசீனாவும் ஒன்று. இதனைப்போலச் சுதந்திரம் பெற்ற பல புதிய ஆசிய நாடுகளிலெல்லாம் ஓரளவேனும் அமைதியும், வளர்ச்சிக்கேற்ற சூழ்நிலைகளும் நிலவ, இதிலுள்ள வியட்நாம் நாட்டில் இன்னும் நல்ல நிலைமை உருவாகவில்லை.

2. இந்தோசீனு என்னும் தீபகற்பம் தென்கிழக்கு ஆசியாவில் வடக்கே சீனு தேசத்துக்கும், கிழக்கிலும் தெற்கிலும் தென் சீனக்கடலுக்கும், மேற்கே பர்மாவுக்கும், தாய்லாந்துக்கும் நடுவில் இருக்கிறது. நல்ல நீர்வளம் உடைய இந்நாடு மலைப் பாங்கான நிலம் நிறைந்தது. வடக்கில் (வட வியட்நாம் பகுதியில்) ரெட்ஆற்றின் கழிமுகப் பகுதியிலும், தெற்கே மீகாங் ஆற்றின் கழிமுகப் பகுதியிலும், உலகத்திலேயே மிகுதியும் நெல்விளையும் வளமான நிலங்கள் இருக்கின்றன. மக்களில் 90% நெல் விளையும் பண்ணைகளில் வாழ்கின்றனர். அவரை வகைகள், தேங்காய், உருளைக்கிழங்கு, காப்பி, ரப்பர், கரும்பு, தேயிலை முதலியவை மற்ற முக்கிய விளைபொருள்கள். சர்க்கரை செய்தல், புகையிலை பதனிடல், சிமின்ட், இரசாயனப் பொருள் செய்தல், நெசவு முதலியவை முக்கியத் தொழில்கள். இதன் பூர்வீகக் குடிகள் நடு ஆசியாவின் சமவெளியிலிருந்தும், மலைப்பகுதிகளிலிருந்தும் வந்தவர். கி. மு. 200ஐ ஒட்டிச் சீனர் இப்பகுதியில் நுழைந்தனர். அப்போது இந்நாடு அன்னும் என அழைக்கப்பட்டது; அன்னுமியர் என்ற இம்மக்கள், சீனரோடும், தாய்லாந்தியரோடும் சுதந்திரத்துக்காக கி. பி. 900லிருந்து, கி. பி. 1700 வரை போரிட்டனர்; 1801-ல் அவர்கள் சீனுவிடமிருந்து முழுச் சுதந்திரம் பெற்றனர்; அவர் தம் நாட்டை வியட்நாம் என அழைத்தனர். மக்கள் மூதாதையர் வழிபாடு, பௌத்தம், கன்பூசியஸ் நெறி, கத்தோலிக்க சமயம் ஆகியவற்றைப் பின்பற்றினர்.

3. பதினேழாம் நூற்றுண்டில் ஸ்பெயினும், பிரான்சும் வாணிபத்துக்காக இந்தோ சீனுவில் நுழைய முயன்றன; ரோமன் கத்தோலிக்கச் சமயக் குருமார் வந்து, கிறிஸ்தவ சமயத்தைப் பரப்பினர்; இந்நாட்டின்

அரசர்கள் இக் குருமாரைத் துன்புறுத்தினர். 1858-ம் ஆண்டில் ஒரு ஸ்பானிஷ் – பிரஞ்சுக் கற்பற்படை தென் பகுதியைத் தாக்கி, செய்கோன் நகரத்தைக் கைப்பற்றிற்று.

1893-ம் ஆண்டில் பிரான்ஸ் இந்தோசீன முழுவதையும்கைபற்றி, அதை கம்போடியா, லாவோஸ, கொச்சின் சீனு, அன்னும், டாங்கின் என்ற ஐந்து மாகாணங்களாகப் பிரித்தது. பிரஞ்சு ஆட்சியில் பல நீளமானசாலைகளும், இருப்புப் பாதைகளும், பிரஞ்சு முறையை ஒட்டி இயங்கும் கல்லூரிகளும் நிறுவப்பட்டன.

4. இரண்டாம்உலகப்போரில் ஜப்பான் பிரான்சிடமிருந்து இந்தோசீனுவைக் கைப்பற்றி, கொச்சின்சீனு, அன்னும், டாங்கின் முதலிய மாகாணங்களை இணைத்து வியட்னும் என்ற மாகாணமாக ஆக்கி, அதனை பாவோடாய் என்ற தனக்குக் கட்டுப்பட்ட ஓர் பேரரசரின் கீழ் வைத்தது; போர் முடிந்ததும் சுதந்திர வியட்னும் முழுவதற்கும் தன்னைத் தலைவராக, வியட்மின் என்ற பொதுவுடைமைக் கட்சியின் தலைவரான டாக்டர் ஹோசிமின் என்பவர் விளம்பரம் செய்தார். இந்நாட்டில் பிரான்ஸ் தனது அதிகாரத்தை மீண்டும் நிலைநாட்டிற்று. வியட்மின் கட்சியினர், பிரஞ்சுக்காரரை நாட்டினின்றும் வெளியேற்றுவதற்காக 1946-ம் ஆண்டு டிசம்பரில் போரைத் தொடங்கினர்; போர் எட்டு ஆண்டுகள் நடைபெற்றது. செஞ்சீனுவும், சோவியத் ரஷ்யாவும் வியட்மின் கட்சிக்கு உதவி செய்தன. பிரான்சுக்கு ஐக்கிய அமெரிக்கா உதவி செய்தது; எனினும் பிரான்ஸ் பல இடங்களில் தோல்வியுற்றுக், கடைசியில் டின் பின் பியூ என்ற கோட்டையை 55 நாட்கள் முற்றுகைக்குப் பின்னர், 1954, மே 7ல் இழந்தது. அவ்வாண்டு ஜுலை 21-ல், ஜெனிவா மாநாட்டில் இறை

வேற்றப்பட்ட போர் நிறுத்த ஒப்பந்தத்தில் பிரான்சும், பொதுவுடைமைக் கட்சியும் கையெழுத்திட்டன. இதன் படி பிரான்ஸ் வடவியட்நாம் பகுதியைப் பொதுவுடைமைக் கட்சியிடம் ஒப்படைத்துவிட்டு, கம்போடியா, லாவோஸ், தென்வியட்நாம் ஆகியவற்றைத் தனிச் சுதந்திர நாடுகளாக ஆக்கிற்று.

5. கம்போடியாவிலும், லாவோசிலும் அரசியலமைப்புச் சட்டத்துக்குட்பட்ட முடியாட்சிகள் (Constitutional monarchies) நிறுவப்பட்டன. இவையெல்லாம் சீனுவின்மொழி, நாகரிகம் ஆகியவற்றோடு நெடுங்காலமாகத் தொடர்புடையனவாதலால், பொதுவாகப் பெரும்பாலும் இவற்றின் மக்கள், சீன, வடவியட்நாம் நாடுகளின் அயல்நாட்டுக் கொள்கையையே ஆதரித்து வந்துள்ளனர். வடவியட்நாமின் தலைநகரம் ஹனாய். லாவோசில் அமெரிக்க ஆதிக்கத்துக்கு எதிராகச் சில ஆண்டுகளுக்கு முன்னர் பாதெட்லாவோ என்ற பொதுவுடைமைக் கட்சியினர் உள்நாட்டுப போரை நடத்தினர். பின்னர் நடுநிலைமைக் கட்சியினர் அங்குதமது அரசாங்கத்தை நிறுவினர்.

தென் வியட்நாமில் 1949ல் பிரஞ்சுக்காரர் பாவோடாயை அரசராக்கினர். 1955-ல் போர்நிறுத்த உடன்பாட்டிற்குப் பின்னர், தென் வியட்நாம் மக்கள் பாவோடாய்க்குப் பதிலாக, டின்டீம் என்பவரை முதலமைச்சராக ஆக்கினர். தென் வியட்நாம் ஐக்கிய அமெரிக்காவோடு நெருங்கிய தொடர்புடையது. எனவே ஐக்கிய அமெரிக்க நாட்டின் உதவியினுல் அதன் தொழிலும், இராணுவமும் வளர்ந்து வருகின்றன. வடவியட்நாமும், செஞ்சீனுவும், தென்வியட்நாம் அரசாங்கத்துகெதிராகப் புரட்சி செய்யும் வியட்காங் என்ற பொதுவுடைமைக் கட்சிக்கு உதவிசெய்கின்றன; சோவியத் ரஷ்யாவும்

இதற்கு உதவி செய்யவே, பெருமளவில் ஐக்கிய அமெரிக்க நாட்டின் அரசாங்கம் தென்வியட்னும் அரசாங்கத்துக்கு இராணுவ, பொருளாதார உதவிகளை அளித்து வருகிறது. போர் இன்றும் (1966 ஜூலை 25) கடுமையாக நடைபெறுகிறது. உயிர், பொருள் சேதங்கள் மிகுதியாக வளர்கின்றன. இச்சிறிய வளமான நாட்டில் இருக்கும் வல்லரசுகளும் நேருக்குநேர் கூடி, அமைதியை முன்னிட்டு, நல்லநிலைமையை ஏற்படுத்தல் வேண்டுமென்று உலகம் எதிர்பார்க்கிறது.

## (7) ஐக்கிய அமெரிக்க நாடும் பிலிப்பைன்சும்

1. முன்னுரை 2. ஸ்பானிஷ் ஆட்சி 3. அமெரிக்கா கைப்பற்றுதல் 4. சுயஆட்சி நிறுவ முயற்சிகள். 5. இரண்டாம் உலகப்போரில் நிலைமை—சுதந்திரம்

1. ஆசியாக் கண்டத்தில் அண்மைக் காலம் வரை ஐக்கிய அமெரிக்கநாட்டுக்குச் சொந்தமாக இருந்த ஒரே குடியேற்ற நாடு பிலிப்பைன்ஸ் (Philippines) என்ற நாடு ஆகும். இது இந்தோசீனுவுக்குக் கிழக்கே, பசிபிக் கடலில் லூசன் தீவுக்கூட்டங்களும், விசயன் தீவுக்கூட்டங்களும், மின்டனேயத்தீவுக் கூட்டங்களும் சேர்ந்த ஓர் நாடு ஆகும். பூமத்தியக் கோட்டிலுள்ள மற்ற நிலப்பகுதிகளைப் போலவே, இதுவும் நீர்வளமும், நிலவளமும் உடையது. இதன் பூர்விகக்குடிகள் நீக்ரோ இனத்தைச் சேர்ந்தவரெனக் கூறப்படுகிறது. முதலில் இந்தோனேசியரும், மலேசியரும், கி. பி. 700க்குப் பின்னர் ஜப்பானியரும், சீனரும், அராபியரும் இத்தீவுகளுக்கு வாணிபத்துக்காக வந்து கலந்தனர். இஸ்லாம் சமயம் பரப்பப்பட்டது.

2. கி. பி. பதினாறாம் நூற்றாண்டில் இத்தீவுகள் ஸ்பானிஷ் ஆட்சியில் வந்தன. 1521-ல் கப்பல்களில் உலகத்தைச் சுற்றிவந்த ஸ்பானிஷ்வீரர் பெர்டினாண்ட் டமெகல்லன் இத்தீவுகளிலிறங்கினார். இத்தீவுகளி லுள்ள பல பூர்விகக் குடிகள் பல கூட்டங்களாகப்பிரிந்து, தம்முள் சண்டையிட்டுக்கொண்டிருந்தனர். அவற்றுள் ஒன்றுக்கெதிராக மற்றொன்றுடன் சேர்ந்து, மெகல்லன் சண்டையிடும்போது கொல்லப்பட்டார். அவருடன் வந்த கப்பல் ஸ்பெயினுக்குத் திரும்பிச்சென்றது. பின்னர் 1543ல் இத்தீவுகளுக்குவந்த வில்லாலோபோஸ் என்ற தளபதி, இவற்றுக்கு...ஸ்பெயின் இளவரசர் பிலிப் என்பவரின் பெயரை ஒட்டி, பிலிப்பைன்ஸ் எனப் பெயரிட்டார். ஸ்பானியர் இங்குக் கிடைக்கும் தங்கத்தை எடுத்துப்போவதற்காகக் குடியேறி, இவற்றை வென்று தமது ஆட்சியை நிலைநாட்டினர். ரோமன்கத்தோலிக்கச் சமயக்குருமார் குடியேறி, மக்களைக் கிறிஸ்தவர் ஆக்கினர்.

இத்தீவுகளின் பூர்விகக் குடிகளாகிய பிலிப்பினோக் கள் (Filipinos), தங்களை ஆண்டுவந்த ஸ்பானிஷ் ஆட்சி யாளருக்கெதிராக அடிக்கடி புரட்சி செய்தனர். வெளி நாடுகளுடன் வாணிபத் தொடர்பு ஏற்பட்டது. இதனு லும், பிலிப்பினோ இளைஞர்கள் ஐரோப்பிய நாடுகளுக்கு மேல்படிப்புக்காகச் சென்று வந்ததனாலும், பிலிப்பினோக் கள் தங்களுடைய சமுதாய, அரசியல் நிலைமைகளைச் சீர்திருத்தும் நோக்கத்துடன் இருந்தனர்; 1869ல் இதன்பொருட்டுக் கலகங்கள் நடைபெற்றன.

3. ஸ்பானிஷ் அமெரிக்கப்போர் — 1898: பிலிப் பினோத் தலைவர் டாக்டர் எமலியோ அகினால்டோ என்பவர், நாட்டின் உள்ளூர்ப் பகுதிகளில் சுய ஆட்சி ஏற்படுதல் வேண்டுமெனக் கோரினார். 1898 ஏப்ரலில்

ஐக்கிய அமெரிக்க நாட்டுக்கும் ஸ்பெயினுக்கும் போர் மூண்டது. ஸ்பானிஷ் கப்பற்படை அழிக்கப்பட்டது. அகினல்டோ ஒரு பிலிப்பினோப் படையைத் திரட்டி அமெரிக்கப் படையோடு சேர்ந்து போரிட்டு, பிலிப்பைன்சை ஸ்பெயினிடமிருந்து விடுவித்தார். அமெரிக்க ஸ்பெயின் உடன்படிக்கையின் மூலம் அமெரிக்காவுக்கு பிலிப்பைன்சை ஸ்பெயின் கொடுத்தது,(1898, டிசம்பர்). இதிலிருந்து,பிலிப்பைன்ஸ் 1946–ம் ஆண்டுவரை ஐக்கிய அமெரிக்கநாட்டின் வசம் இருந்தது. அமெரிக்க ஆட்சியை முதலில்ஏற்கமறுத்த அகினல்டோ, பின்னர் ஒப்புக்கொண்டார். நாளாவட்டத்தில் பிலிப்பைன்சைச் சுதந்திர நாடாக்குவது என அமெரிக்க செனட் ஓர் தீர்மானம் செய்தது. 1901லிருந்து ஐந்து ஆணையர் (A Commission of five) அடங்கிய குழு ஒன்றின் மூலம் அமெரிக்கா இந்நாட்டை ஆட்சி செய்தது.

4. படிப்படியாக இந்நாட்டினரைச் சுதந்திர நிலைக்கு அமெரிக்கா ஆயத்தப்படுத்திற்று. பிலிப்பினோக்கள் முதன்முதலாகத் தமது சட்டமன்ற உறுப்பினர்களை 1907–ல் தேர்ந்தெடுத்தனர். மேற்சபை உறுப்பினராகப் பிலிப்பைன்ஸ் கவர்னரும், அவருடைய அலுவலரும் இருக்க, கீழ்ச்சபை உறுப்பினரெல்லாம் தேர்ந்தெடுக்கப்பட்டனர். 1916-ல் மேற்சபையாகிய செனட்டிலும் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினரே இருந்தனர். அமெரிக்க அரசாங்கம் சாலைகளையும், இருப்புப் பாதைகளையும், பள்ளிக்கூடங்களையும் கட்டிற்று; பொது சுகாதாரம் சீராக்கப்பட்டது. 1934-ம் ஆண்டின் சட்டம் ஒன்று (The Tydings-McDuffie Act) பிலிப்பைன்சுக்கு 1946-ம் ஆண்டில் முழுச்சுதந்திரம் வழங்குவதாக ஏற்பாடு செய்தது. பிலிப்பைன்ஸ் ஒரு சுய ஆட்சி நாடாக ஆக்கப்பட்டது; அமெரிக்க அரசாங்கம் இந்

நாட்டின் அயல் உறவுகளையும், பாதுகாப்பையும் மட்டும் தன்பொறுப்பில் வைத்துக்கொண்டது. 1935ல் இந்நாட்டின் தலைவராக குயிசான் என்பவரை மக்கள் தேர்ந்தெடுத்தனர்.

5. இரண்டாம் உலகப் போரில் (1939 – 1945) ஜப்பான் மற்ற இரு அச்சு நாடுகளின் பக்கம் சேர்ந்து, ஐக்கிய அமெரிக்க நாட்டின் குடியேற்ற நாடுகளைத் தாக்கி, ஹவாய், பிலிப்பைன்ஸ் முதலியவற்றைக் கைப்பற்றிற்று. 1945-ல் அமெரிக்கா பிலிப்பைன்சை ஜப்பானிடமிருந்து மீட்டது. 1946-ம் ஆண்டு ஜூலை 4-ம் நாள் ஐக்கிய அமெரிக்க நாடு பிலிப்பைன்சைச் சுதந்திர நாடாக ஆக்கிற்று. பிலிப்பைன்ஸ் குடியரசு நாடாக ஆயிற்று.

இதன் தலைநகரம் குயிசான். 1950-ல் பொதுவுடைமையர் அரசாங்கத்தைக் கைப்பற்றுவதற்காகச் செய்த வன்செயல்கள் ஒடுக்கப்பட்டன. இந்நாட்டின் முக்கிய விளைபொருள்கள் கொப்பரை, நெல், அன்னாசிப்பழம், கரும்பு, புகையிலை முதலியவை; தேங்காயெண்ணெய் எடுத்தல், கயிறுசெய்தல், முத்துச்சிப்பி சேர்த்தல், கனிப்பொருள்களைத் தாதுக்களிலிருந்து பிரித்தல், முதலியவை தொழில்கள். எனினும் தற்காலப் பயிர்த்தொழிற் கருவிகளில்லாததால் இந்நாட்டின் வேளாண்மைத் தொழில் சீர்குலையலாயிற்று. அமெரிக்காவின் பொருளுதவியின் மூலமாக, இதன் அரசாங்கம் சில சீர்திருத்தங்களைச் செய்தது; தொழிலாளிகள்யாவருக்கும் குறைந்த விகித ஊதியத்தை நிர்ணயித்தும், வருவாய்க்குத் தக்க விகிதத்தில் வரிமுறையை வகுத்தும், சட்டங்கள் செய்யப்பட்டன. தொழில் வல்லுநர்கள் அமெரிக்காவிலிருந்து உதவி செய்தனர். 1951-ல் அமெரிக்காவும், பிலிப்பைன்சும் ஒருவருக்கொருவர் தற்காப்பு உதவி

செய்யும் ஒப்பந்தத்தை நிறைவேற்றின. 1945-லேயே இந்நாடு ஐ. நாவில் உறுப்பினராயிற்று. கம்யூனிச ஆக்கிரமிப்பிலிருந்து தென்கிழக்கு ஆசியாவைக் காக்கும் நோக்கத்துடன் செய்யப்பட்ட தென்கிழக்கு ஆசியக் கூட்டுத் தற்காப்பு ஒப்பந்தத்தில் (South East Asian Collective Defence Treaty or SEATO), பிலிப்பைன்ஸ் 1954ல் சேர்ந்தது. இவ்வமைப்பின் அலுவலகம் இந் நாட்டிலுள்ள மணிலா நகரத்திலுள்ளது. இதில் சேர்ந்துள்ள மற்ற ஏழு நாடுகள் ஐக்கிய அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், ஆஸ்திரேலியா, நியூஸிலாந்து, பாகிஸ்தான், தாய்லாந்து முதலியவை. இந்நாட்டினு டைய அரசியலமைப்பு பெரும்பாலும் ஐக்கிய அமெரிக்க அரசியலமைப்பை ஒத்திருக்கிறது. இருநாடுகளுக்கும் வாணிபத்திலும், அறிவியல்துறையிலும் ஒத்துழைப்பை ஏற்படுத்தக்கூடிய ஒப்பந்தங்கள் பல இருக்கின்றன.

# 3 இருபதாம் நூற்றாண்டின் உலகம்

## (1) முதல் உலகப்போர், 1914-1918

1 முன்னுரை 2 போரின் காரணங்கள் 3 நிகழ்ச்சிகள் 4 விளைவுகள்

1 இருபதாம் நூற்றாண்டின் உலக வரலாற்றின் முக்கிய நிகழ்ச்சிகளுள் 1914-1918-ம் ஆண்டுகளில் நடைபெற்ற முதல் உலகப்போரும் ஒன்று ஆகும். இறைமை உடைய நாடுகளுக்கிடையே முதல்முதலில் தற்கால அறிவியற் கருவிகளைக் கையாண்டு, உலகமெங்கும் நடைபெற்ற பெரும்போர் இதுவேயாகும். இப்போரில் பிரிட்டன், பிரான்ஸ், ரஷ்யா, ஐக்கிய அமெரிக்க நாடு முதலியவை நேசநாடுகளாக அமைந்து, ஜெர்மனி, ஆஸ்திரியா—

ஹங்கேரி, பல்கேரியா, துருக்கி முதலிய நடு அரசு களுக்கு (Central Powers) எதிராகப் போர் செய்தன. இப்போரின் விளைவுகள் நெடுங்காலத்துக்கு, உலகமக் களின் வாழ்க்கையைப் பாதித்தன.

2 இப்போருக்கு மூன்று முக்கிய காரணங்கள் இருந்தன. (1) பிஸ்மார்க்கினால் 1871-ல் ஜெர்மனி ஒரே நாடாக இணைக்கப்பட்ட நாளிலிருந்து, பிரான் சுக்கும் ஜெர்மனிக்கும் பகை உணர்ச்சி வளர்ந்து கொண்டே இருந்தது; எனவே இரண்டும், ஒன்றை ஒன்று வெல்லும் நோக்கத்தோடு, தனக்கு ஆதரவான நாடுகளைச் சேர்க்க முயன்றன; எனவே கூட்டமைப்புக் களும், எதிர்க்கூட்டமைப்புக்களும் தோன்றின. முதலில் 1882-ல் ஜெர்மனி, ஆஸ்திரியா, இத்தாலி ஆகிய மூன் றும் ஒன்றுசேர்ந்து, ஓர் முக்கூட்டமைப்பை (Triple Alliance) பிரான்சுக் கெதிராக அமைத்தன. எனவே பிரான்ஸ் தற்காப்புக்காக 1909-ல் பிரிட்டனோடு ஓர்நேச உடன்படிக்கையைச் (Entente Cordiale) செய்தது. இவ்வுடன்படிக்கையும் ஜெர்மனியைத் தாக்கும் நோக் கத்தோடுதான் செய்யப்பட்டது. 1895-ம் ஆண்டிலேயே பிரான்சும், ரஷ்யாவும் ஒரு இரட்டைக் கூட்டமைப்பை (Dual Alliance) நிறுவின; இவ்வமைப்பில் பிரிட்டனும் 1907-ல் சேரவே, முன்பே பிரிட்டனுக்கும், பிரான்சுக்கு மிடையே செய்யப்பட்ட நேசவுடன்படிக்கை, இப்போது ரஷ்யாவையும் சேர்த்து முக்கூட்டு உடன்படிக்கையாக (Triple Entente) விரிந்தது. இத்தகைய கூட்டமைப் பும், நேச உடன்படிக்கையும் செய்யப்படுவதற்குப் பல காரணங்கள் இருந்தன. 1871-ல் ஜெர்மனியிடம் தோல்வியுற்று, அதனிடம் அல்சேஸ்-லொரெய்ன் மாகாணங்களை இழந்த பிரான்ஸ், அவற்றைத் திரும்ப வும் மீட்டுக்கொள்ள விரும்பிற்று. 1911-ல் பிரான்ஸ்,

வட ஆப்பிரிக்காவிலுள்ள மொராக்கோவைக் கைப்பற்ற முயன்றபோது, ஜெர்மனியப் பேரரசர்கெய்சர் இரண்டாம் வில்லியம் பிரான்சைத் தடுக்க முன்வந்தார்; ஆனால் பிரிட்டன் பிரான்சுக்கு உதவ முன்வந்ததும், ஜெர்மனி தலையிடாமலிருந்தது. இதனால் பிரான்சுக்கும் ஜெர்மனிக்கும் பகைமை வளரத்தொடங்கிற்று. ஜெர்மனிக்கும், பிரிட்டனுக்கும் இடையேயும் பகையுண்டது. கெய்சர் இரண்டாம் வில்லியம் கடல் கடந்த நாடுகளில் ஜெர்மனிக்கு ஒரு குடியேற்ற நாட்டுப் பேரரசை நிறுவும் நோக்கத்தோடு, ஜெர்மன் கப்பற்படையைப் பெருக்கத் தொடங்கினர் (அதிகார ஆணவம் பிடித்த இவருடைய போக்கு, தந்திரப் போக்கை உடைய பிஸ்மார்க்குக்கு ஒத்து வராததனால், பிஸ்மார்க் 1890-ல் சான்ஸலர் பதவியிலிருந்து வெளியேற வேண்டியதாயிற்று.) ஜெர்மனியின் இப்புதிய கடல் ஆதிக்கக் கொள்கையை பிரிட்டன் எதிர்த்தது.

(2) மேற்கில் இருந்ததைப் போலவே தென் கிழக்கு ஐரோப்பா என்ற பால்க்கன் தீபகற்பத்திலும் போர் என்ற தீ எளிதில் பற்றக்கூடிய சூழ்நிலை உருவாகிக்கொண்டிருந்தது. இங்கும் கட்சிகளும், எதிர்க் கட்சிகளும் நாடுகளுக்கிடையில் தோன்றின. இங்கு ஆஸ்திரியா நாடும், அதன் தெற்கிலுள்ள செர்பியா நாடும் பகை நாடுகள். ஆஸ்திரியா, துருக்கியப் பேரரசுக்கு பால்க்கன் தீபகற்பத்தில் சொந்தமாக இருந்த சில மாகாணங்களைக் கைப்பற்றித் தன்னோடு இணைத்தது; இதை செர்பியா ஏற்றுக்கொள்ள மறுத்தது; செர்பிய மக்களும், ரஷ்ய மக்களும் ஸ்லாவ் என்ற ஒரே இனத்தைச் சேர்ந்தவர்; ரஷ்யா செர்பியாவுக்கு ஆதரவளித்தது: இதேபோல் ஆஸ்திரியாவுக்கு இனத்தால் உறவினரான ஜெர்மனியர், ஆஸ்திரியாவுக்கு ஆதர

வகித்தனர்; எனவே இப்போது கிழக்கே ஜெர்மனியும் ரஷ்யாவும் பகை நாடுகளாயின. 1912-ல் பல்கேரியா, கிரீஸ், செர்பியா, மான்டிநிக்ரோ முதலியவை ஒன்று சேர்ந்து, துருக்கியோடு போரிட்டு வென்றன. துருக்கியிடமிருந்து கைப்பற்றிய இடங்களை பிரிப்பதில் வெற்றியாளர்களிடையே கடும் பூசல் விளையவே, இப்போது கிரீஸ், மான்டிநிக்ரோ, செர்பியா, ருமேனியா முதலியவை ஒன்று சேர்ந்து, பல்கேரியாவைத் தோற்கடித்தன, செர்பியா, வென்று கொள்ளப்பட்ட நிலங்களில் பெரும் பகுதியை அடைந்தது. இவ்விரு போர்களிலும் தோல்வியுற்ற துருக்கியும், பல்கேரியாவும், மற்ற பால்க்கன் நாடுகளுக்கெதிராக, ஜெர்மனியுடனும், ஆஸ்திரியாவுடனும் சேர்ந்தன; ரஷ்யா மற்ற பால்ககன் நாடுகளின் பக்கம் சேர்ந்தது. இவ்வாறு பால்ககன் குழப்பம் போருக்கு வழிவகுத்தது.

ஜெர்மன் கெய்சர் வில்லியம் தனது தலைநகரமான பெர்லினுக்கும், துருக்கிய பேரரசிலுள்ள இராக்கின் தலைநகரமான பாக்டாடுக்கும் இடையே இருப்புப் பாதையை அமைக்க எண்ணினர்.

(3) 1914-ம் ஆண்டு ஜூன் மாதம் நடைபெற்ற ஒரு நிகழ்ச்சி போரை மூளச்செய்தது. ஆஸ்திரிய நாட்டின் பட்டத்து இளவரசர் பெர்டினண்ட் என்பவரும், அவரது மனைவியும் செர்பியாவின் தலைநகரமான சொராஜிவோவில் தங்கியிருந்தபோது கொல்லப்பட்டனர். ஆஸ்திரிய அரசாங்கம் உடனே மிகக் கடுமையான நிபந்தனைகளை செர்பியாவின் மீது விதித்தது. செர்பியா கொலையாளியைத் தண்டிக்க முன்வந்தாலும், ஆஸ்திரிய நிபந்தனைகளனைத்தையும் நிறைவேற்ற மறுத்தது; எனவே ஆஸ்திரியா ஜெர்மனியின் தூண்டுதலின் பேரில், செர்பியாவின் மீது போர் தொடுத்தது.

ரஷ்யா செர்பியாவின் பக்கம் சேர்ந்து, அதன் பகைவர் களை எதிர்த்தது.

இந்நிலையில் பிரான்ஸ் தான் முன்பே செய்த ஒப்பந் தத்தின்படி, ரஷ்யாவுக்கு உதவியாக ஜெர்மனியை எதிர்த்து நின்றது. ஜெர்மனி மேற்கே பிரான்சைத் தாக்க முயன்ற போது, இவ்விரு நாடுகளுக்குமிடையே யுள்ள சிறிய நாடாகிய பெல்ஜியத்தின் நடுநிலைமையை, இந்த இரு நாடுகளும் (தாம் முன்பே செய்துகொண்ட லண்டன் ஒப்பந்தத்தின்படி) மதித்து நடக்கவேண்டு மெனவும், பெல்ஜியத்தின் நடுநிலைமையை ஜெர்மனி மீறினால், தான் பெல்ஜியத்துக்கு ஆதரவளிப்பதற்காகப் போரில் இறங்கவேண்டிவரும் என்றும், பிரிட்டன் ஜெர் மனிக்கு இறுதி எச்சரிக்கை விடுத்தது. பிரான்ஸ் பெல்ஜிய நடுநிலைமையை மதிப்பதாக உறுதி கூறிற்று; ஜெர்மனியோ, பெல்ஜியத்தின் நடுநிலைமையை வலி யுறுத்தும் ஒப்பந்தத்தை 'வெறும் காகிதத்துண்டு' எனக் கூறி இகழ்ந்து, பெல்ஜியத்தின் வழியாகப் பிரான்சைத் தாக்கத் தன்படைகளை அனுப்பிற்று, எனவே 1914 ஆகஸ்டில், பெல்ஜிய அரசர் பிரிட்டனுக்கு விடுத்த வேண்டுகோளை, பிரிட்டன் ஏற்று, ஜெர்மனிக்கு எதிராக வும், பிரான்சுக்கு ஆதரவாகவும் போரில் இறங்கிற்று.

3. இப்போர் நான்கு ஆண்டுகள் கடலிலும், வானத் திலும், நிலத்திலும், பெல்ஜியம், ரஷ்யமேற்கெல்லை, துருக்கியின் பேரரசு, சீனாவின் வட பகுதி, தென்னாப் பிரிக்கா முதலிய இடங்களிலும் நடைபெற்றது. பாரி சைக் கைப்பற்ற ஜெர்மனி செய்த முயற்சிகள் வெற்றி யடையவில்லை. வெர்டன், சோம், மான்ஸ் முதலிய போர்க்களங்களில் மிகக் கடும் தாக்குதலுக்குப் பின் பிரான்ஸ் காப்பாற்றப்பட்டது. ஜெர்மனிய நீர் மூழ்கிக் கப்பல்கள் பெருமளவில் ஆங்கிலக் கப்பல்களைக் கவிழ்த்

தன. இத்தாலி ஆஸ்திரியாவைத் தாக்கிற்று. ஜெர்மனிக்குச் சீனவில் சொந்தமாக இருந்த குடியேற்ற நாடுகளை ஜப்பானும், ஆப்பிரிக்காவிலும், தென் அட்லாண்டிக் பெருங்கடலிலும் சொந்தமாக இருந்த குடியேற்ற நாடுகளை பிரிட்டிஷ் படைகளும் கைப்பற்றின. டானன்டர்க் சண்டையில் ஜெர்மனி ரஷ்யாவைத் தோற்கடித்தது. 1917, அக்டோபரில் நடைபெற்ற கம்யூனிசப் புரட்சியின் விளைவாக, ரஷ்ய ஆட்சியைக் கைப்பற்றிய லெனின், ஜெர்மனியோடு பிரெஸ்ட் லிட்டோவ்ஸ்க் என்ற இடத்தில் போர் நிறுத்த ஒப்பந்தம் செய்து, தனது நாட்டைப் போரினின்றும் விலக்கி விட்டார். ஆனால் ஐக்கிய அமெரிக்கநாடு, பிரிட்டனின் பக்கத்தில் சேர்ந்து போரில் இறங்கிற்று. துருக்கியும், பல்கேரியாவும் கைஒய்ந்து போயின. 1918-ல் ஜெர்மனி பிரிட்டிஷ் கப்பற்படையின் பொருளாதார முற்றுகையால் நலிவுற்றது; அதன் கப்பற்படைகளில் கலகம் தோன்றிற்று. கெய்சர் இரண்டாம் வில்லியம் ஜெர்மனியினின்றும் நீங்கி ஹாலந்துக்குப் போய்விட்டார். ஜெர்மனியும், ஆஸ்திரியாவும் 1918 நவம்பரில் நேச நாடுகளிடம் சரணடைந்தன. போர் நின்றது.

4 போரின் விளைவுகளில் முதலில் குறிப்பிடப்பட வேண்டியவை, சொல்லிலடங்கா அளவுக்கு ஏற்பட்ட மனித உயிர் அழிவும், பொருள் அழிவும்தான். காயம் பட்டோர், காணமற்போனவர் ஆகியோரின் எண்ணிக்கையும் கணக்கிலடங்காது.

(2) அமைதி உடன்படிக்கை ஒன்று 1919–ல் வெர் செய்ல்ஸில் வரையப்பட்டது. பிரிட்டன், பிரான்ஸ், அமெரிக்கா முதலிய நேச நாடுகளின் தலைவர்களாகிய லாயிட் ஜார்ஜ், கிளமான்ஷு, உட்ரோவில்சன் முதலியோர் தோற்ற ஜெர்மனியின் எதிர்காலத்தை வரைந்

தனர். ஜெர்மனியின் பேரரசு மறைந்தது; ஐரோப்பா வில் அது இணைத்துக்கொண்ட நாடுகள் சிலவும், அதற்கு வேறு கண்டங்களிலிருந்த குடியேற்ற நாடுகள் எல்லாமும் அதனிடமிருந்து எடுத்துக்கொள்ளப்பட்டன. அல்சேஸ்லொரெய்ன் பிரான்சுக்கு மீட்கப்பட்டது. ஜெர்மனியின் கப்பல்படையில் பத்துக்கப்பல்களைத் தவிர மற்றவை அழிக்கப்பட்டன; பிரிட்டனுக்கும் பிரான்சுக்கும் அது பெருந்தொகையை போர்நட்ட ஈடாகக் கொடுக்கவேண்டியதாயிற்று; அதனுடைய வளமான நிலக்கரிப் பகுதியாகிய சார்மாகாணம் பலநாடுகளின் மேற்பார்வையில் 15 ஆண்டுகளுக்கு வைக்கப்பட்டது; அதன் தரைப்படையின் அளவும் மிகச் சிறியதாகக் குறைக்கப்பட்டது; அதில் முடியாட்சி நீக்கப்பட்டுப், பாராளுமன்றக் குடியாட்சியையுடைய ஒரு குடியரசாக, அதுஆக்கப்பட்டது.

போருக்குப் பிந்திய அரசியல் ஏற்பாடுகளைச் செய்வதில், அமெரிக்கக் குடியரசுத் தலைவர் உட்ரோவில்சன் வரைந்த பதினான்கு கொள்கைகளில்,சில ஏற்றுக்கொள்ளப்பட்டுச், செயலிலும் கையாளப்பட்டன. அவர் இயன்றவரையில் ஒவ்வொரு தேசிய இன மக்களும் (nationality) ஒவ்வொரு தனி நாடாக ஆதல்வேண்டும் (principle of national self-determination), என்ற கொள்கையை வலியுறுத்தினார்; இதனைச் செயல்படுத்தும் போது, பழைய பேரரசுகளான ஜெர்மனி, ஆஸ்திரியா-ஹங்கேரி, ரஷ்யா, துருக்கி முதலியவை மறைந்து, சிறிய நாடுகளாகஆயின. ஆஸ்திரியாவும், ஹங்கேரியும் தனியாகப் பிரிக்கப்பட்டு இரண்டு சிறு நாடுகளாகி விட்டன. 18-ம் நூற்றாண்டின் இறுதியில் மறைந்த போலந்து நாடு, இப்போது, ஜெர்மனி. ஆஸ்திரியா, ரஷ்யா ஆகியவற்றிலிருந்து எடுக்கப்பட்ட அதனுடைய நிலங்களை ஒன்று சேர்க்கவே, மீண்டும் தோன்றிற்று. செக், ஸ்லோவாக் ஆகிய இனமக்கள் சேர்ந்த தேசிய

இனம் செக்கோஸ்லோவாக்கியா என்ற ஒரு தனி நாடாக ஆயிற்று. பழைய செர்பியா நாடு இப்போது சில நாடுகளைப்பெற்று, அளவில் பெரியதாக யுகோஸ்லேவியா என்ற தனி நாடாக ஆயிற்று. ருமேனியாவும் ரஷ்யாவின் சில பகுதியைப் பெற்று அளவில் பெரியதாயிற்று. தோல்வியுற்ற பகைநாடாகிய துருக்கியிடமிருந்து பல மாகாணங்கள் எடுத்துக்கொள்ளப்பட்டன. அதில் தேசியக் குடியரசுக் கட்சியினர் கமால் பாஷாவின் தலைமையில் புரட்சி செய்து, முடியாட்சியை ஒழித்துச் சர்வாதிகாரக் குடியரசை நிறுவினர். துருக்கியின் பேரரசிலுள்ள மாகாணங்களாகிய சிரியாவும், பாலஸ்டைனும், ஈராக்கும் பிரான்சினும், பிரிட்டனிலும் ஆளப் படுதற்குக் காப்பு நாடுகளாகக் (mandated territories) கொடுக்கப்பட்டன. ரஷ்யாவுக்கு மேற்கெல்லையில் பால்ட்டிக் கடலை ஒட்டி, லிதுவேனியா, லாட்வியா, எஸ்தோனியா ஆகிய மூன்று சிறு நாடுகள் உண்டாக்கப் பட்டன,

5 வருங்காலத்தில் போர்மூளாமல் தடுக்கவும், அரசியலல்லாத வேறு ஒரு சில துறைகளில், அனைத் துலக அளவில் சில காரியங்களைச் செய்வதற்கும், சர்வ தேச சங்கம் (League of Nations) என்ற கழகம்தோற்றுவிக்கப்பட்டது, இதுவும் உட்ரோவில்சனின் கருத்தினலும், முயற்சியினலும் தோன்றியதாகும்.

— x —

## 2. ரஷ்யப் புரட்சி

### (The Russian Revolution)

1. முன்னுரை 2. புரட்சியின் காரணங்கள் 3 நிகழ்ச்சிகள்—லெனினின் சாதனைகள் 4 ஸ்டாலினின் சாதனைகள் 5 புரட்சியின் விளைவுகள்.

1 இந்நூற்றூண்டின் ஐரோப்பிய வரலாற்றில் குறிப்பிடத்தக்க நிகழ்ச்சி 1917-ம் ஆண்டில் நடைபெற்ற ரஷ்யப் புரட்சி ஆகும். இதற்குமுன் உலக வரலாற்றில் பல்வேறு காலங்களிலும் நடைபெற்ற பிரஞ்சுப்புரட்சி போன்ற பல முக்கிய நிகழ்ச்சிகளைப் போல, இதுவும் வருங்கால வரலாற்றை ஓரளவேனும் உருவாக்கிய ஒரு நிகழ்ச்சியாகும். ரஷ்யாவில் பழைய அமைப்பை மாற்றி, இப்பொழுது பொதுவுடைமைக் கருத்து உலகமுழுவதும், பரவுவதற்கு ஏற்ற தொடக்க நிலையை உண்டாக்கியது இந்தப் புரட்சியே.

2 இப்புரட்சியின் காரணங்களைப் பின்வருமாறு நாம் பாகுபாடு செய்து கூறலாம். (1) ரஷ்ய முடியாட்சி திறனற்றும், வலியற்றும் இருந்தது; பீட்டர் போன்ற திறம் மிக்க சார்கள் ஆட்சியில், நாடு ஒன்றுபட்டும், ஓரளவு பொருளியலில் வளர்ச்சியடைந்தும் இருந்தது; ஆனால் 19-ம் நூற்றூண்டின் பிற்பகுதியில், பழைய தீங்குகள் பரவின; சார்அரசர்கள் மக்கள் நலனைப் புறக்கணித்து, ரஷ்யக் குடிகளிடையே நிறைவற்ற தன்மையை உண்டாக்கினர்; கடைசி சார் அரசரான இரண்டாம் நிக்கலாஸ் குடிகளின் நலனில் சிறிதும் நாட்டம் செலுத்தவில்லை; ஆட்சியில் ஊழல் மிகுந்திருந்தது. முக்கியமாகப் பயிர்த்தொழிலையே நம்பிவாழும், அளவில் பெரியவகுப்பினராகிய குடியானவ மக்களுக்கு, உடனடியாகத் தேவைப்பட்டது பயிரிட நிலம்தான்; இது அவர்களுக்குக் கிடைக்கும் வகையில் அவர் நிலச் சீர்திருத்தம் ஏதும் செய்யவில்லை. பல குடியானவ மக்கள் ரஷ்யப்படையில் சேர்ந்து, போர்வீரராகப் பணியாற்றிய போது, அவர்களுக்கு நாட்டின் ஆட்சியிலுள்ள பலவீனங்கள் நன்கு தெரியலாயின. ரஷ்யக் குடியானவரின் 'நிலப்பசியே' புரட்சிக்கு ஓர் காரணம். (2) பிரஞ்

கப் புரட்சிக்குச் சில நூலாசிரியர்கள் தங்களுடைய கருத்துக்களை வித்தாகத் தந்ததுபோல, ரஷ்யப்புரட்சிக்கும் கார்ல் மார்க்ஸ் (1818–1883) (Karl Marx) என்ற ஜெர்மனிய யூத ஆசிரியரும் ஓர் காரணமாகத் தனது கருத்துக்களைத் தந்தார். ஹெகல் என்ற ஜெர்மனிய தத்துவ ஆசிரியரின் தர்க்கவாதமுறையை (dialectics) மார்க்கம், எங்கல்ஸ் (Engels) என்ற பிரஷ்யத் தொழிலதிபரும் ஏற்று, அதனைப் பொதுவுடைமைக் கருத்துக்குப் பொருந்த அமைத்தனர். (பொதுவுடைமைக் கருத்து Socialism-18-ம் நூற்றுண்டின் இறுதியிலிருந்தே பிரான்ஸ், ஜெர்மனி, பெல்ஜியம், இத்தாலி முதலிய நாடுகளில் அவ்வப்போது பலகழகங்களால் பரப்பப்பட்டு வந்தது.) இருவரும் இவ்வாறு அமைத்த பொருளியல் தர்க்கவாதம் (Dialectic Materialism) என்பதே மார்க்சின் கம்யூனிசக் கோட்பாட்டினடிப்படை ஆகும். மார்க்ஸ் 1847-ல் வெளியிட்ட கம்யூனிசத் திட்ட அறிக்கையின் (Communist Manifesto) சாரமாவது: மனித வரலாறே பொருள்களை உற்பத்தி செய்தல், பங்கிட்டுக் கொடுத்தல் என்ற இரு ஆற்றல்களினுல்தான் உருவாக்கப்பட்டுள்ளது; ஒரு பொருளுக்கு உள்ள மதிப்பே அதனைச் செய்வதற்குத்தேவைப் படும் தொழிலிலிருந்துதான் தோன்றுகிறது; ஆனுல் பொருளைச் செய்வதும், பங்கிட்டுக் கொடுப்பதும் அதற்குத் தேவையான முதலை (Capital) உடைய தனியார் வசம் இருப்பதால், தொழிலால் பொருளுக்குக் கிடைக்கும் பெரும் பகுதி மதிப்பு அல்லது விலை(Surplus value), அதனைச் செய்த தொழிலாளிக்குக் கிடைக்காமல், முதலாளிக்குப் போகிறது; இதனுல் அளவில் சிறிய முதலாளி வகுப்புக்கும், அளவில் பெரிய தொழிலாளி வகுப்புக்கும், காலப் போக்கில் பகை வளர்ந்து, வர்க்கப்போராட்டம் நிகழும்; இதில் தொழிலாளர் வெற்றிபெற்று, முதலாளி

வகுப்பை நீக்கி, தொழிலாளரின் சர்வாதிகார ஆட்சியை அமைப்பர்; அதில் சமுதாயத்தில் ஒவ்வொருவருக்கும் அவரவர் ஆற்றலுக்குத் தக்கபடி அலுவல் அளிக்கப் பட்டு, அவரவர் தேவைக்குத் தக்கபடி பொருள்கள் வழங்கப்படும்; இவ்வாறு மனித சமுதாயம் முழுவதும் பொதுவுடைமைக் கோட்பாட்டிற்குப் பொருந்த மாற்றி அமைக்கப்பட்டபின், அரசு என்பதற்குத் தேவை என்பதே இல்லாமல், அது மறைந்துவிடும். மார்க்ஸ் கூறியவை, இங்கிலாந்தில் அவர் 19-ம் நூற்றாண்டின் நடுவில் வாழ்ந்தபோது காணப்பட்ட சமுதாய, பொரு ளியல், அரசியல் நிலைமைகளினின்றும் தோன்றியவை; எனவே அக்கருத்து முழு உண்மை அன்று; எனினும் உலகத்தொழிலாளர் இயக்கம் என்ற ஒரு எழுச்சிக்கு இது ஓர் முக்கிய ஆதாரமான பட்டயம் ஆகும். இத் தகைய இயக்கம் அரசாங்கத்தைக் கைப்பற்றும் உணர் வுடன் நாளாவட்டத்தில் வேலை செய்தது. (முதலாவது சர்வதேசப் பொதுவுடைமை அமைப்பு-First Communist International-லண்டனில் 1864லும், இரண்டாவது அமைப்பு ஹேக்கில் 1889லும், மூன்றாவது 1919ல் மாஸ்கோவிலும் (Comintern), நான்காவது 1937ல் மாஸ் கோவிலும் கூடித் தங்களுடைய செயல்திட்டங்களையும், விதிகளையும், வகுத்தன.) ரஷ்யாவில் மார்க்சின் புரட்சிப் பொதுவுடைமைக் கருத்துக்களை ஏற்று, சோஷியலிசக் குடியாட்சிக் கட்சியும், சோஷியலிசப் புரட்சியாளர் கட்சி யும் இரகசியமாக அரசாங்கத்தைக் கைப்பற்ற வேலை செய்தன. எனவே மார்க்சின் பொதுவுடைமைக்கருத்து, 1917-ம் ஆண்டின் புரட்சிக்கு ஓர் காரணம் என்று சொல்லலாம்.

(3) புரட்சியை நடத்தும் திட்டத்தை வெற்றியாக நிறைவேற்றிவைக்கத் தக்க தகுதியுள்ள தலைமையை,

லெனின் என்ற சோஷியலிசப் புரட்சிக்கட்சியின் தலைவர் பெற்றிருந்தார். சோஷியலிசக் குடியாட்சியினர் (Social Democrats) சிறுபான்மையர் எனவும் (Mensheviks), சோஷியலிசப் புரட்சியாளர் (Social Revolutionaries) பெரும்பான்மையர் எனவும், (Bolsheviks) கூறப் பட்டனர். இரண்டுக்கும் பிளவு ஏற்படாமல் இணைப்பை ஏற்படுத்தியவர் லியோன் டிராட்ஸ்க்கி (Trotsky) என்ற யூத இளைஞர். சார் அரசாங்கம் இக்கட்சிகளின் நடவடிக் கைகளைக் கண்காணித்தது. எனவே லெனின் ரஷ்யா வினின்றும் தப்பி, 1917ல் ஸ்விட்சர்லாந்தில் இருந்தார். அவர், நாட்டில் தனது புரட்சி அரசாங்கத்தை ஏற் படுத்தி, நாடுமுழுவதிலும் பொதுவுடைமை அமைப்பை நிறுவி, யாவருக்கும் உணவு, இருக்கை, வேலை முதலி யன கிடைக்கச் செய்தல் வேண்டுமென எண்ணிச் செயல்பட்டார்.

3. பொதுவுடைமைப் புரட்சி நடைபெறுவதற்கு ஒரு நல்ல சூழ்நிலையை,முதல் உலகப்போர் ஏற்படுத்திக் கொடுத்தது. இதில் சார் இரண்டாம் நிக்கலாசின் அரசாங்கம் பிரிட்டன், பிரான்ஸ் ஆகியவற்றோடு சேர்ந்து ஜெர்மனியோடு போரிட்டது. பெரும் ரஷ்யப் படை ஒன்றை, ஒரு வலிய சிறிய ஜெர்மன்படை டானன்பர்க் சண்டையில் தோற்கடித்தது. இதுவே சார் அரசாங்கம் வீழவும், சோஷியலிச அரசாங்கம் தோன்ற வும் ஒரு வாய்ப்பை உண்டாக்கிற்று. 1917 மார்ச்சில் நிக்கலாஸ் முடிதுறந்தார். சோஷியலிசக் குடியாட்சிக் கட்சியின் தலைவர் கெரன்ஸ்க்கி ஆட்சியை நிறுவினார். ஆயினும் போர்தொடர்ந்துநடைபெற்றது; நிலப்பங்கீடு எதுவும் அரசாங்கத்தால் செய்யப்படவில்லை. எனவே சோஷியலிசப் புரட்சிக் கட்சியாளர் தமது ஆட்சியை நிறுவ ஆவலுடனிருந்தனர். இவற்றைக் கவனித்த

ஜெர்மன் கெய்சர் இரண்டாம் வில்லியம், லெனின் மாஸ்கோவுக்குப்போய்த் தனது அரசாங்கத்தை நிறுவும்படி அவரை அனுப்பினால், அவருடைய அரசாங்கம் ரஷ்ய–ஜெர்மன் போரை நிறுத்துமென்று கருதி, அவ்வாறு செய்தல் வேண்டுமென்ற நிபந்தனையுடன், லெனினைத் தக்க பாதுகாப்புடன் மாஸ்கோவுக்கு அனுப்பினார். மாஸ்கோவில் லெனினுடன் அவருடைய கட்சியானரும், நிலப்பங்கீட்டை விரும்பிய குடியானவரும் சேர்ந்து, 1917, அக்டோபர், நவம்பரில் புரட்சி செய்ய, லெனின் ஆட்சியைக் கைப்பற்றினர்; அவர் 1918 மார்ச்சில், பிரெஸ்ட்லிட்டோவ்ஸ்க் உடன்படிக்கை யின்படி ரஷ்யாவைப் போரினின்றும் விலக்கினர். படை வீரர்கள், தொழிலாளர்கள் ஆகியோரின் பிரதிநிதிக ளடங்கிய ஆலோசனைக் குழுக்கள் அல்லது சோவியத்துக்கள் (Councils or Soviets) நாடெங்கிலும் அமைக்கப்பட்டன; இந்த சோவியத்துக்களே நாட்டின் நடு அரசாங்கமான லெனினின் சர்வாதிகார அரசாங்கத்திற்கு அடித்தளமாக இருந்தன. நாடும் சோவியத் ரஷ்யா எனப்பட்டது.

லெனினின் சாதனைகள் (1917–24): புதிய சோஷியலிச அரசாங்கம் பல இடுக்கண்களை மேற்கொள்ள வேண்டி இருந்தது. 1919–1920ல் முடியாட்சியாளர் படைதிரட்டிப் புதிய அரசாங்கத்தின் செம்படையுடன் போரிட்டனர்; முடியரசின் ஆதரவாளர்களின் தலைவர்கள் ராங்கல், கோல்ச்சாக், யூடனிக் முதலியோர்; அவர்கள் தமது வெண்படைகளுக்கு மேற்கத்திய நாடுகளிலிருந்து ஆதரவுபெற்றனர்; டிராட்ஸ்க்கி இப்படையினரை 1920ல் சிதறஅடித்தார். லெனின், ரஷ்யாவில் அயல் நாடுகளால் போடப்பட்ட மூலதனத்தைத் தள்ளுபடி செய்ததனாலும், ரஷ்யா போரில் தனது கூட்டாளிகளைக்

கைவிட்டுவிட்டதனாலும், லெனின் உலகமுழுவதும் பொதுவுடைமை அரசாங்கம் ஏற்படுத்தும் முயற்சியை ஆதரித்ததனாலும் மேற்கு ஐரோப்பிய நாடுகள் ரஷ்யா வுக்குப் பொருள்களை அனுப்பவில்லை; அவை லெனின் நிறுவிய அரசாங்கத்துக்கு ஒப்புதலளிக்கவுமில்லை. 1917ல் ரஷ்யாவில் தொழில்களெல்லாம் தேசீய உடைமைக ளாக்கப்பட்டன; எனினும் போதிய முதல் வசதியின்மை யால் உற்பத்தி பெருகவில்லை. படைவீரர்களுக்கு நிலங்கள் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டன; எனினும், தொழிலாளரைக் கூலிக்கு அமர்த்தாமல் அவற்றைப் பயிர்செய்ய இயலவில்லை. குழப்பமும், பஞ்சமும் நிறைந்த இச்சூழ்நிலையில், செயலறிவு நிறைந்த லெனின், தனிப் பொதுவுடைமைக் கருத்துக்களைச்செயல்படுத்தும் முயற்சிகளைக் கைவிட்டுவிட்டு, அரசாங்கம் நிலை பெறவும், பொருளியல் சீர்ப்படவும், ஒரு புதிய பொரு ளாதாரக் கோட்பாட்டைக் (New Economic Policy) கடைப்பிடித்தார். இதன்படி சிறு அளவில் தனியார் தொழில் முயற்சிக்கு ஆதரவு கொடுக்கப்பட்டது; பண்ணைகளில் குடியானவர் கூலிக்குத் தொழிலாளிகளை அமர்த்திக்கொள்ளவும், உற்பத்தியில் தேவைக்குப் போக மிச்சத்தைச் சிறு ஊதியத்துக்கு விற்கவும், லெனின் உடன்பாடு அளித்தார். 1928-ம் ஆண்டில் ஐந்தாண்டுத் திட்டப் பொருளாதாரக் கொள்கையை ஸ்டாலின் கையாளும் வரையில், சோவியத் ரஷ்யாவில் லெனினின் புதிய பொருளாதாரக் கோட்பாடே (N. E. P.) நடைமுறையிலிருந்தது. இதனால் மற்ற ஐரோப்பிய நாடுகள் சோவியத் ரஷ்யாவுக்கு ஒப்புதல் அளிக்கவும், வாணிபத் தொடர்பு கொள்ளவும் முன் வந்தன. லெனின் வெற்றியடைவதற்கு நன்கு அமைக்கப்பட்ட கம்யூனிசக்கட்சியும், இரகசியப் போலீஸ் படையும், செம்படையும் (Red Army) உதவி செய்தன.

4. 1924-ல் லெனின் இறந்ததும், ரஷ்யக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுச் செயலாளராக இருந்த ஸ்டாலினுக்கும், டிராட்ஸ்க்கிக்கும் பொதுவுடைமை இயக்கத்தைப் பரப்புவதைப்பற்றிக் கருத்து வேறுபாடு வளர்ந்தது. உலகப் பொதுவுடைமைப் புரட்சி நடைபெற ரஷ்யா முயலவேண்டுமென டிராட்ஸ்க்கி கூற, நாட்டு வளர்ச்சியில் முதற்கவனம் செலுத்த வேண்டுமென ஸ்டாலின் கூற, ஸ்டாலினின் ஆதரவாளர் வலிபெருக, டிராட்ஸ்க்கி 1929ல் நாட்டைவிட்டு வெளியேற்றப்பட்டார். அவருடைய ஆதரவாளரின் அச்சுறுத்தல்களை, பொருள் வளர்ச்சிக்கு இடையூருகக் கருதி, 1924-ல் ஆட்சியைக் கைப்பற்றிய ஸ்டாலின், அத்தகையோரைப் பயங்கரவாதிகளென ஒழித்தார்; 1936-37 லும் இத்தகைய 'களை எடுப்புக்களை' (Purges) கட்சியிலும், செம்படையிலும் நிறைவேற்றிய பின், ஸ்டாலின் தனது நிலையை வலுவாக வைத்துக் கொண்டார். ஸ்டாலின் தனது ஆட்சிக் காலத்தில் (1924-1953) பொருளாதார வளர்ச்சிக்காகப் பல ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றினர். பண்ணைகள் கூட்டுப்பண்ணைகளாக அரசாங்கக் கட்டுப்பாட்டில் பயிரிடப்பட்டன. வீடுகளும், அவற்றைச் சுற்றியுள்ள சிறு நிலப்பகுதியும், அதில் வாழ்பவருக்கு உடைமையாக (வாழ்நாளுக்கு மட்டும்) கொடுக்கப்பட்டன. மற்றப்படி நாடும், அதிலுள்ள எல்லா வளங்களும் அரசாங்கத்தின் உடைமைகளே. தொழில்களெல்லாம் அரசாங்கத்தால் நடத்தப்பட்டன. கனரகத் தொழிலில் ரஷ்யா நல்ல வளர்ச்சி பெற்றது; வீட்டுவசதி, கல்வி, சுகாதாரம், வேலை முதலியவற்றில் முன்னேற்றம் தோன்றிற்று. அரசியலமைப்பில் மாறுதலெதுவும் ஏற்படாமல், ஒரே கட்சியின் சர்வாதிகார ஆட்சியே சில குடியாட்சி அமைப்புக்களுடன் இருப்பதற்கு வழி

செய்யப்பட்டது; 1936-ம் ஆண்டின் அரசியலமைப்புச் சட்டத்தின்படி, 'சோவியத் ரஷ்யா நாடு, 11 சோவியத் சோஷியலிஸ்ட் குடியரசுகள் தாமாகவே கூடிச் சேர்ந்து அமைத்த ஒரு பொதுவுடைமைநாடு' ஆகும். நாட்டின் பல்வேறு பகுதிகளிலுள்ள உள்ளூர் சோவியத் குழுக்களில், கிராம மக்களும், தொழிலாளரும் தேர்ந்தெடுத்த உறுப்பினர் உள்ளனர்; இந்த சோவியத்துக்கள் தலைநகரத்தில் அவ்வப்போது கூடும் சோவியத் காங்கிரசுக்கு உறுப்பினர்களை அனுப்புகின்றன; இக்கூட்டங்களில் அமைச்சர்கள் (Commissars) தேர்ந்தெடுக்கப்பட்டு, கோட்பாடுகள் தீர்மானிக்கப்படுகின்றன. 1944-ம் ஆண்டில் உறுப்புக் குடியரசுகள் ஒவ்வொன்றும் (Constituent republics) தத்தமக்குத் தனியாக அயலுறவு அமைச்சர்களையும், பாதுகாப்பு அமைச்சர்களையும் நிறுவிக்கொள்ள உரிமைகள் கொடுக்கப்பட்டன. பல குடியாட்சிச் செயல் முறைகள் கையாளப்பட்டாலும், சட்டப்படியாக நாட்டில் கம்யூனிஸ்ட் கட்சி ஒன்றுதான் செயல்பட உரிமை பெற்றுள்ளது; சட்டமியற்றவும், செயல் படுத்தவும், நீதிவழங்கவும் கூடிய அதிகாரங்கள் பிரிக்கப்படாமல் குவிக்கப்பட்டுள்ளன.

5. 1917-ம் ஆண்டின் பொதுவுடைமைப் புரட்சியினால் ரஷ்யாவிலும், வெளி நாடுகளிலும் சில விளைவுகள் தோன்றின. (1) ரஷ்யாவில் முடியாட்சி நீங்கி, பொதுவுடைமைச் சர்வாதிகார ஆட்சி தோன்றிற்று. (2) ரஷ்யாவில் தோன்றியதைப்போல உலகமெங்கிலும் பொதுவுடைமை இயக்கங்கள் தோன்ற முயற்சிகள் செய்யப்பட்டன. 1919–லும், 1937–லும் மூன்றும், நான்காம் சர்வதேசப் பொது வுடைமை அமைப்புக்கள் மாஸ்கோவை மையமாகக் கொண்டு செயல்பட்டன. இவை மற்ற நாடுகளிலும் புரட்சிகளின் மூலமாகப்

பொதுவுடைமை அரசாங்கங்களை நிறுவ, மக்களினிடையே மார்க்சின் புரட்சிக் கருத்துக்களைப் பரப்பின. (3) பொதுவுடைமை இயக்கத்துக்கு எதிர்ப்பாக ஜெர்மனியில் நாசிச இயக்கமும், இத்தாலியில் பாசிச இயக்கமும் தோன்றி வளர்ந்தன.

## (3) சர்வதேச சங்கம்

### (League of Nations)

1. முன்னுரை; 2. நோக்கமும், அமைப்பும் 3. அதன் சாதனைகள்; 4. முடிவு.

1. முதல் உலகப் போரினால் (1914–18) தோன்றிய விளைவுகளில் சர்வதேச சங்கம் ஒன்று. இறைமையுடைய நாடுகள் (Sovereign States) தாமாகவே விரும்பிச் சில நோக்கங்களுக்காக அமைத்துக்கொண்ட ஓர் சங்கம் இந்தச் சர்வதேச சங்கம் ஆகும். இது 1919-ம் ஆண்டிலிருந்து 1936-ம் ஆண்டுவரை செயல்பட்டது. இரண்டாம் உலகப்போர் தொடங்கு முன்னரே இது மறைந்துவிட்டது. இப்போது செயல்பட்டு வரும் ஐக்கிய நாடுகள் சபைக்கு இது ஒரு முன்னோடி ஆகும். இந்த நிறுவனத்தின் நோக்கங்களையும், அமைப்பையும் குறிப்பிடும் ஒப்பந்தப் பட்டயம் (Covenant) உட்ரோ வில்சனுடைய முயற்சியால் எழுதப்பட்டு, 1919-ம் ஆண்டின் வெர்செயில்ஸ் அமைதி உடன்படிக்கைகளில் சேர்க்கப்பட்டது. எனவே இவ்வுடன்படிக்கையில் கையெழுத்திட்டு, அவற்றை ஏற்றுக்கொண்ட அரசுகள், இந்த நிறுவனத்திலும் உறுப்பினராகச் சேர்ந்து, அதன் நோக்கங்களை நிறைவேற்றுவதாக ஒப்புக்கொண்டன.

2. ஒவ்வொரு உறுப்பு நாடும் சர்வதேச அமைதியையும், பாதுகாப்பையும் ஏற்படுத்தவும், போரிலிறங்காமல் இருக்கவும், வேற்று நாடுகளோடு தனக்குஉள்ள தகராறுகளை சங்கத்தின் தீர்ப்புக்கு விடவும், ஒப்புக் கொண்டது. உறுப்பு நாடுகள் இரகசிய உடன்படிக்கைகளைத் தவிர்த்து வெளிப்படையாக ஒப்பந்தங்கள் செய்தல் வேண்டும். நியாயமான தொழில் நிலைமைகளை நிறுவவும், செய்திப்போக்கு வரவு, வாணிபம் ஆகியவற்றில் உரிமைகளைக் காக்கவும், சுகாதார வசதிகளை சர்வதேச நிலையில் உயரச்செய்யவும், உறுப்பினர் பணி செய்தல் வேண்டும். கடந்தபோரில் தோற்ற பகை நாடுகளின் குடியேற்ற நாடுகளைச் சுய ஆட்சிக்கு ஏற்ப, சங்கம் அவற்றின் மீது பொறுப்பாட்சி ஏற்படுத்தல் வேண்டும்.

சங்கத்தின் நோக்கங்களை நிறைவேற்றுவதற்கு ஒரு பொது மன்றமும் (Assembly), ஒரு நிர்வாக மன்றமும் (Council), ஒரு செயலாளர் அலுவலகமும் (Secretariat), ஒரு சர்வதேச நீதிமன்றமும் அமைக்கப் பட்டன. ஒவ்வொரு உறுப்பு நாடும் பொதுமன்றத்தில் உறுப்பினராக இருந்தது. நிர்வாக மன்றத்தில் நான்கு நிரந்தர உறுப்பினரும், பொது மன்றத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒன்பது உறுப்பினரும் இருந்தனர். இதுவே சங்கத்தின் அலுவல்களை அவ்வப்போது தீர்மானித்து நடவடிக்கை எடுத்தது. சங்கத்தின் பொதுச்செயலர் நிர்வாகமன்றத்தால் அமர்த்தப்பட்டார். அவருடைய அலுவலகம் ஜெனிவாவில் அமைக்கப்பட்டிருந்தது. சங்கத்தின் அலுவலுக்கு வேண்டிய செய்திகளை அவர் சேகரித்தும், அதன் தீர்மானங்களை நிறைவேற்றியும் வைத்தார். ஹேக் நகரத்தில் சர்வதேச நீதிமன்றம் இருந்தது. அதன் 11 நீதிபதிகளும் ஒன்பது ஆண்டுக்

காலத்துக்கு பொது மன்றத்தாலும் நிர்வாக மன்றத்தாலும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். சர்வதேசத் தொழிலாளர் நிலையம் (International Labour Office) ஒன்றும் அமைக்கப்பட்டது.

3. சர்வதேச சங்கம் சிறு அரசியல் சிக்கல்களைத் தீர்த்துவைப்பதில் வெற்றிபெற்றது. துருக்கிக்கும், இராக்குக்கும் இடையே உள்ள சிறு சிக்கலையும், தென் அமெரிக்காவில் கொலம்பியா, பெரு என்ற இரு சிறு நாடுகளுக்கிடையேயுள்ள சிக்கலேயும் இது தீர்த்து, சிரியா, பாலஸ்டைன், இராக் முதலிய நாடுகளைச் சுய ஆட்சிக்குத் தகுதியாகும்படி, அவற்றின் மீது காப்பு ஆட்சியை நிறுவிற்று. அதன் நீதிமன்றம் ஓரஞ்சாராமல் தீர்ப்பு வழங்கிற்று. தொழில் நிலைமைகளையும், சுகாதார நிலைமைகளையும் சீர்திருத்த சங்கம் உதவிற்று. ஆஸ்திரியாவின் சீரமைப்புக்கு உதவியாகப் பல நாடுகள் ஒன்றுகூடி, அதன் நிதி பற்றிய ஏற்பாடுகளைத் தீர்மானிக்க அது உதவிற்று. 1926-ல் ஜெர்மனியும், 1934-ல் சோவியத் ரஷ்யாவும் இதில் உறுப்பினராயின.

இவ்வளவில் அது நல்ல செயல்களைச் செய்தபோதிலும், அதனால் பெரிய நாடுகளின் வல்லந்தமான செயல்களைத் தடுக்க முடியவில்லை. 1931-ல் ஜப்பான் சீன மாகாணமாகிய மஞ்சூரியாவைத் தாக்க, சீனா சங்கத்திடம் முறையிட, சங்கம் ஓர் ஆய்வுக் குழுவை அமர்த்திற்று. இக் குழுவின் அறிக்கையையோ, சங்கத்தின் தீர்மானங்களையோ ஜப்பான் ஒப்புக்கொள்ளாமல், மஞ்சூரியாவைக்கைப்பற்றி,பின்,சங்கத்தினின்றும்விலகிற்று. 1935-ல் இத்தாலிய சர்வாதிகாரி முசோலினி அபிசீனியாவைத் தாக்கினார்; இதிலும் சங்கம் செய்த தீர்மானங்களுக்கு மதிப்புக் கொடுக்காமல், இத்தாலி அபிசீனியாவைக் கைப்பற்றிய பின், சங்கத்தினின்றும் விலகிற்று.

லீக்கிலிருந்தும் விலகிற்று. அதில் நடைபெற்ற உள் நாட்டுப் போரில் இத்தாலி, ஜெர்மனி, ரஷ்யா முதலிய நாடுகள் தலையிட்டபோது, அவற்றைச் சங்கத்தால் தடுக்க இயலவில்லை. ஜெர்மனியில் நாசிச சர்வாதிகார ஆட்சி தோன்றியதும், 1933-ல் அந்நாடு சங்கத்தினின்றும் விலகிற்று. சங்கத்தின் ஒப்பந்தப் பட்டயத்துக்கு மாருக, பல இரகசிய ஒப்பந்தங்களை நாடுகள் செய்தன. ஜெர்மனி பல ஆக்கிரமிப்புச் செயல்களைச் செய்து கடைசியில் 1939-ல் இரண்டாம் உலகப்போரை உண்டாக்கிற்று.

4. சர்வதேச சங்கம் தோற்று மறைந்ததற்குப் பல காரணங்கள் காணப்படுகின்றன. (1) தனது தீர்மானங்களை உறுப்பு நாடுகளின் மீது நிறைவேற்றி வைப்பதற்கு வேண்டிய படை வலிமை சங்கத்துக்கு இல்லை; எனவே ஜப்பான், ஜெர்மனி, இத்தாலி முதலியவற்றின் ஆக்கிரமிப்புச் செயல்களை அதனால் தடுக்க இயலவில்லை. (2) அதனைத் தோற்றுவித்த உட்ரோ வில்சனின் நாடாகிய ஐக்கிய அமெரிக்க நாடே சங்கத்தில் உறுப்பினராகச் சேர ஒப்புக்கொள்ளாததனால், அப்பெரிய நாட்டினின்றும் சங்கத்துக்குக் கிடைக்கக்கூடிய ஒத்துழைப்பையும், ஆற்றலையும் அது இழந்தது. (3) ஐரோப்பிய வல்லரசுகள் தத்தம் நோக்கங்களுக்கேற்ப ஆக்கிரமிப்புச் செயல்களை நிறைவேற்றியபின், சங்கத்தைவிட்டு நீங்கி, அதனை வலிமையிழக்கச்செய்தன; அவற்றின் சர்வாதிகாரப் போக்குக்கும், சங்கத்தின் அடிப்படைக் கொள்கைகளான குடியாட்சிக் கருத்துக்களுக்கும் ஒத்துவரவில்லை. (4) சங்கத்தில் எஞ்சிநின்ற பெரிய வல்லரசுகளான பிரிட்டனும், பிரான்சும், சங்கத்தைத் தங்களுடைய நலன்களைக் காத்துக்கொள்ளுதற்கே பயன்படுத்தின. இந்த எண்ணம் மற்ற வல்லரசுகளுக்கு தெளி

வாகத் தெரிந்தது; எவ்வாறெனில், இச் சங்கத்தைப் பற்றிய ஒப்பந்தப் பட்டயம் (Covenant), வெர்செய்ல்ஸ் அமைதி உடன்படிக்கையோடு சேர்த்து இணைக்கப் பட்டமையால்,உடன்படிக்கையைஏற்றநாடுகளெல்லாம், இச்சங்கத்தில் சேர்ந்து பணிசெய்ய வேண்டுமென்று கட்டாயப்படுத்தப்பட்டன. இவ்வாறு பழிதீர்க்கும் நோக்கத்தோடு செய்யப்பட்ட உடன்படிக்கையோடு, சங்கமும் இணைக்கப்படவே, இவ்வுடன்படிக்கையை நாசிச ஜெர்மன் அரசாங்கம் மதிக்காமல் நடக்கும்போது, சங்கமும் நிலைகுலையலாயிற்று.

அரசியல் துறையில் சங்கம், அமைதியையும், பாதுகாப்பையும் நிலைநிறுத்தத் தவறினும், மற்றத் துறைகளில் அது போற்றற்குரிய தொண்டுசெய்து, இக் கால ஐக்கிய நாடுகள் சபைக்கு அரசியலல்லாத துறையில் நல்ல ஒரு வழிகாட்டியாக இருக்கிறது.

—(0)—

## 4. இத்தாலியில் தோன்றிய பாசிசம்

### (Fascism in Italy)

1. முன்னுரை; 2. பாசிசப் புரட்சி தோன்றக் காரணங்கள்; 3. பாசிச ஆட்சியின் அமைப்பு; 4. பாசிசத்தின் சாதனைகள்; 5. வீழ்ச்சி.

1. இந்நூற்றாண்டின் இரு உலகப் போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் சர்வாதிகார ஆட்சிகள் சில ஐரோப்பிய நாடுகளில் தோன்றின. இத்தாலியில் பெனிட்டோ முசோலினி (Benito Mussolini) என்ற பாசிசக் கட்சித்தலைவருடைய சர்வாதிகாரஅரசாங்கம் 1922-ம் ஆண்டிலிருந்து 1945-ம் ஆண்டுவரை நடைபெற்றது.

ஜெர்மனியில் ஹிட்லர் என்ற நாசிக்கட்சித் தலைவருடைய சர்வாதிகார அரசாங்கம் 1933-லிருந்து 1945வரை நடைபெற்றது; இவை இரண்டும் இரண்டாம் உலகப் போரினிறுதியில் மறைந்தன.

2. இத்தாலியில் பாசிச சர்வாதிகார ஆட்சி தோன்றப் பலகாரணங்கள் இருந்தன. (1) தொன்று தொட்டே இத்தாலியமக்கள் உரிமை வாழ்க்கையையும் குடியாட்சி முறையும் போற்றிவந்தனர்; இதனை அவர்களுடைய அரசர் சார்ல்ஸ் ஆல்பர்ட் என்பவர் 1848-ம் ஆண்டில் இத்தாலிக்காக ஏற்படுத்திய பாராளுமன்றக் குடியாட்சி அரசியலமைப்பு (Statuto) காட்டுகிறது. இத்தாலி ஒரே தேசிய இனமாக இணைந்ததுவும், இத்தகைய பாராளுமன்றக் குடியாட்சி முறையின் மூலமாகவே நடைபெற்றது. பல கட்சிகளும், பூசல்களும் 1911-க்குப் பின்னர் தோன்றவும், நாட்டு நலனில் அரசாங்கம் கவனம் செலுத்தவில்லை; குடியானவருடைய நிலை மிகவும் சீர்கெட்டிருந்தது. ஆட்சியில் ஊழல் மலிந்திருந்தது. எனவே பொதுமக்களுக்குப் பாராளுமன்ற ஆட்சியில் நம்பிக்கை இல்லை. படையினரே ஓரளவு பொதுமக்களின் மதிப்பைப் பெற்றிருந்தனர். 1896-ல் இத்தாலிய அரசாங்கம் அபிசீனியாவைக் கைப்பற்றச் செய்த முயற்சி தோற்றது. மீண்டும் ஒரு படையெடுப்புக்கு வேண்டிய பணத்தைக் கொடுக்கப் பாராளுமன்றம் மறுத்தது. உணவுப் பொருள் கேட்டுக் கலகங்களும், சோஷியலிசக் கிளர்ச்சிகளும், வேலை நிறுத்தங்களும் அடிக்கடி நிகழ்ந்தன. முதல் உலகப் போரில் இத்தாலி எக்கட்சியிலும்சேராமல், நடு நிலைமையோடு விலகியிருத்தல் வேண்டுமென்று, இத்தாலிய அரசாங்கத்தின் முதலமைச்சர் ஜியோலிட்டி (Giolitti) என்பவர் தீர்மானித்தார். ஆயினும் ஆஸ்திரியாவிட

மிருந்து டிரென்ட்டினோ (Trentino) என்ற பகுதியைக் கைப்பற்ற வேண்டுமென்ற அவாவினால் தூண்டப்பட்டுப் பல மக்கள் போரில் இறங்க விரும்பினர். மக்களுடைய விருப்பத்துக்கு இணங்கப் போரிலிறங்கிய இத்தாலிக்கு, 1919ல் அமைதி உடன்படிக்கையினால் இஸ்ட்ரியா, டிரியஸ்டே, டிரெண்டினோ முதலியவை மட்டுமே கொடுக்கப்பட்டன; இத்தாலி விரும்பியவாறு டால்மேஷிய கடற்கரைப் பகுதியோ, (Dalmation Coast) வேறு கண்டங்களில் குடியேற்ற நாடுகளோ அதற்குக் கொடுக்கப்படவில்லை. ஏற்கனவே போரினால் வலிமையும், ஒழுங்கும் சீர்குலைந்து போயிருந்த இத்தாலியில், இந்த ஏமாற்றம் மேலும் மக்களுடைய நிறைவற்ற தன்மையையே தூண்டிற்று.

(2) பொதுவாக இத்தாலியில் காணப்பட்ட வறிய நிலையில்புரட்சிக்கருத்துக்கள் பரவின. பொதுவுடைமைக் கட்சியினர் அரசாங்கத்தைக் கைப்பற்ற மக்களுடைய ஆதரவைத்தேடினர். இதில் அவர்களுக்கும், பாசிசக் கட்சியினருக்குமிடையே அடிக்கடி மோதல் ஏற்பட்டது. அரசாங்கமோ நாட்டில் குழப்பத்தை அடக்கவும், சட்டத்தையும், ஒழுங்கையும் நிலைநிறுத்தவும் யாதொன்றும் செய்யாமல் சும்மா இருந்தது. எனவே தொழிலாளரும், குடியானவரும் ரஷ்யாவில் நடந்ததைப்போல, தொழிற்சாலைகளையும், பண்ணைகளையும் தம் வசமாக்கினர்; எனினும் குழப்பம் தீரவில்லை; வறியநிலை நீங்கவில்லை. இந்தநிலை, யாவருடைய உடைமையையும், உரிமைகளையும் பாதுகாக்கவும், நாட்டில் அமைதியை நிலைநிறுத்தித், தனியார் சொத்துரிமையைப் பாதுகாத்துப், பொருள்வளம் உண்டாக்கக்கூடிய சூழ்நிலையை ஏற்படுத்தவும் வல்ல, ஒரு வலிய அரசாங்கம் தேவை, என்பதைஎடுத்துக்காட்டிற்று இவ்வாய்ப்பைநன்குபயன்

பற்றிக் கொண்டனர் பாசிஸ்ட் கட்சியினர்; அவர்களுடைய தலைவர் பெனிட்டோ முசோலினி 1922 அக்டோபர் இறுதியில் ரோம் நகரத்துக்குச் சென்று, இத்தாலிய அரசர் மூன்றாம் விக்டர் இம்மானுவலிட மிருந்து ஆட்சி அதிகாரத்தை வாங்கிக் கொண்டார்.

3. இத்தாலியின் பாசிச சர்வாதிகாரியான பெனிட்டோ முசோலினி, போர்லி என்ற ஊரில் 1883-ல் ஒரு கருமானின் மகனாகப் பிறந்தார். தொடக்கத்தில் அவர் ஒரு பொதுவுடைமைக் கொள்கையாளராக இருந்தார். முதல் உலகப் போரில் ஆஸ்திரியாவுக் கெதிராக நடந்த சண்டையில் இவரும் கலந்து கொண்டார். போருக்குப் பின்னர் நாட்டில் குழப்பம் நிலவிற்று; பொதுவுடைமைப் புரட்சியாளர் தனியார் உடைமை முறையை நீக்க முயன்றனர். ஆனால் அவருடைய முயற்சிகள் பயனளிக்கவில்லை; தனி உடைமையாளர்கள் நாட்டின் பாராளுமன்ற அரசாங்கம் தமது உடைமைகளுக்குப் பாதுகாப்பு அளிக்குமென்று நம்பினர்; ஆனால் அரசாங் கத்தால் ஒன்றும் செய்ய முடியவில்லை. எனவே மக்கள் அரசாங்கத்தில் நம்பிக்கை இழந்தனர்; நாட்டில் ஒரு வலிய அரசாங்கம் தேவைப்பட்டது. இச் சூழ்நிலையில் முசோலினி பொதுவுடைமைக் கோட்பாடுகளைக் கைவிட்டு விட்டு, தான் நாட்டை ஆளுதற்கு உதவியாக இருக்கும் பொருட்டு, ஒரு புதிய கட்சியை அமைத்தார், இக் கட்சியினர் பாசிஸ்ட்டுகள் எனப்பட்டனர். பாசிஸ்ட்டுகள் என்ற பெயர் பண்டைய ரோமானிய அரசாங்கத்தின் அடையாளத்திலிருந்து எடுக்கப்பட்டது. பண்டைய ரோமானிய நிர்வாக அலுவலராகிய கான்சலுக்கு முன்னர், சிறு அலுவலர் பல குச்சிகளையும், ஒரு கோடரியையும் சேர்த்துக் கட்டிய கட்டு ஒன்றைத் தூக்கிச் சென்றனர். இக் கட்டு பாசஸ் (fasces) எனப்படும்.

பாசிசக் கோட்பாட்டின் சாரமாவது : முழு உயர்ந்த அதிகாரமுடைய அரசாங்கம் நிறுவப்படுதல் வேண்டும்; இதுவே நாட்டின் மக்களோடு இடையறாது தொடர்பு கொண்டு, வாழ்க்கையின் எல்லாத் துறைகளையும் கட்டுப் படுத்தல் வேண்டும். இதிலிருந்து பெறப்படும் சில உண்மைகள் வருமாறு: அமைதி (Peace) என்பது நடைமுறையில் நிலைபெற முடியாத ஒன்று; தனியாருடைய உடைமை உரிமை, சமுதாய நலனுக்குகந்த முறையில் காப்பாற்றப்படுதல் வேண்டும்; பல சிக்கலான கேள்விகளுக்குத் தீர்வு காணுதற்கு யாவருக்கும் ஒத்த திறமை இருப்பதில்லை; எனவே சமத்துவக் கோட்பாட்டினடிப்படையில் அமைந்த குடியாட்சிமுறை, நடைமுறைக்கு ஒவ்வாதது; அரசாங்கமே தனிமனிதரை விட ஆற்றலும் அறிவும் மிக்கதாக இருப்பதால், எவருடைய செயலும் அரசுக்கு உட்பட்டும், அரசுக்குப் புறம்பாக இல்லாமலும், அரசுக்கு மாறாக இல்லாமலும் இருக்க வேண்டும்.

இக்கருத்தையொட்டி அரசும், அரசாங்கமும் அமைக்கப்பட்டன. ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள ஒவ்வொரு தொழிலிலும் ஈடுபட்டுள்ள முதலாளிகளும், தொழிலாளரும் தனித்தனியாகக் கழகங்களில் (syndicates)அமைக்கப்பட்டனர்; இக்கழகங்கள் கூட்டுக்கழகங்களாகவும் (federations), கூட்டுக்கழகங்கள் இணைப்புக் கழகங்களாகவும் (confederations, அமைக்கப்பட்டு, இவை தொழிலாளரும் முதலாளிகளும் சேர்ந்த கூட்டு நிறுவனங்களாக (corporations) நிறுவப்பட்டன. இவற்றின் பிரதிநிதிகளடங்கிய தேசியக் கூட்டு நிறுவனங்களின் ஆலோசனை மன்றம் (national council of conporations) ஒன்றும் அமைக்கப்பட்டது. பாசிசக்கட்சி ஒன்றே செயல் படுவதற்குச் சட்டம் இடமளித்தது. இக்கட்சியின் ஆலோசனை மன்றத்திலிருந்தும், தேசியக் ட்டு நிறுவனங்களின் ஆலோசனை மன்றத்தி

லிருந்தும், உறுப்பினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சட்ட மன்றத்தில் இருந்தனர். ஆனால் இதற்கு அரசாங் கத்தைக் கட்டுப்படுத்தவோ, விலக்கவோ, அரசாங்கத் தின் இசைவை முன்னரே பெருமல் சட்டத்தைச் செய்யவோ, அதிகாரம் கிடையாது. பேச்சுரிமை, நூல் வெளியிடும் உரிமை, மக்கள் ஒன்றுகூடும் உரிமை முதலிய அடிப்படை உரிமைகளே கிடையாது. பழைய பாராளுமன்ற அரசியலமைப்புச் சட்டத்தை (Statuto), முசோலினி கொஞ்சங் கொஞ்சமாகத் திருத்தி, எல்லா அதிகாரங்களேயும் தன்னிடம் வைத்துக்கொண்டார். அரசாங்கத்தின் தலைவர் (Duce) என அவர் தன்னைக் கருதினும், அவர் அரசருக்குத்தான் பொறுப்போடு இருந்தார்; அமைச்சர்கள் அவருக்குப் பொறுப்போ டிருந்தனர்; அவரோ, அமைச்சர்களோ சட்டமன்றத் துக்குப் பொறுப்பாக இல்லை. அரசாங்கத்தை எதிர்த்தவ ரெல்லாம், பாசிஸ்ட் கட்சியினரின் வன்முறைச் செயலுக்கு ஆளாயினர்.

4. உள்நாட்டைப்பொறுத்தவரையில், முசோலினி யின் ஆட்சி ஓர் சர்வாதிகாரம் என்பதைத்தவிர, மக்களுக்கு நல்ல ஆக்கப் பணிகளேச் செய்தது. தனியார் சொத்துரிமையும், குடும்ப வாழ்க்கை உரிமையும் அரசாங்கத்தால் மதிக்கப்பட்டுப் பாதுகாக்கப் பட்டன. பல சதுப்பு நிலங்கள் விளேச்சல் நிலங்களாக மாற்றப் பட்டன; உணவுப் பொருள்கள் மிகக் கூடுதலாகப் பயிரிடப்பட்டன. பொதுவாக வேளாண்மைத் தொழி லுக்கு ஊக்கம் கொடுக்கப்பட்டது. வறியநிலைமை நீங்க, வேலை வாய்ப்புக்கள் தோற்றுவிக்கப்பட்டன; புதிய தொழில்கள் தொடங்கப்பட்டன. ஆறுகளில் அணைகள் கட்டப்பட்டு, மின்சக்தி உண்டாக்கப்பட்டது. தொழிலா ளர்களுக்கும், தொழிலதிபர்களுக்குமிடையே நெடுங்

காலமாக இருந்துவந்த பூசல்களெல்லாம் அரசாங்கத்தால் தீர்த்துவைக்கப்பட்டன. பொதுவாகத் தொழிலாளர் வருப்பு கணிசமான வரும்படி பெற்றுத் தன்திறைவு அடைந்தது. நாட்டில் சுகாதார வசதிகள் விரிவாக அமைக்கப்பட்டன. கல்வி வளர்ச்சிக்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யப்பட்டன. போக்குவரவு வசதிகள் சீராக அமைக்கப்பட்டன. முசோலினி, இத்தாலிய அரச குடும்பத்துக்கும், போப்புக்களுக்கும் 1871-ம் ஆண்டிலிருந்து தொடர்ந்து இருந்து வந்த பிணக்கைத் தீர்த்து வைத்தார். 1929-ம் ஆண்டில் செய்யப்பட்ட லேட்டரன் உடன்படிக்கையின்படி, (Lateran Treaty) சவாய் அரச குடும்பத்தாரை போப், இத்தாலிய அரசர்களெனவும், அரசர், போப்பை வட்டிக்கன் நகரப் பகுதிக்கு (Vatican City) இறைமையுடைய அரசர் எனவும், ஒப்புக்கொள்ள இவ்வுடன்படிக்கையில் ஏற்பாடு செய்யப்பட்டது.

வெளிநாட்டு உறவுகளைப் பொறுத்தவரையில், முசோலினியின் சர்வாதிகாரம் கண்டிக்கப்படக்கூடிய செயல்களைச் செய்தது. அதன் அயல்நாட்டுக் கொள்கை "ஆக்கிரமிப்பு" (Aggression) எனச் சுருக்கிக் கூறலாம். தான் பண்டைய ரோமானிய ஏகாதிபத்தியப் பேரரசை மத்திய தரைக் கடலைச் சுற்றி அமைக்கப்போவதாக அவர் கூறிக்கொண்டு, 1930-ம் ஆண்டுக்குப் பின்னர் பல ஆக்கிரமிப்புச் செயல்களில் ஈடுபடலானார். 1935-ல் அவர் அபிசீனியா என்ற வட ஆப்பிரிக்கச் சுதந்திர நாட்டைத் தாக்கிக், கொடுமையாகப் போர் புரிந்தார். சர்வதேசசங்கத்தின் தீர்மானத்தை அவர் ஒதுக்கிவிட்டு, 1936-ல் அபிசீனியாவை இணைத்துக் கொண்டார். அவர் ஜெர்மனியின் நாசிச சர்வாதிகாரியான ஹிட்லரோடு சேர்ந்துகொண்டு, ஸ்பெயினில் நடந்த உள்நாட்டுப் போரில் பிராங்கோ தளபதிக்கு உதவிசெய்து, அவரை

வெற்றிபெறச் செய்தார். 1937-ல் அவர் ஜெர்மனியும், ஜப்பானும் ஏற்படுத்திய ரஷ்யக் கம்யூனிச எதிர்ப்புக் கூட்டணியில் சேர்ந்தார். 1939-ல்அவர் கிழக்கு மத்திய தரைக் கடலில் இருந்த அல்பேனிய நாட்டைத் தாக்கி இணைத்தார். இரண்டாம் உலகப் போரில், 1940-ல் பிரான்சை ஹிட்லர் தாக்கிக்கைப்பற்றிக்கொண்டிருக்கும் போது, முசோலினி பிரான்சைத் தென்கிழக்கிலிருந்து தாக்கினர். இவ்வளவுக்கும், அவர் 1943–லிருந்து பதில் சொல்லவேண்டி இருந்தது. இரண்டாம்உலகப்போரின் இறுதியில், அவருடைய ஆப்பிரிக்கக் குடியேற்ற நாடுகளை நேசநாட்டினர் கைப்பற்றிக்கொண்டு, சிசிலியைக் கைப்பற்றி, 1944-ல் இத்தாலியிலும் படையெடுத்தனர். முசோலினி வட இத்தாலிக்குத் தப்பிச் சென்ருர்; அவருக்கு அவருடைய கூட்டாளியான ஹிட்லரின் உதவியும் கிடைக்கவில்லை. ஜெர்மனியின் வீழ்ச்சியோடு, முசோலினியின் வீழ்ச்சியும் உறுதியாயிற்று. 1945 ஏப்ரலில், அவரை அவருடைய நாட்டினர்சிலரே சிறைப் பிடித்துக் கொன்றுவிட்டனர். இத்தாலியின் குடியேற்ற நாடுகளெல்லாம் போருக்குப் பின்னர் சுதந்திர நாடுகளாயின.

பாசிசம் மக்களுக்கு நன்மைகள் பலவற்றைச் செய்தாலும், அதனுடைய வீழ்ச்சிக்கு அதனுடைய ஆக்கிரமிப்புப் போக்கே பெருங்காரணமாக அமைந்தது. 1946-ம் ஆண்டில் இத்தாலி குடியரசு நாடாக (republic) நிறுவப்பட்டது.

—(0)—

## (5) ஜெர்மனியில் தோன்றிய நாசிசம்

### (Nazism in Germany)

1 முன்னுரை 2 நாசிசம் தோன்றக் காரணங்கள்

3 நாசிசக் கோட்பாடும், ஹிட்லரின் ஆட்சி அமைப்பும் 4 நாசி அரசாங்கத்தின் சாதனைகள் 5 நாசிசத்தின் வீழ்ச்சி.

1 இரண்டு உலகப்போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தில் ஜெர்மனியில் தோன்றிய சர்வாதிகாரம், நாசிசம் (nazism) அல்லது நேஷனல் சோஷியலிசம் (national socialiam) என்ற பெயரையுடைய கட்சியினால் நிறுவப்பட்டது. இது 1933-ம் ஆண்டிலிருந்து 1945-ம் ஆண்டு வரை இருந்து, இத்தாலிய பாசிசத்தைப் போல இரண்டாம் உலகப் போரினிறுதியில் மறைந்தது. இந்தச் சர்வாதிகார அரசாங்கம் அடால்ப் ஹிட்லர் (Adolf Hitler) என்ற அக்கட்சித் தலைவரால் நிறுவப் பட்டது,

2. முதல் உலகப்போரின் இறுதியில் (1918), ஜெர்மன் கெய்சர் இரண்டாம் வில்லியம் நாட்டைவிட்டு வெளியேற, பல ஜெர்மன் சிற்றரசர்களும் பதவியைத் துறந்தனர்; நாடு சரணடைந்ததும், குடிமக்கள் கிளர்ந்தெழுந்து, அரசியலமைப்புக்குட்பட்ட குடியரசுகளை நிறுவினர்; புது அரசாங்கத்தில் பல கட்சிகள் சேர்ந்து கூட்டு அமைச்சரவையை அமைத்தன; இத்தகைய அமைச்சரவையே 1919, ஜூன் 28ல் வெர்செயில்ஸ் அமைதி உடன்படிக்கையில் (Peace Treaty of Versailles) கையெழுத்திடவும், பிஸ்மார்க் நிறுவிய பழைய ஜெர்மன் பேரரசு மறைந்தது. 1919, ஜூலையில் ஜெர்மனிக்கு, பிரிட்டிஷ் பாராளுமன்றக் குடியாட்சி அரசாங்க அமைப்பைப் போன்றதொரு குடியாட்சி அரசியலமைப்பு வைமார் என்ற இடத்தில் வரையப்பட்டு, ஏற்றுக்கொள்ளப்பட்டது; இதுவே பெயரளவிலேனும் 1945-ல் இரண்டாம் உலகப்போர் முடியும்வரை, ஜெர்மனியில் இருந்துவந்த வைமார் குடியரசின் அரசியலமைப்பை

(Constitution of the Weimar Republic) ஏற்படுத்திற்று.

குடியாட்சி அரசாங்கமுறை அரசியலமைப்புச் சட்டத்தின் மூலமாக நிறுவப்பட்டாலும், ஜெர்மனியை அதனுடைய சிக்கல்களிலிருந்தும் விடுவிக்கவோ, அதைச் சர்வாதிகார ஆட்சியினின்றும் காக்கவோ கூடிய வழிகள் அமைக்கப்படவில்லை. அங்கு 1933-ல் ஹிட்லரின் தலைமையில் நாசிச சர்வாதிகார அரசாங்கம் தோன்றிய தற்குரிய காரணங்களை நாம் சுருக்கிக் கூறுவோம்.

(1) முதல் உலகப்போரில் தோல்வியினால் ஏற்பட்ட சிறுமையை ஜெர்மனியர் பலவகையாக மிகவும் உணர்ந்தனர். அவர்கள் வெற்றி பெற்றோர்க்கு நட்டஈடு (Reparations) செலுத்தவேண்டும். அவர்கள் கடல் கடந்த கண்டங்களிலிருந்த தங்களுக்குச் சொந்தமான குடியேற்ற நாடுகளை இழந்தனர்; தரைப்படையின் அளவு குறைக்கப்பட்டது. கப்பற்படை பெரும்பாலும் அழிக்கப்பட்டது. வெற்றிபெற்றோர்க்குக் குடியேற்ற நாடுகள் கிடைத்தன. அயலிலுள்ள புதிய சிறுநாடுகள் தம் படைகளைப் பெருக்கும் உரிமையோடு இருக்க, ஜெர்மனிக்கு, இதுவும் மறுக்கப்பட்டது. இதனைக் கண்ட ஜெர்மனியருக்கு, வெர்செய்ல்ஸ் அமைதி உடன் படிக்கை தம்மீது பழிவாங்குவதற்கென்றே ஏற்பட்டது, என்று புலப்பட்டது. இவ்விழிவை அவர்கள் தாங்கிக் கொண்டாலும், தக்க சூழ்நிலையில் அதனைத் துடைத் தெறியும் துணிவோடு இருந்தனர். ஹிட்லர் அவர்களுடைய தலைவராக 1933-ல் வந்து, வெர்செயில்ஸ் உடன்படிக்கையே தனதுமுதற்பகைவனெனக் கூறவும், அவர்கள் அவருக்கு ஆதரவளித்தனர். இவ்வாறு அங்கு தோன்றிய நாசி சர்வாதிகார ஆட்சிக்கு 1919-ம் ஆண்டின் உடன்படிக்கையே ஓர் காரணமாயிற்று.

(2) ஜெர்மனியின் பொருளாதார நிலைமை போருக்குப்பின் சீர்கெட்டுப்போகவும், அதனைச்சீராக்குவதற்குப் பாராளுமன்ற அரசாங்கத்தால் இயலவில்லை; இதனாலும், நாசிச சர்வாதிகாரம் தோன்ற வாய்ப்பு இருந்தது. ஜெர்மன்தொழில்களை வளப்படுத்தப் போதிய மூலதனம் அந்நாட்டில் இல்லை. எனவே தொழில்வளர்ச்சி இல்லை: ஜெர்மனியால், பிரான்சுக்குச் செலுத்த வேண்டிய நஷ்டஈட்டைச் செலுத்த இயலவில்லை; எனவே பிரான்ஸ், ஜெர்மனியின் வளமான நிலப்பகுதியாகிய ரூரைக் (Ruhr) கைப்பற்றிற்று; நாட்டை வறிச்சுமை, வேலையில்லாமை முதலிய தீங்குகள் வாட்டின. இந்நிலையில் பிரான்சுக்கும்,ஜெர்மனிக்கும்இடையேஓரளவேனும் நல்லுறவு ஏற்படுத்தவும், அது செலுத்த வேண்டிய நஷ்ட ஈட்டுத் தொகையை நடைமுறைக்கு ஏற்பத் தன்னுபடி செய்யவும், இங்கிலாந்தும், ஐக்கிய அமெரிக்கா நாடும் முயற்சி செய்தன. 1924-ல் வெளியான டாவிஸ் திட்டம் (Dawes Plan) நட்ட ஈட்டுத் தொகையைத்தள்ளிவிடத்தீர்மானங்களை வெளியிட்டது. 1925-ல் லொக்கார்னோ ஒப்பந்தம் (Locarno Pact) செய்யப்பட்டு, ஜெர்மனியும், பிரான்சும் பழைய பகையைக் கைவிட்டு, ஒத்துழைக்க வழி உண்டாயிற்று. அமெரிக்கா சிறிது மூலதனத்தை ஜெர்மனியத் தொழில்களில் ஈடுபடுத்தவும், தொழில்வளம் ஓரளவு சீராயிற்று. ஸ்ட்ரெஸ்மன் என்ற சான்சலரின் அரசாங்கம் சிறிது நிலையாக இருந்தது. எனினும் 1923-ல் ஜெர்மனியில் பண வீக்க நிலை (Inflation) ஏற்பட்டுப், பொருள்களின் விலை உயர்ந்து, மக்களுடைய துன்பம் கூடுதலாயிற்று. இவை போதாவென்று, 1929-ல் நியூயார்க்கில் ஏற்பட்ட பணநெருக்கடியின் காரணமாக, அமெரிக்க மூலதனம் ஜெர்மனியிலிருந்து திரும்ப எடுத்துக்கொள்ளப்படவே, ஜெர்மனியில் பொருளாதார

நெருக்கடி உச்சநிலையை அடைந்தது. அரசாங்கத்தால் செலவைச் சரிக்கட்டுவதற்கு வரி திரட்ட முடியவில்லை. ஆறுமில்லியன் ஜெர்மனியருக்கு வேலை இல்லை. இந் நிலையில் பொதுவுடைமைப் புரட்சி தோன்றக்கூடு மென்ற அச்சமும் மக்களிடையே பரவிற்று. பாராளு மன்றக் குடியாட்சி செயலற்று இருந்தது. இவையெல் லாம், 'எல்லா அதிகாரங்களையும் உடைய ஒரு வலிய அரசாங்கம் ஜெர்மனிக்கு மிகவும் தேவை,' என்று எடுத்துக்காட்டின. இந்நிலையும் நாசிசம் தோன்ற ஓர் காரணமாகும்.

(3) பரம்பரை பரம்பரையாக ஜெர்மனி எதேச் சாதிகார ஆட்சிமுறையைப் பின்பற்றியே வந்துள்ள நாடாகையினுல், அங்குக் குடியாட்சிமுறை நிலைபெற இயலாமற் போயிற்று. பண்டைய பிரஷ்யாவிலும், 1871-ல் தோன்றிய புதிய ஜெர்மன் பேரரசிலும் நடை முறையில்இருந்துவந்ததுஎதேச்சாதிகாரமுடியாட்சியே. ஜெர்மன் மக்கள், ஆங்கிலரைப் போலக் குடியாட்சி முறையில் பழக்கமில்லாதவராக இருக்கவே, அங்கு 1919-ல் நிறுவப்பட்ட குடியாட்சி அரசாங்கம், நாசிச சர்வாதிகார ஆட்சிக்கு இடங்கொடுத்தது.

(4) ஹிட்லரின் தலைமையும், ஜெர்மனியில் நாசிச சர்வாதிகார ஆட்சி தோன்றுவதற்கு, ஒரு முக்கிய காரணம் ஆகும். இவர் ஆஸ்திரியப் பெற்றோருக்கு, அந்நாட்டிலுள்ள பிரானேவ் என்ற ஊரில் 1889-ல் பிறந்தார். இவர் பிழைப்புக்காக வீடுகளுக்கு வண்ணம் பூசும் தொழிலைச் செய்தார்; முதல் உலகப் போரில் ஒரு சிறு இராணுவ அலுவலராக இவர் பணியாற்றினர். பின்னர்த்தோன்றியஇடர்ப்பாடானசூழ்நிலைகளிலிருந்து ஜெர்மனியை மீட்பதற்காக, இவர் மியூனிச் நகரத்தில், படைவீரர், தொழிலாளர் ஆகியோருடைய வகுப்புக்

களிலிருந்து, எர்னஸ்ட் ரோஹ்ம் (Roehm) என்ற தளபதியினுதவியால், தேசீய சோஷலிசக் கட்சியை (National Socialist or Nazi party) அமைத்தார்; அவர், நாட்டினரிடையே உள்ள நிறைவற்ற மனப்பான்மையையும், சீர்கெட்ட பொருள் நிலையையும் கவனித்தார். 1923-ல் அவருடைய கட்சி மியூனிச்சில் ஓர் திடீர்ப் புரட்சியைத் தோற்றுவிக்க, அது அடக்கப்பட்டு, அதைத் தோற்றுவித்தவர் தண்டிக்கப்பட்டனர்; ஹிட்லர் 1924ல் 9 மாதங்கள் சிறையிலடைக்கப்பட்டார்; சிறையில் அவர் தனது திட்டங்களை வெளியிட்டு, "எனது போராட்டம்" (Mein Kampf) என்ற நூலை எழுதினர். அவர் திட்ட வட்டமான குறிக்கோள்களை வகுத்து, பொதுமக்களைத் தனது அரிய நாவன்மையால், தனக்கு ஆதரவு கொடுக்கும்படி செய்தார். ஜெர்மனியின் பகைவரை ஒழிப்பதும், பொருளாதாரச் சீர்கேட்டைமாற்றியமைத்து யாவருக்கும் வேலை வாய்ப்பு அளிப்பதும், ஜெர்மனியருடைய தன்மானத்தைக் காக்கும் ஒரு புதிய நாட்டை அமைப்பதும், தனது குறிக்கோள்கள் என்று வாக்குறுதிகள் கொடுத்துக், கவர்ச்சியான பிரசாரங்களை அவர் செய்தார். தாழ்வுற்று, வறுமையில் வாடிக் கிடந்த ஜெர்மனியருக்கு, அவருடைய சொற்களின் மூலம் தன்னம்பிக்கையும், ஊக்கமும் தோன்றின. இவ்வாறு செய்ததனுல்தான், ஹிட்லருடைய கட்சிக்குப் பொதுத் தேர்தல்களில் மக்களுடைய கணிசமான ஆதரவு கிடைத்தது.

3. ஹிட்லருடைய நாசிசக்கட்சியின்கோட்பாட்டை அவருடைய 'எனது போராட்டம்' என்ற நூல் வெளிக் காட்டுகிறது: அதன் சாரமாவது: பரம்பரையான முடியாட்சியோ, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட மன்றங்களோ, தொழிற் சங்கங்களோ தலைவரைத்

தோற்றுவிக்க முடியாது. எனவே இவை யாவும் தலைவருக்குக்கீழ்ப்பட்டே இருக்கவேண்டும். சமுதாயத்தினுள்ள மிகச் சிறந்த அறிவாளிகளே, (elite) முக்கிய அரசாங்க அலுவல்களில் இருக்க வேண்டும். வலியவரே ஆளுதல் வேண்டும்; அவர் மெலியவரோடு கலந்து தம் பெருமையை இழக்கக் கூடாது. இராணுவத் துறையில் வல்லுநராகஇருப்பவரிடமே (elite of force), அரசாங்கம் இருக்கவேண்டும். நிர்வாகத் திறமை இராணுவ ஆற்றலோடுதான் பொருந்தியிருக்கும். "ஒத்த அறிவுத்திறனுடைய 200 மனிதர் அடங்கிய ஓர் கூட்டத்தை ஒழுங்குக்குக் கட்டுப்படச் செய்வதென்பது, மிகத் தாழ்ந்த அறிவுத்திறன் படைத்த 190 பேரும், மிக உயர்ந்த அறிவுடைய 10 பேரும் அடங்கிய ஓர் கூட்டத்தை ஒழுங்குக்குக் கட்டுப்படச் செய்வதைவிடக் கடினமான ஒரு செயல் ஆகும்." யூதர்கள், தூய ஆரியராகிய ஜெர்மனிய இரத்தத்தைக் கெடுத்து வாழும் புல்லுருவிகள்; 1919-ல் ஜெர்மனிக்கு ஏற்பட்ட சிறுமைக்கெல்லாம் யூதரே பொறுப்பு. உலக நாகரிகத்தைத் தோற்றுவித்த ஆரியராகிய ஜெர்மனியரே மிக உயர்ந்தவர்; இவ்வினத்தவர் உலகத்தில் வாழவும், பெருகவும் மற்றைத் தாழ்ந்த இனத்தவர் இடங்கொடுக்க வேண்டும்.

இத்தகைய உலக அமைதிக்குப் பேரிடராகவுள்ள தீய எண்ணங்களோடு, நாசிச அரசாங்கம் 1933-ல் ஜெர்மனியில் தோன்றிற்று. 1925-ல் குடியரசின் தலைவராக, முதல் உலகப் போரில் ரஷ்யரைத் தோற்கடித்த புகழ்மிக்க ஜெர்மன் படைத்தளபதி ஹிண்டன்பர்க் (Hindenburg), தேர்ந்தெடுக்கப்பட்டார்; சோஷியலிஸ்ட் கட்சியும், வேறுபல கட்சிகளும் ஒற்றுமையின்றி இருந்தன. பொருளாதாரச் சீர்கேடும், அயலவர் எப்போதும் நாட்டில் தலையிடலாமென்ற அச்சமும்

இருந்தன. 1932-ல் நாசிக் கட்சிக்குக் கீழ்ச் சட்ட மன்றத்தில் 107 இடங்கள் கிடைத்தன. 1933-ல் 288 இடங்கள் கிடைத்தன. தனிப்பட்ட எந்தக் கட்சிக்கும் இருந்ததைவிட நாசிக் கட்சிக்குக் கூடுதலான இடங்கள் இருந்தன. ஹிண்டன்பர்க் 1932-ல் வான் பேப்பன் (Von Papen) என்பவரை முதலமைச்சராக அல்லது சான்சலராக அமர்த்தினர்; பின்னர் 1933-ல் அவர் ஷ்லெய்ச்சர் (Schleicher) என்ற தளபதியை முதல் அமைச்சராக அமர்த்தினர்; வான் பேப்பன் ஹிட்லரோடு சேர்ந்துகொண்டு, ஷ்லெய்ச்சரை அலுவலிலிருந்து நீங்கச் செய்து, ஹிட்லரை சான்சலராக்கும்படி ஹிண்டன்பர்க்கிடம் கூறினர். ஹிண்டன்பர்க் 1933, ஜனவரி 30-ல் ஹிட்லரை சான்சலராக ஆக்கினர்.

நாசிச அரசாங்கம், வைமார் குடியாட்சியிலுள்ள இரு சட்டமன்ற அமைப்பு, தேர்ந்தெடுக்கப்பட்ட குடியரசுத் தலைவர், பொறுப்புள்ள முதலமைச்சர், அமைச்சரவை ஆகியவற்றைத் தொடர்ந்து இருக்கும்படி செய்தது. எனினும் அவ்வரசியலமைப்புக்குப் பல திருத்தங்களைச் செய்து, ஹிட்லர், தனது ஆட்சியைச் சர்வாதிகாரமாக ஆக்கினர். 1934-ல் அவர் ஜெர்மனியப் படைத் தளபதிகளான ரோஹம், ஷ்லெய்ச்சர் ஆகியோரைக் கொன்றுவிட்டு, படை முழுவதையும் கட்சித் தொடர்பு இல்லாமல் ஆக்கி, அதைத் தனது கட்டுப்பாட்டில் வைத்துக்கொண்டார். அச்சுறுத்தல், வன்செயல், பிரச்சாரம் ஆகிய முறைகளின் மூலம், அவர் சோஷியலிசக் குடியாட்சிக் கட்சியையும், கம்யூனிசக் கட்சியையும் ஒழித்தார். 1934, ஆகஸ்டில், ஹிண்டன்பர்க் இறந்ததும், இவ் வாய்ப்பை ஹிட்லர் பயன்படுத்திக் கொண்டு, குடியரசுத் தலைவருடைய அலுவல்களையும், அதிகாரங்களையும், சான்சலருடையவைகளோடு இணைத்தார். நாசி அரசாங்கத்தில் எதிர்க்கட்சி என்பதே

இல்லை; யாவரும் தலைவருக்குக் (Fuhrer) கீழ்ப்பட்டே நடக்கவேண்டிய கட்டாயத்தில் இருந்தனர். இரகசிய போலீஸ், வேலை முகாம் (Labour Camp) முதலிய முறைகளைக் கையாண்டு, ஹிட்லர் நாட்டின்மீது, தனது முழு அதிகாரத்தையும் நிலைநாட்டினார்.

4. உள்நாட்டுத் துறைகளில், நாசி அரசாங்கம், சில நல்ல செயல்களையும், சில தீய செயல்களையும் செய்தது. நிதி, பொருளியல் முதலிய துறைகளில் அது சீரமைப்பு வேலையை வெகுவிரைவாக நிறைவேற்றிற்று. அது பிரான்சுக்கு நட்டஈடு கொடுக்க மறுத்து, வெர்செயில்ஸ் உடன்படிக்கையைத் தகர்த்தெறிந்தது. வேலையற்ற ஜெர்மனியரெல்லாம் படையில் போர்வீரராகப் பணியாற்றும் வாய்ப்பைப் பெற்றனர். கட்டாய இராணுவப் பணிமுறையின் மூலமாக வேலை இல்லா நிலைமை தீர்த்துவைக்கப்பட்டது. நாட்டின் பொருளாதாரத் தேவைகளைப் பொதுத்தவரையில் தன்நிறைவு ஏற்படும் வகையில் (Autarchy), தொழில்களில் புதிய முறைகள் கையாளப்பட்டன. வெளிநாடுகளிலிருந்து பொருள்கள் வாங்கப்படவில்லை; தாவரப் பொருள்களிலிருந்து கிடைக்கும் சர்க்கரை, ரப்பர் முதலியவற்றுக்கெல்லாம், செயற்கைப் பொருள்கள் (Synthetic Products) அறிவியல் வல்லுநரால் கண்டுபிடிக்கப்பட்டன. தொழில்கள் தேசீயக் கட்டுப்பாட்டில் வைக்கப்படாமல், தனியார் முயற்சிக்கே விட்டுவிடப்பட்டன. பல தொழில்களும் போர்க்கருவிகளைச் செய்வதற்கே நடத்தப்பட்டன. பெண்கள் தொழிற்சாலைகளில் வேலைசெய்ய வேண்டாமெனவும், அவர்கள் குடும்ப வாழ்வில் ஈடுபடுதல் வேண்டுமெனவும், அரசாங்கம் திட்டம்செய்தது. தொழிலாளர் யாவருக்கும் வேலை வாய்ப்பு இருந்தது.

ஆனால் நாசி அரசாங்கம் யூதர்களுடைய உடைமை

களைப் பறித்தும், உரிமைகளை ஒழித்தும், சிலரைக் கொன்றும், மற்ற யூதரை நாட்டைவிட்டு ஓட்டியும், அவர்களைக் கொடுமைப் படுத்திற்று; இச் செயல்களைக் கண்டு உலகமே திடுக்கிட்டது. 'ஜெர்மனிய மக்களே தூய ஆரியராகிய நார்டிக் (Nordic) இனமக்கள்' என்ற, ஹிட்லருடைய இனக்கோட்பாட்டை ((Racial Theory), கத்தோலிக்க, பிராட்டஸ்ட்டண்ட் கிறிஸ்தவத் திருச் சபைகள் ஒப்புக்கொள்ளாமல், எதிர்த்தன. ஹிட்லர் அவற்றை அடக்க முயன்றார்.

5. இத்தகைய சர்வாதிகார அரசாங்கத்தின் அயல் நாட்டுக் கொள்கை, இறுதியில் ஜெர்மனிக்கே பேரிடரைத் தந்த ஆக்கிரமிப்புக் கொள்கையாக இருந்ததில் வியப்பொன்றுமில்லை. ஹிட்லர் தான் வகுத்த திட்டப் படியே பல ஆக்கிரமிப்புச் செயல்களை ஒன்றன்பின் ஒன்றாக நிறைவேற்றிக், கடைசியில் தனது நாட்டை இரண்டாம் உலகப் போரில் இழுத்துவிட்டார். 1926-ல் சர்வதேச சங்கத்தில் சேர்ந்த ஜெர்மனி, 1933-ல் அதிலிருந்து விலகிற்று. ஸ்பெயினில் நடந்த உள் நாட்டுப் போரில் ஹிட்லர் தலையிட்டு, தளபதி பிராங்க் கோவுக்கு ஆதரவளித்தார். 1938, மார்ச் மாதத்தில், அவர் ஆஸ்திரியர் ஜெர்மன் இனத்தவரே எனக்கூறி, அந்நாட்டை ஜெர்மனியோடு இணைத்தார். அவ்வாண்டு செப்டம்பரில், அவர் செக்கோஸ்லோவேக்கியாவில் ஜெர்மனியர் வாழும் நிலப்பகுதியாகிய சுடேட்டன்லாண்டை ((Sudetanland) ஜெர்மனியோடு இணைத்தார். அப்பொழுது அவரைத்தடுக்கக்கூடிய ஆயத்தமில்லாமல் இருந்த மேற்கு ஐரோப்பிய நாடுகள், எதிர்காலத்தில் போரை எதிர்பார்த்து, அதற்கு ஆயத்தம் செய்தன. 1939-ல் ஹிட்லர் மேற்கு ஜெர்மனிக்கும், கிழக்கு ஜெர்மனிக்கும் நடுவே உள்ள போலந்தின் இடைவழி

யைக் (Polish Corridor) கோரினர். போலந்து கொடுக்க மறுக்கவே, ஹிட்லர் அதைத் தாக்கினர். போலாந்துக்கு பிரான்சும், பிரிட்டனும் உதவிசெய்ய முன்வந்தன. முதலில் பல வெற்றிகளை ஹிட்லர் அடைந்தாலும், கடைசியில் தோற்று, 1945, மே மாதத் தொடக்கத்தில் இறந்தார். ஜெர்மனி வெற்றிபெற்ற ஐக்கியநாடுகளிடம் சரணடைந்தது.

— —

## (6) இரண்டாம் உலகப் போர் (1939 - 45)
### (Second World War)

1. முன்னுரை 2. காரணங்கள் 3. நிகழ்ச்சிகள்—பிரிட்டனின் பங்கு 4. விளைவுகள்.

1. இந் நூற்றுண்டின் இரண்டாவது உலகப்போர் 1939-ம் ஆண்டு செப்டம்பர் மாதத்திலிருந்து, 1945-ம் ஆண்டு ஆகஸ்டு முடிய நடைபெற்றது: இதில் அச்சு நாடுகளெனப்பட்ட (Axis Powers) ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் ஆகிய மூன்றும், பிரிட்டன், பிரான்ஸ், சோவியத் ரஷ்யா, ஐக்கிய அமெரிக்கா, சீனு முதலிய நேசநாடுகளுக்கு அல்லது, ஐக்கிய நாடுகளுக்கு (United Nations) எதிராகப் போர் செய்தன. இதனுல் பல்வேறு துறைகளிலும் மாறுதல்கள் தோன்றியுள்ளன.

2 (1) இரண்டாம் உலகப்போரை உண்டாக்கிய காரணங்களை ஆராயும் ஹேய்ஸ், மூன், வேலண்ட் என்ற மூன்று வரலாற்றாசிரியர்களும், உலகத்தில் பொதுவாக 1929-ம் ஆண்டிற்குப் பின்னர், குடியாட்சி அரசாங்க முறைக்குப் பொருளாதாரச் சிக்கல்களினுல் ஏற்பட்ட இடையூறுகளையும், பலக்குறைவையும் சுட்டிக் காட்டுகின்றனர். மனிதருக்குச் சுதந்திரம், சமத்துவம்

என்ற இரு கோட்பாடுகளினடிப்படையில் அமைக்கப் பட்ட குடியாட்சி அரசாங்க முறையில், பேரழிவைத் தரும் போர்முதலிய செயல்களுக்கு மக்களுடைய ஆதரவு இருப்பதில்லை. பொருளாதாரச் சிக்கல்களினால் ஜெர்மனி, இத்தாலி முதலிய நாடுகளில் தோன்றிய சர்வாதிகார ஆட்சிகள், உள்நாட்டில் குடியாட்சி முறையை விடுத்துத், தீவிரமான போக்கைக் கையாண்டு பொருளாதாரச் சிக்கல்களைத் தீர்த்து வைத்தன; அதே போல அவை அயலுறவுகளிலும் தீவிரமான போக்கைக் கையாளவும், போர் தோன்றிற்று.

(2) முதல் உலகப் போருக்குப் பின் தோன்றிய சர்வதேச சங்கம், போரைத் தடுக்கவல்ல நடவடிக்கைகளை எடுப்பதற்குப் போதிய ஆதரவை, அதனுடைய குடியாட்சி உறுப்பு நாடுகளிடமிருந்து பெறவில்லை. பிரிட்டனில் மாறி மாறி ஆட்சிக்கு வந்த கன்சர்வேடிவ், தொழிற்கட்சிகளின் அரசாங்கங்கள், சர்வாதிகார அரசாங்கங்களின் ஆக்கிரமிப்புப் போக்குக்கு மதிப்புக் கொடுத்து, அவற்றைத் திருப்திப்படுத்தவே (appease) முயன்றன. நாசிச ஆட்சி ஜெர்மனியில் 1933-ல் தோன்றியதுமே, அது எதிர்காலத்தில், அமைதிக்கும், பாதுகாப்புக்கும் பேரழிவைத்தரும் செயல்களில் ஈடுபடக் கூடுமென்று, எதிர்கால நோக்குள்ள ஆங்கில அரசியலறிஞர் வின்ஸ்டன் சர்ச்சில், பிரிட்டிஷ் அரசாங்கத்துக்கு எடுத்துச் சொன்னார். ஆனால் பிரிட்டிஷ் அரசாங்கம் தனது பொறுப்பை நிறைவேற்ற ஆயத்தமும், கருத்தும் உடையதாக இல்லை. சர்வதேச சங்கத்தில் ஐக்கிய அமெரிக்க நாடு உறுப்பினராகவே இல்லை; மேலும் அது, தனது உள்நாட்டுப் பொருளாதாரச் சிக்கல்களிலேயே தனது கவனம் முழுவதையும் செலுத்திற்று. பிரான்சிலோ, பாராளுமன்றத்தில் பல கட்சிகளும்,

கட்சிச் சண்டைகளும் மிகுந்து, படைகளைச் சீர்திருத்தித் தடுப்பு நடவடிக்கைகளை எடுக்கத்தக்க வலிமையுள்ள அரசாங்கம் அமைய வழி ஒன்றும் இல்லை; அரசாங்கம் பலவீனமாக இருந்தது; எனவே சர்வாதிகாரிகளாகிய ஹிட்லரும், முசோலினியும், ஜப்பானிலுள்ள இராணுவ சர்வாதிகார அரசாங்கமும், தாம் எந்தகைய ஆக்கிரமிப்புச் செயலைச் செய்தாலும், தம்மைக் குடியாட்சி நாடுகள் தடுக்க மாட்டா, எனத் துணிந்துவிட்டனர். இந் நிலையில் சர்வ தேச சங்கத்தினால் தனது கடமையாகிய போரை நிறுத்தும் பணியை வெற்றியாக நிறைவேற்ற முடியவில்லை.

(3) சர்வாதிகாரிகளின் ஆக்கிரமிப்புச் செயல்கள், போர் என்ற முடிவுக்குத்தான் உலகத்தை அழைத்துச் சென்றன. 'அதிகாரம் மனிதனைக் கெடுக்கிறது; வரம்பற்ற முழு அதிகாரமோ, மனிதனை முழுவதும் கெடுத்து விடுகிறது' (Power corrupts, absolute power corrupts absolutcly) என அரசியலறிஞர் ஆக்டன் பிரபு (Lord Acton) கூறுவர். வரம்பற்றதும், சட்ட அமைப்புக்குக் கட்டுப்படாததும், மக்களுக்குப் பொறுப்பாக இல்லாத வகையில் கையாளப்படுவதுமான ஆட்சி அதிகாரத்தின் விளைவுகள், ஆக்கிரமிப்பும், போருமே ஆகும். இதைக் கடந்தகால வரலாறு நமக்குத் தெளிவாகக் காட்டுகிறது; ஹிட்லர் சர்வாதிகாரியானதும், 1933-ல் ஜெர்மனியை சர்வதேச சங்கத்திலின்றும் விலக்கி, வெர்செயில்ஸ் உடன்படிக்கைக்கு மாறாகக் கட்டாய இராணுவப் பணியை ஜெர்மனியில் கொண்டு வந்து, ரைன்லாந்தில் படைகளை நிறுத்தி, 1939-ல் ஆஸ்திரியாவை இணைத்தார்; 1936 – 33-ல் நடைபெற்ற ஸ்பானிய உள்நாட்டுப் போரில் தேசியக் கட்சியின் தலைவரான பிராங்கோ தளபதிக்கு உதவிசெய்து,

அவருடைய தலைமையில் இராணுவ சர்வாதிகாரம் ஸ்பெயினில் தோன்றச் செய்தார். 1938 செப்டம்பரில் செக்கோஸ்லோவேக்கியாவில் ஜெர்மனியர் வாழும் சுடேட்டன்லாண்டை இணைத்துப், பின் அந்நாடு முழுவதிலும் தனதாட்சியை நிறுவினார், ரஷ்யாவுக்கெதிராக ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் ஆகிய மூன்று நாடுகளும் 1936-ல் கூட்டு ஒப்பந்தம் (அச்சு ஒப்பந்தம்) செய்து கொண்டன. இத்தாலிய பாசிச சர்வாதிகாரியான முசோலினி, 1936-ல் சர்வதேச சங்கத்தை மதிக்காமல், அபிசீனியாவைத் தாக்கிக் கைப்பற்றிப், பின் சங்கத்திலிருந்து தன் நாட்டை விலக்கினார். ஜப்பானும் 1931-ல் சீனமாகாணமாகிய மஞ்சூரியாவைக் கைப்பற்றிப் பின் சங்கத்திலிருந்து விலகிற்று; பின் சீனாவைப் பல முறை தாக்கிப் பல இடங்களைக் கைப்பற்றிற்று. இவை தடுக்கப் படுதற்காகப் பிரிட்டனும், பிரான்சும் போருக்கு ஆயத்தம் செய்தன.

1939 ஏப்ரலில், போர் நெருங்கி வருவதை நன்றாக உணர்ந்த பிரிட்டனும், பிரான்சும் அச்சு நாடுகளின் ஆக்கிரமிப்பைத் தடுக்கப் போருக்கு ஆயத்தம் செய்தன; போலந்தை ஹிட்லர் தாக்கக் கூடுமென்று உறுதியாகத் தெரிந்தவுடன், அந்நாட்டுக்கு உதவ பிரிட்டனும், பிரான்சும் ஒப்பந்தம் செய்தன. ஹிட்லர், ஸ்டாலினுடு 1939 ஆகஸ்டில் தான் ரஷ்யா மீது ஆக்கிரமிப்புச் செய்வதில்லை, எனத் தற்காப்பு ஒப்பந்தம் செய்து கொண்டார்.

3. இப்போர் கடந்தகாலப் போர்களினின்றும் வேறான முறையில் நடைபெற்றது; கடந்தகாலப் போர்களில் சில குறிப்பிட்ட இடங்களில் சண்டைகள் நடந்தன. ஆனால் இதில், விமானப்படைகளும், ஆளில்லாமல் வானில் இயங்கி அழிவைப் பெய்யும் ராக்கெட்டு

களும் பெருமளவில் கையாளப்பட்டன; எனவே நாடு முழுவதும் போர்ச்செயலில் ஈடுபட்டிருந்தது.

(1) போலந்துப் போர்: ஹிட்லர் போலந்தின் இடைவழியைக் (corridor) கேட்க, போலந்து மறுக்க, 1939 செப்டம்பரில் அவருடைய தரை, விமானப்படைகள் போலந்தை மேற்கிலிருந்து தாக்கின; உடன்படிக்கை யின்படி பிரிட்டனும், பிரான்சும் போலந்தோடு சேர்ந்து ஜெர்மனியின்மீது போர் தொடுத்தன. கிழக்கிலிருந்து சோவியத் ரஷ்யா போலந்தைத் தாக்கிற்று. போலந்து வீழ்ந்தது; அதன் பெரும் பகுதியை ரஷ்யா கைப்பற்றி, பால்டிக்கரை நாடுகளிலும் (லிதுவேனியா, எஸ்டோனியா, லாட்வியா,) ருமேனியாவிலும் தனது ஆதிக்கத்தை ஏற்படுத்திற்று. போலந்து அரசாங்கம் இங்கிலாந்துக்குச் சென்றது.

1940 ஏப்பிரலில் ஹிட்லர் டென்மார்க், நார்வே ஆகியவற்றைக் கைப்பற்றி, மே மாதத்தில் ஹாலண்ட், பெல்ஜியம், லக்சம்பர்க் ஆகியவற்றைக் கைப்பற்றிய பின், பிரான்சைத் தாக்கினர்; பிரான்சுக்கு உதவ வந்திருந்த பிரிட்டிஷ் படைகளை ஜெர்மனியர் வளைத்துக் கொள்ளக் கூடுமென்ற நிலைமை தோன்ற, இதனை வெகு திறமையாகத் தவிர்த்துப், பிரிட்டிஷ் படைகள், டங்கர்க்கிலிருந்து தப்பி இங்கிலாந்துக்குச் சென்றன. ஜெர்மனியர் பிரெஞ்சுப் படைகளைப் பின்னுக்குத் தள்ளி, ஜூன் 14ல், பாரிசைக் கைப்பற்றினர். மார்ஷல் பெடெயின் என்ற பிரஞ்சுத் தளபதி போர்நிறுத்த உடன்பாட்டில் கையெழுத்திட்டார். பிரான்சின் வடக்கு, மேற்குப் பகுதிகள் ஜெர்மனியின் கட்டுப்பாட்டிலிருக்க, பெடெயின் பெயரளவில் நாடு முழுமைக்கும் அதிகாரி யாக இருந்தார். அவர் விச்சியில் (Vichy) தனது அரசாங்கத்தை அமைத்திருந்தார். இத்தாலியும் ஹிட்ல

ரோடு சேர்ந்து, பிரான்சைத் தாக்கி, நைசியைக் கைப்பற்றிற்று. கிழக்கு ஐரோப்பாவில் ஹங்கேரி, பல்கேரியா முதலியவை அச்சு நாடுகளுடன் சேர்ந்தன; ருமேனியாவை ரஷ்யாவும், ஜெர்மனியும் கைப்பற்றிப் பங்கிட்டுக் கொண்டன. இத்தாலி அல்பேனியாவைக் கைப்பற்றிய பின், கிரீசைத் தாக்கிற்று; வட ஆப்பிரிக்காவில் அது பிரிட்டிஷ் சோமாலிலாண்ட், எகிப்து ஆகியவற்றின் மீதும் படையெடுத்தது. கிரேக்கர் இத்தாலியரை விரட்ட, ஜெர்மனி முசோலினியின் துணைக்கு வந்து, கிரீசைக் கைப்பற்றி, யூகோஸ்லேவியாவையும் கைப்பற்றிற்று. யூகோஸ்லேவியாவை ஹிட்லர் கைப்பற்றியதனால், அவருக்கும் ஸ்டாலினுக்குமிடையே பிளவு தோன்றிற்று.

(2) பிரிட்டன் போர் (Battle of Britain):- போரில் பிரிட்டனுக்கு ஐரோப்பாவில் இருந்த ஒரே துணை நாடாகிய பிரான்சும் ஜெர்மனியிடம் தோற்று, சரணாகதி அடையவே, பிரிட்டன் 1940, ஜூன் முதல், 1941 ஜூன் வரை, [illegible], ஐரோப்பிய சர்வாதிகாரி[illegible] நின்று தீரத்துடன் போரிட்டது: [illegible] விமானப் படையைப் (Luftwaffe) [illegible] அனுப்பி, பிரிட்டன் மீது [illegible]; பிரெஞ்சுக் கடற்கரையிலிருந்து ஜெர்மனி பீரங்கித் தாக்குதலை நடத்தியும், கடலில் நீர்மூழ்கிக் [illegible] கப்பல்களைக் கவிழ்த்தும், ஆங்கிலேயரின் மன உறுதியை அழிக்க முயன்றது. ஆனால் 1940, மே மாதத்தில், ஆங்கில அமைச்சரவையை அமைத்த வின்ஸ்டன் சர்ச்சில், தனது நாவன்மையால், பிரிட்டிஷ் மக்களுக்குத் தன்னம்பிக்கையையும், ஊக்கத்தையும் ஊட்டினார். தோற்ற ஐரோப்பிய நாடுகளாகிய போலந்து, செக்கோஸ்லோவேக்கியா, நார்வே, ஹாலண்ட், பெல்ஜியம் ஆகிய

வற்றின் அரசாங்கங்கள் இங்கிலாந்தில் வந்து உதவி செய்தன. கப்பல்களேயும், விமானங்களேயும், போர்க் கருவிகளேயும் அவை உற்பத்திசெய்துஅளித்தன. ஐக்கிய அமெரிக்கநாட்டின்தலைவர் ரூஸ்வெல்ட் (F.D.Roosevelt) பிரிட்டனுக்குஉணவுப்பொருள்களும், போர்க்கருவிகளும் வழங்க ஏற்பாடு செய்தார். முதலில் பிரிட்டன்மீது ஜெர்மனி நடத்திய விமானத் தாக்குதல் அழிவை ஏற்படுத்தினலும், பின்னர் பிரிட்டிஷ் விமானப்படைகள் (Royal Air Force) திருப்பித்தாக்கி, ஜெர்மன் விமானப் படையைத் தடுத்து நிறுத்தின. ஓராண்டுக்கு பிரிட்டன் அச்சுநாடுகளோடு தற்காப்புப் போர் நடத்திற்று. அதனுல் கிரீசுக்கு உதவிசெய்ய இயலவில்லை. எனினும் இந்நாளில் பிரிட்டிஷ் படைகள் வட ஆப்பிரிக்காவில், இத்தாலிய சோமாலிலாண்ட், எரிட்ரியா, லிபியா ஆகிய வற்றை இத்தாலியரிடமிருந்து கைப்பற்றி, எகிப்தி லிருந்து இத்தாலியரை விரட்டின.

(3) ரஷ்யாவுடன் ஹிட்லர் போர் தொடங்குதல்:- (ஜூன், 1941): ஹிட்லர் 1940-ல் யூகோஸ்லேவியாவைக் கைப்பற்றியதிலிருந்து, ரஷ்ய சர்வாதிகாரி ஸ்டாலின், அவரை ஐயப்பாட்டுடனேயே நோக்கலானர். பொதுவாக பால்க்கன் நாடுகளேப் பற்றி இருநாடு களுக்கும் வேறுபட்ட கருத்து இருந்தது. இரண்டும் போலந்து எல்லையில் படைகளேக் குவித்தன. ருமேனியா, ஹங்கேரி, பின்லாந்து முதலியவை ஜெர்மனியோடு சேர்ந்தன. ஹிட்லருடைய தரைப் படையும் (wehrmat), விமானப்படையும் கடுமையாகத் தாக்கி, ரஷ்யப்படைகளேப் பின்னுக்குத் தள்ளின. ஐக்கிய அமெரிக்க நாடும், பிரிட்டனும், சோவியத் ரஷ்யாவுக்கு உதவிசெய்தன. எனினும் ஜெர்மனியப் படைகள் மாஸ்கோவுக்கு அருகில் வந்துவிட்டன. 1942 இளவேனிற்காலத்தில், நாசிகள் மிகப்பெரிய

படையுடன் தாக்குதல் நடத்தினர். ஆனால் இதுவரை தற்காப்புப்போர் நடத்திய ரஷ்யா, எதிர்த்தாக்குதலுக்குக் கவனமாக ஆயத்தம் செய்து, நடு ரஷ்யாவில் ஜெர்மனியப் படைகளைச் சுற்றி வளைத்துக்கொண்டது. இதிலிருந்து ஜெர்மனியப் படைகளுடைய திட்டம் நிறைவேறும் வாய்ப்பு மறைந்தது. ரஷ்யக்குளிரும் வந்து, அந்நாட்டைக் காப்பாற்றிற்று. ஸ்டாலின்கிராட் நகரத்தைக் கைப்பற்ற ஜெர்மனியருக்கும், ரஷ்யருக்கும் கடும்போர் நடந்தது.

(4) ஜப்பான் போர் தொடுத்தல்; (டிசம்பர் 7, 1941):- அச்சு நாடுகளில் ஒன்றான ஜப்பான், சீனாவிலும், தென்கிழக்கு ஆசியாவிலும் தனது அரசியல் ஆதிக்கத்தை நிலைநிறுத்தும் நோக்கத்தோடு, வெளிப் பார்வைக்கு ஐக்கிய அமெரிக்க நாட்டோடு அமைதி உடன்படிக்கைப் பேச்சைப் பேசிக்கொண்டே, டிசம்பர் 1941-ல் அமெரிக்கக் குடியேற்ற நாடுகளாகிய ஹவாய், குவாம், வேக், பிலிப்பைன்ஸ் முதலியவற்றைத் தாக்கிக் கைப்பற்றிற்று. ஐக்கிய அமெரிக்காவும், பிரிட்டனும், [illegible] சேர்ந்து அச்சு நாடுகளோடு போர் செய்தன. ஜப்பான் வெகு விரைவாகத் தற்காப்பின்றி இருந்த ஐரோப்பியக் குடியேற்ற நாடுகளாகிய இந்தோசீனா, நெதர்லண்ட்ஸ் கிழக்கிந்தியத் தீவுகள், பர்மா, மலேயா, சிங்கப்பூர் ஆகியவற்றைக் கைப்பற்றி (1942), இந்தியாவை அச்சுறுத்திற்று. வடஆப்பிரிக்காவிலும், ஜெர்மனியத் தளபதி ரோமல் இத்தாலியருக்கு உதவி செய்யவே, நேசநாட்டினருக்குச் சிறிது தடை ஏற்பட்டது. பொதுவாக 1942-ல் நேச நாட்டினருக்கு முன்னேற்றம் ஏற்படவில்லை.

(5) 1942-ன் கடைசியிலிருந்தே நேச நாட்டினருக்குச் சாதகமாகப் போரில் திருப்பம் ஏற்பட்டது. மேற்கே பிரிட்டன், ஜெர்மனிமீது எதிர்த் தாக்குதலைத்

தனது விமானப்படையின் மூலம் நடத்திற்று. அமெரிக்க, பிரிட்டிஷ் படைகள் வடஆப்பிரிக்காவில் இத்தாலியரையும், ஜெர்மன் தளபதி ரோமலையும் தோற்கடித்தன. வட ஆப்பிரிக்காவில் அச்சு நாடுகளின் பலம் அழிந்தது. (மே, 1943). பிரிட்டிஷ், அமெரிக்கப் படைகள் மால்ட்டா தீவு வழியாக சிசிலியில் இறங்கி, அதனைக் கைப்பற்றியபின், இத்தாலியில் படையெடுத்தனர். 1943, செப்டம்பரில் முசோலினி அரசாங்கத்திலிருந்து நீக்கப்பட, புது அரசாங்கம் போர்நிறுத்த ஒப்பந்தம் செய்து, ஜெர்மனியோடு போர் தொடுத்தது. மேற்கு ஐரோப்பாவில் நேசப்படைகளுக்கு ஐசன்ஹோவரும், இத்தாலியில் நேசப்படைகளுக்கு சர். ஹோரேஸ் அலக்சாண்டரும் தளபதிகளாயினர். 1944-ல் பிரிட்டிஷ். அமெரிக்க, கனடியப்படைகள் பிரான்சில் நார்மண்டியில் இறங்கி, பாரிசை விடுவித்தனர். கிழக்கிலும் பல்கேரியாவும், ருமேனியாவும். ஜெர்மனியைக் கைவிட்டன. 1945-ல் (மார்ச்) நேசநாட்டினர், ரைன்லாந்தைக் கைப்பற்றினர். 1343-ல் ஸ்டாலின்கிராடைக் காப்பாற்றிய ரஷ்யர்கள், தம் நாட்டிலிருந்து ஜெர்மனியப்படைகள் முழுவதையும் நீக்கிவிட்டு, போலந்தைக் கைப்பற்றிக் கிழக்கு ஜெர்மனியிலும் நுழைந்தனர். பெர்லினை நேசநாட்டுப் படைகள் கைப்பற்றின. 1945, ஏப்பிரல் கடைசியில் முசோலினியை இத்தாலியர் சிலரே பிடித்துக்கொன்றுவிட்டனர். ஹிட்லர் இறந்தார். மே, 7, 1945.ல் ஜெர்மனி நிபந்தனையின்றிச் சரணடைந்தது. நேசநாட்டினர் ஜப்பானிடமிருந்து தென்கிழக்கு ஆசியநாடுகளை மீட்டு, ஜப்பானைத் தாக்கினர். 1945, ஆகஸ்டு, 6, 9 தேதிகளில் ஹிரோஷிமா, நாகசாகிஆகிய நகரங்கள் அமெரிக்க அணுக்குண்டுகளால் அழிக்கப்பட்டன. ஜப்பான் சரணடைய, இரண்டாம் உலகப் போர் முடிவடைந்தது.

இரண்டாம் உலகப்போரில், பிரிட்டன், அச்சுகள் தோற்கடிக்கப்படுவதற்குப் பெரும் உதவி செய்தது. ரஷ்யர் காட்டிய வீரமும், அமெரிக்கர் அளித்த உதவியும், நாசிச பாசிசப்படைகளின் வசமிருந்த ஐரோப்பிய நாடுகளிலுள்ள மக்கள் செய்த கிளர்ச்சிகளும், பிரிட்டன் காட்டிய ஊக்கத்துக்கும், முயற்சிக்கும், ஒப்பாகப் பாராட்டத்தக்கன. (1) பிரிட்டன் ஜெர்மனிக்குப் பணியாமல், 1940–41 ல் ஊக்கமாக எதிர்த்து நின்றது. வின்ஸ்டன் சர்ச்சில் ஆங்கில நாட்டினரிடம் கட்டுப்பாடான துணிச்சலை உருவாக்கினர். (2) பிரிட்டிஷ் விமானப் படை ஜெர்மனிமீது எதிர்த்தாக்குதல் நடத்தி, ஜெர்மனியின் விமான பலத்தை அழித்தது. (3) வடஆப்பிரிக்காவில் பிரிட்டிஷ்படை நாசிச, பாசிச ஆக்கிரமிப்பாளர்களை நீக்கிற்று. (4) போர்க்காலத்தில் இராக்கிலும், சிரியாவிலும், இரானிலும், ஜெர்மனிக்கு ஆதரவாகத் தோன்றிய சூழ்ச்சிகளை பிரிட்டன் அழித்தது.

4. நேசநாட்டினர் (ஐக்கிய நாட்டினர்), தோற்ற அச்சுநாடுகளில் இராணுவ ஆக்கிரமிப்பை ஏற்படுத்தி நிலைமையைக் கட்டுப்படுத்தினர்; போர்க் குற்றவாளிகளை விசாரித்துத் தண்டித்தனர். போரால் சிதைவுற்ற நாடுகளைச் சீராக்குவதும், போர்க் கடன்களை ஒழுங்கு செய்வதும், நாடிழந்தோரை மீட்பதும், போரினால் தோன்றிய புதிய கேள்விகளாயின. இரண்டாம் உலகப் போரினால், சில விளைவுகள் ஏற்பட்டன. (1) ஆசியாவிலும், ஆப்பிரிக்காவிலும் இருந்த ஐரோப்பியக் குடியேற்ற அல்லது ஏகாதிபத்திய முறை மறைந்தது. (2) பாசிசமும், நாசிசமும் மறைந்தன; ஜெர்மனி, சோவியத் ரஷ்யாவின் கட்டுப்பாட்டிலுள்ள கிழக்கு ஜெர்மனி எனவும், பிரிட்டிஷ், பிரஞ்சு, அமெரிக்கக் கட்டுப்பாட்டிலுள்ள மேற்கு ஜெர்மனி எனவும், பிரிக்கப்பட்டது. (3) ஐக்கிய நாடுகள் சபை தோன்றிற்று.

ஜெர்மனி இணைக்கப்படவுமில்லை; மேற்கு ஜெர்மனிக்கும், சோவியத் ரஷ்யாவுக்கும் இடையே அமைதி உடன்படிக்கை ஏற்படவுமில்லை. கிழக்கு ஜெர்மனிக்கும், மேற்கத்திய நாடுகளுக்கும் நல்லுறவு ஏற்படவுமில்லை. இத்தாலி, பின்லண்ட், ருமேனியா, ஹங்கேரி, பல்கேரியா முதலியவற்ரேடு, 1947-ல் எல்லா நேச நாடுகளும் அமைதி உடன்படிக்கைகளைச் செய்தன. யூகோஸ்லேவியா ரஷ்யாவிடமிருந்து பிரிந்து, மேற்கத்திய நாடுகளோடு உடன்படிக்கை செய்தது. பிரிட்டனும், பிரான்சும், ஐக்கிய அமெரிக்க நாடும், மேற்கு ஜெர்மனியோடும், ஆஸ்திரியாவோடும் தனியே அமைதி உடன்படிக்கைகள் செய்தன.

— x —

## (7) சுதந்திர இந்தியா—திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி—பஞ்சசீலம்

1. முன்னுரை 2. திட்டமிட்ட பொருளாதாரக் கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டிய காரணங்கள் 3. மூன்று ஐந்தாண்டுத் திட்டங்கள், நோக்கங்கள், விளைவுகள் 4. பஞ்சசீலக் கோட்பாடுகள்.

1. இந்தியா 1947-ம் ஆண்டு ஆகஸ்டுமாதம் 15-ம் நாள் ஒரு சுதந்திர நாடாக ஆயிற்று; அப்பொழுது அதனுடைய சுதந்திர அரசாங்கம் பல முக்கியமான பொறுப்புக்களை ஏற்றுக்கொள்ளவேண்டிய நிலைமை தோன்றிற்று. அவற்றுள் இரண்டை நாம் இங்கே குறிப்பிடலாம்; ஒன்று, நாட்டின் பொருளாதாரவளர்ச்சிக்கு ஆவனசெய்தல்; இரண்டு, உலகத்தில்பாதுகாப்பும், அமைதியும், செழிப்பும் பெருகும் வகையில், உலகத்தின் மற்றெல்லா நாடுகளோடும் நட்பு உறவுகளை ஏற்படுத்துதல்.

2. சுதந்திர இந்தியாவில் பாராளுமன்ற முறையை ஒட்டிய குடியாட்சி அரசியலமைப்பு வரையப்பட்டு, அது 1950–ம் ஆண்டிலிருந்து நடைமுறையில் இருந்துவரலாயிற்று. ஆனால் அரசாங்கம்குடியாட்சி வகையாகஇருந்து விட்டால்மட்டும் பொருளாதார வளர்ச்சி ஏற்பட்டுவிட முடியாதாகையால், சுதந்திர அரசாங்கமானது பரந்த இந்நாட்டின் பொருளியல் வளர்ச்சிக்குத் திட்டமிட்ட கோட்பாடே தக்கதென்றுஎண்ணிச் செயல்படலாயிற்று. இந்தியா பிரிட்டிஷாரின் ஆட்சியிலிருக்கும் பொழுது, அதில் நிலவிய பொருளாதாரக் கோட்பாடு தனியார் தன்முயற்சிக் கொள்கை அல்லது சுதந்திரமான பொருளியற் கொள்கை (laissez-faire or economic individualism) எனப்படும்; இதன்படி அரசாங்கமானது நாட்டில் அமைதி, நீதி, சட்டம், ஒழுங்கு, பாதுகாப்பு முதலியவற்றை நிலை நிறுத்த உதவும் அலுவல்களை மட்டுமே செய்து வந்தது; அது தொழில், வாணிபம் முதலியவற்றில் தலையிட்டு யாதொன்றும் செய்யாமல், அவற்றைத் தனியாருடைய முயற்சிக்கே முழுவதும் விட்டுவிட்டது. இதனால் விளைந்த பெருங்கேடென்னவெனில், சமுதாயத்தில் முதல் (Capital) உடையவர்களே தொழிலையும், வாணிபத்தையும் கட்டுப்படுத்தி, அதன்மூலம் அரசியலிலும் முழுப்பங்கு ஏற்றுச் சிறப்பாக வாழவும்; முதல் இல்லாமல் தொழில் திறம் மட்டுமே உடைய பெருவாரியான சாதாரண மக்கள் முதலாளிகளையே தங்கள் பிழைப்புக்காகச் சார்ந்திருக்கவும்; பெருமளவில் சமத்துவமில்லாத, ஏற்றத் தாழ்வுகளை மிகுதியும் உடைய சமுதாயம் தோன்றவும்; வெளிப் பார்வைக்குக் குடிகளுடைய சுதந்திரம், சமத்துவம் என்ற அடிப்படைகளில் இருப்பதாகத் தோன்றிய அரசாங்கம், உண்மையில் பணக்காரர்களுடைய ஆட்சியாகவே இயங்கவும், ஆகிய நிலைமைகள் தோன்றின.

நம் நாட்டில் கீழான வாழ்க்கைத்தரம், மிகப் பின்தங்கிய நிலையிலுள்ள வேளாண்மைத் தொழில், தொழிலாளி களின் எண்ணிக்கை கூடுதலாக இருத்தல், ஆகிய நிலைமைகள் இருந்தன. ஆலைத் தொழில்களும் மிகுதி யாக இல்லை; பெரும்பாலும் ஆலைத்தொழில் பொருட் களுக்கு நாம் வெளிநாடுகளையே நம்பிஇருந்துவந்தோம். சுதந்திர அரசாங்கம் தோன்றியதும், பல தீமைகளுக்குக் காரணமாக இருந்த தனியார் தன் முயற்சிக் கோட்பாடு கைவிடப்பட்டுச், சமுதாய நல அரசு (Social Welfare State) என்ற கருத்து கடைப்பிடிக்கப்பட்டது. சமுதாயம் முழுவதினுடைய நலனையும் பேணிக் காப்பதற்கு அரசாங்கம் தொழில், வாணிபம், முதலிய செயல்களில் தலையிட்டு நடத்துதல் வேண்டுமென்ற கருத்துப் பரவி வரலாயிற்று, இப்புதிய கோட்பாட்டின் முக்கியமான ஒரு வடிவமே திட்டமிட்ட பொருளாதாரக் கொள்கை என்பதாகும். இக் கொள்கை முதன் முதலில் சோவியத் ரஷ்யா நாட்டில் கையாளப்பட்டது. பொது நலக் கோட்பாடு என்ற பொருள்படும் சோஷலிசம் என்ற நோக்கத்தைக் காங்கிரஸ் கட்சி, 1955-ம் ஆண்டில் தனது ஆவடி மாநாட்டிலும், குடியாட்சிக் கொத்த சோஷலிசம் என்ற நோக்கத்தை 1964-ம் ஆண்டில் தனது புவனேசுவர மாநாட்டிலும் ஏற்றுக்கொண்டது. நமது அரசியலமைப்பின் சிலபிரிவுகளை, (Directive Principles of State Policy), 'மக்கள் யாவருக்கும் அரசியல், சமுதாய, பொருளியல் துறைகளில் சுதந்திரமும், சமத்துவமும் நிலைபெறும்படி செய்வதற்காக அரசாங்கம் ஆவன செய்தல்வேண்டும்' என்ற ஒரு பொதுவான கோட்பாட்டை வகுக்கின்றன. எனவே நாட்டில்தொழில் வளர்ச்சியை ஏற்படுத்தவும், மக்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்தவும், யாவருக்கும் வேலைவாய்ப்புக்களை ஏற்படுத்திக்கொடுக்கவும், அரசாங்கம் நாட்டின் செல்வ

மூலாதாரங்களைத் திட்டமிட்டுப் பயன்படுத்த முடிவு செய்தது. இதன்விளைவாகவே 1951-ம் ஆண்டிலிருந்து ஐந்தாண்டுத் திட்டங்கள் தொடங்கப்பட்டன.

(1) முதலாவது ஐந்தாண்டுத் திட்டம் (1951 ஏப்ரல் 1956 மார்ச்)

3. “நாட்டில் இருக்கும் செல்வ மூலாதாரங்களைக் கணக்கிடுவதற்கும், அவற்றை இயன்ற அளவு திறமையாகப் பயன்படுத்துவதற்கும், அரசாங்கத்தினால் மிகவும் கவனமாக, ஆழ்ந்து சிந்தித்து வரையப்பட்ட ஓர் ஏற்பாடே பொருளாதாரத் திட்டம்” எனப்படும். (அலாக் கோஷ் எழுதிய Indian Economy என்ற நூலிலிருந்து). எனவே நமது பொருளாதாரத் திட்டங்களை வரைவதில் பொருளியல், கணித இயல், புள்ளி விவர இயல், பூகோள இயல், மக்கள் பெருக்க இயல், அறிவியல் முதலிய துறைகளிலெல்லாம் சிறந்து விளங்கிய வல்லுநர்களுடைய உதவி இன்றியமையாதிருந்தது. நமக்குப் பழக்கமான குடியாட்சி முறைக்கு ஒத்த முறையிலேயே திட்டங்களை வரைந்து செயல்படுத்துவதென்று தொடக்கத்து [illegible] மையும் அரசாங்கத் துறையும், தனியார் துறையும் கலந்த கலவைப் பொருளாதார முறையும் (Mixed Economy) இருத்தல் வேண்டுமென்று அது ஒப்புக்கொண்டது.

முதலாம் ஐந்தாண்டு திட்டத்தின் வந்த நோக்கங்கள் பொருள் உற்பத்தியைப் பெருக்குவதும், வருமானங்களின் ஏற்றத் தாழ்வுகளைக் குறைப்பதும், ஒரு வரையறைக்குள்ளான அளவில் தனியார் தொழிலை வளரச்செய்தலும், அரசாங்கத் துறையை விரிவடையச் செய்வதும் ஆகும். இதில் இந்தியாவின் வேளாண்மைத் தொழிலின் பொருளை 42.1%க்கு உயரும்படி செய்வதும், சமுதாய வளர்ச்சித் திட்டங்களை ஏற்படுத்துதலும், நீர்ப்பாசன, மின்சாரத்திட்டங்களை ஏற்படுத்து

1962-க்குப் பின்னர் பொருளாதார வளர்ச்சியோடு, பாதுகாப்புக்கும் (Defence) திட்டத்தில் முதலிடம் கொடுக்கப்பட்டது. திட்டகாலம் முடிவடைவதற்கு முன்னரே அதனுடைய மதிப்பீட்டை நாம் காண்போமாயின், நாட்டின் ஆண்டு வருமானம் 5% உயருவதற்குப் பதிலாக 2·5% தான் உயர்ந்துள்ளதென்பதும், அதனோடு ஆண்டுதோறும் நாட்டின் மக்கள்தொகையும் 2% அளவில் வளர்ந்து வருகிறதெனவும், எனவே ஆள் ஒவ்வொருவருக்கும் ஏற்கனவே உள்ள நாள் வருமானத்தில் உயர்வு ஏதும் ஏற்படவில்லை என்பதும் தெரிய வருகின்றன. மேலும் நம் நாட்டில் மக்களுடைய நுகர்வுக்கு வேண்டிய பொருள்களில் பெரும் பகுதியையும், ஆலைத் தொழில்களுக்கு வேண்டிய கச்சாப்பொருள்களையும், வேளாண்மைத் தொழிலிலிருந்தே பெறவேண்டியிருப்பதால், அத்தொழில் விரிவடைய வேண்டிய கட்டாயம் இருக்கிறது. இதனை இப்பொழுது வலியுறுத்தி அரசாங்கம் செயல்படுகிறது.

திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியில் சில குறைபாடுகள் இருப்பினும், இவற்றைப் போக்குதல் இயலும் என்பதிலும், இக் கோட்பாடு நாட்டு மக்களை இணைக்கும் ஓர் ஆற்றல் என்பதிலும் ஐயமில்லை.

### (4) பஞ்சசீலக் கொள்கை

பஞ்சசீலம் என்ற சொல் நம் நாட்டில் பண்டைய பௌத்தர்கள், உலகியல், சமய இயல் துறைகளில் கடைப்பிடிப்பதற்காக வகுத்துக்கொண்ட வாழ்க்கை நெறி முறைகளை உணர்த்துவதாகும். இச்சொல்லை நம்நாட்டின் சுதந்திர அரசாங்கம், தனது அயல்நாட்டுக் கொள்கையின் ஐந்து குறிக்கோள்களையும் உணர்த்துவதற்காகக் கையாண்டது. பஞ்சசீலக் கொள்கையின் ஐந்து குறிக்கோள்களாவன:-

1. ஒவ்வொரு நாடும், மற்றதனுடைய நில எல்லையையும், அதில் அதனுடைய இறைமையையும் (Sovereignty) மதித்து நடத்தல்;

2. வலியச்சென்று தாக்குதல் அல்லது ஆக்கிரமிப்புச் செய்யாமை;

3. ஒவ்வொரு நாடும் மற்றதனுடைய உள்நாட்டுச் செயல்களில் தலையிடாதிருத்தல்;

4. சமத்துவமும், ஒருவருக்கொருவர் உதவி செய்தலும்;

5. அமைதியான உடன் வாழ்க்கை வாழ்தல் (peaceful co existence).

இவ்வைந்து நெறிகளும் நமது முன்னாள் தலைமை அமைச்சரான ஜவகர்லால் நேருவினாலும், கம்யூனிசச் சீன நாட்டின் முதலமைச்சரான சூ-என்-லாயினாலும் 1954-ஏப்ரலில் வகுக்கப்பட்டன. இவற்றை 1955-ம் ஆண்டில், ஜாவாவில் பாண்டங்கில் நடைபெற்ற 29 ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் மாநாடு ஏற்றுக்கொண்டது.

இந்நெறிகள் நல்லவையேயாயினும், இவற்றை ஒப்புக்கொண்ட நாடுகள், அவற்றுக்கு மதிப்புக்கொடுத்தால்தான், அவற்றுக்குப் பொருள் உண்டு. நல்ல நெறிகளை வகுத்தாலும், அவற்றை எப்பொழுதும் யாவரும் ஏற்று நடப்பதில்லை. இவற்றை ஏற்ற கம்யூனிசச் சீனு 1962-ல் இந்தியாவைத் தாக்கிப் போரிட்டது; பாகிஸ்தான் 1965-ல் இரண்டு மாதம் இந்தியாவோடு போர்செய்தது.

1962-க்குப் பின்னர் பொருளாதார வளர்ச்சியோடு, பாதுகாப்புக்கும் (Defence) திட்டத்தில் முதலிடம் கொடுக்கப்பட்டது. திட்டகாலம் முடிவடைவதற்கு முன்னரே அதனுடைய மதிப்பீட்டை நாம் காண்போமாயின், நாட்டின் ஆண்டு வருமானம் 5% உயருவதற்குப் பதிலாக 2·5% தான் உயர்ந்துள்ளதென்பதும், அதே நேரத்தில் ஆண்டுதோறும் நாட்டின் மக்கள் தொகையும் 2% அளவில் வளர்ந்து வருகிறதெனவும், எனவே ஆள் ஒவ்வொருவருக்கும் ஏற்கனவே உள்ள நாள் வருமானத்தில் உயர்வு ஏதும் ஏற்படவில்லை என்பதும் தெரிய வருகின்றன. மேலும் நம் நாட்டில் மக்களுடைய நுகர்வுக்கு வேண்டிய பொருள்களில் பெரும் பகுதியையும், ஆலைத் தொழில்களுக்கு வேண்டிய கச்சாப்பொருள்களையும், வேளாண்மைத் தொழிலிலிருந்தே பெறவேண்டியிருப்பதால், அத்தொழில் விரிவடைய வேண்டிய கட்டாயம் இருக்கிறது. இதனை இப்பொழுது வலியுறுத்தி அரசாங்கம் செயல்படுகிறது.

திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியில் சில குறைபாடுகள் இருப்பினும், இவற்றைப் போக்குதல் இயலும் என்பதிலும், இக்கோட்பாடு நாட்டு மக்களை இணைக்கும் ஓர் ஆற்றல் என்பதிலும் ஐயமில்லை.

### (4) பஞ்சசீலக் கொள்கை

பஞ்சசீலம் என்ற சொல் நம் நாட்டில் பண்டைய பௌத்தர்கள், உலகியல், சமய இயல் துறைகளில் கடைப்பிடிப்பதற்காக வகுத்துக்கொண்ட வாழ்க்கை நெறி முறைகளை உணர்த்துவதாகும். இச்சொல்லை நம்நாட்டின் சுதந்திர அரசாங்கம், தனது அயல்நாட்டுக் கொள்கையின் ஐந்து குறிக்கோள்களையும் உணர்த்துவதற்காகக் கையாண்டது. பஞ்சசீலக் கொள்கையின் ஐந்து குறிக்கோள்களாவன:-

1. ஒவ்வொரு நாடும், மற்றதனுடைய நில எல்லையையும், அதில் அதனுடைய இறைமையையும் (Sovereignty) மதித்து நடத்தல்;

2. வலியச்சென்று தாக்குதல் அல்லது ஆக்கிரமிப்புச் செய்யாமை;

3. ஒவ்வொரு நாடும் மற்றதனுடைய உள்நாட்டுச் செயல்களில் தலையிடாதிருத்தல்;

4. சமத்துவமும், ஒருவருக்கொருவர் உதவி செய்

5. அமைதியான உடன் வாழ்க்கை வாழ்தல் (peaceful co existence).

இவ்வைந்து நெறிகளும் நமது முன்னாள் தலைமை அமைச்சரான ஜவகர்லால் நேருவினாலும், கம்யூனிசச் சீன நாட்டின் தலைமைச்சரான சூ-என்-லாயினாலும் 1354-ஏப்ரலில் வகுக்கப்பட்டன. இவற்றை 1955-ம் ஆண்டில், ஜாவாவில் பாண்டங்கில் நடைபெற்ற 29 ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் மாநாடு ஏற்றுக் கொண்டது.

இந்நெறிகள் நல்லவையேயாயினும், இவற்றை ஒப்புக்கொண்ட நாடுகள், அவற்றுக்கு மதிப்புக்கொடுத்தால்தான், அவற்றுக்குப் பொருள் உண்டு. நல்ல நெறிகளை வகுத்தாலும், அவற்றை எப்பொழுதும் யாவரும் ஏற்று நடப்பதில்லை. இவற்றை ஏற்ற கம்யூனிசச் சீனு 1962-ல் இந்தியாவைத் தாக்கிப் போரிட்டது; பாகிஸ்தான் 1965-ல் இரண்டு மாதம் இந்தியாவோடு போர்செய்தது.

1962-க்குப் பின்னர் பொருளாதார வளர்ச்சியோடு, பாதுகாப்புக்கும் (Defence) திட்டத்தில் முதலிடம் கொடுக்கப்பட்டது. திட்டகாலம் முடிவடைவதற்கு முன்னரே அதனுடைய மதிப்பீட்டை நாம் காண்போமாயின், நாட்டின் ஆண்டு வருமானம் 5% உயருவதற்குப் பதிலாக 2·5% தான் உயர்ந்துள்ளதென்பதும், அதே நேரம் ஆண்டுதோறும் நாட்டின் மக்கள் தொகையும் 2% அளவில் வளர்ந்து வருகிறதெனவும், எனவே ஆள் ஒவ்வொருவருக்கும் ஏற்கனவே உள்ள நாள் வருமானத்தில் உயர்வு எதும் ஏற்படவில்லை என்பதும் தெரிய வருகின்றன. மேலும் நம் நாட்டில் மக்களுடைய நுகர்வுக்கு வேண்டிய பொருள்களில் பெரும் பகுதியையும், ஆலைத் தொழில்களுக்கு வேண்டிய கச்சாப்பொருள்களையும், வேளாண்மைத் தொழிலிலிருந்தே பெறவேண்டியிருப்பதால், அத்தொழில் விரிவடைய வேண்டிய கட்டாயம் இருக்கிறது. இதனை இப்பொழுது வலியுறுத்தி அரசாங்கம் செயல்படுகிறது.

திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சியில் சில குறைபாடுகள் இருப்பினும், இவற்றைப் போக்குதல் இயலும் என்பதிலும், இக்கோட்பாடு நாட்டு மக்களை இணைக்கும் ஓர் ஆற்றல் என்பதிலும் ஐயமில்லை.

### (4) பஞ்சசீலக் கொள்கை

பஞ்சசீலம் என்ற சொல் நம் நாட்டில் பண்டைய பௌத்தர்கள், உலகியல், சமயஇயல் துறைகளில் கடைப்பிடிப்பதற்காக வகுத்துக்கொண்ட வாழ்க்கை நெறிமுறைகளை உணர்த்துவதாகும். இச்சொல்லை நம்நாட்டின் சுதந்திர அரசாங்கம், தனது அயல்நாட்டுக் கொள்கையின் ஐந்து குறிக்கோள்களையும் உணர்த்துவதற்காகக் கையாண்டது. பஞ்சசீலக் கொள்கையின் ஐந்து குறிக்கோள்களாவன:-

1. ஒவ்வொரு நாடும், மற்றதனுடைய நில எல்லையையும், அதில் அதனுடைய இறைமையையும் (Sovereignty) மதித்து நடத்தல்;

2. வலியச்சென்று தாக்குதல் அல்லது ஆக்கிரமிப்புச் செய்யாமை;

3. ஒவ்வொரு நாடும் மற்றதனுடைய உள்நாட்டுச் செயல்களில் தலையிடாதிருத்தல்;

4. சமத்துவமும், ஒருவருக்கொருவர் உதவி செய்தலும்;

5. அமைதியான உடன் வாழ்க்கை வாழ்தல் (peaceful co existence).

இவ்வைந்து நெறிகளும் நமது முன்னாள் தலைமை அமைச்சரான ஜவகர்லால் நேருவினாலும், கம்யூனிசச் சீன நாட்டின் முதலமைச்சரான சூ-என்-லாயினாலும் 1954-ஏப்ரலில் வகுக்கப்பட்டன. இவற்றை 1955-ம் ஆண்டில், ஜாவாவில் பாண்டங்கில் நடைபெற்ற 29 ஆசிய ஆப்பிரிக்க நாடுகளின் மாநாடு ஏற்றுக் கொண்டது.

இந்நெறிகள் நல்லவையேயாயினும், இவற்றை ஒப்புக்கொண்ட நாடுகள், அவற்றுக்கு மதிப்புக்கொடுத்தால்தான், அவற்றுக்குப் பொருள் உண்டு. நல்ல நெறிகளை வகுத்தாலும், அவற்றை எப்பொழுதும் யாவரும் ஏற்று நடப்பதில்லை. இவற்றை ஏற்ற கம்யூனிசச் சீனா 1962-ல் இந்தியாவைத் தாக்கிப் போரிட்டது; பாகிஸ்தான் 1965-ல் இரண்டு மாதம் இந்தியாவோடு போர்செய்தது.

எதிர்காலத்தில் ஆசிய நாடுகளிடையே அமைதியும், நல்லுறவும் ஏற்படுவது, இத்தகைய நன்னெறிகளை ஒட்டி அவை நடப்பதைப் பொறுத்திருக்கிறது.

—(0)—

## (8) ஆசியாவின் சுதந்திர நாடுகள்

### (The Free States of Asia)

1, முன்னுரை; 2. சுதந்திர நாடுகள் (1) இந்தியா-பிரிவினைக்குக் காரணமான நிகழ்ச்சிகள் (2) பாகிஸ்தான் (3) பர்மா (4) இலங்கை (5) மலேயா (6) இந்தோனேஷியா (7) இந்தோசீனு (8) பிலிப்பைன்ஸ் (9) கொரியா.

1. இரண்டாம் உலகப்போரின் விளைவாக, ஆசியாக் கண்டத்தில் ஐரோப்பிய நாடுகளுக்குப் பதினேழாம், பதினெட்டாம் நூற்றாண்டுகளிலிருந்து சொந்தமாக இருந்துவந்த குடியேற்ற நாடுகளெல்லாம், சுதந்திரம் பெற வாய்ப்புக்கள் தோன்றின. ஐரோப்பிய நாடுகளிலெல்லாம் இங்கிலாந்துக்கே பெருமளவில் குடியேற்ற நாடுகள் இருந்தன.

2. சுதந்திரநிலை தோன்றச் சாதகமான சூழ்நிலைகள்:

உலகப்போர் நடந்துகொண்டிருந்தபோது, ஆசியக் குடியேற்ற நாடுகளிலெல்லாம், சுதந்திர உணர்வு வலுவடைவதற்குரிய சூழ்நிலை தோன்றிற்று. மேற்கத்திய நாட்டினர் பின்பற்றிவந்த தேசீய உணர்வும், குடியாட்சி உணர்வும், கருத்துக்களும், மேற்கத்தியக் கல்வி முறைகளின் மூலமாகப் போர்க்காலத்துக்கு முன்னரே இந் நாடுகளில் பரவின. எனவே தேசீய இயக்கங்கள் இந் நாடுகளில் அந்தந்த மக்களுடைய திறனுக்கேற்ப வலு

வடைந்து இருந்தன. இவற்றின் சுதந்திர உணர்ச்சியை மதித்து நடப்பது மேற்கத்திய ஆட்சியாளர்களுக்கு இன்றியமையாததாயிற்று.

(2) பொருளியல் துறையில் முன்னேறுவதற்கு, அரசியல் சுதந்திரம் இன்றியமையாததென்பது ஆசியக் குடியேற்ற நாட்டு மக்களுக்குத் தெளிவாகத் தெரியலாயிற்று. இக்கருத்தும் அவரது தேசீய உணர்வை வலுவாக்கிற்று. இவ்வுணர்வு, இரண்டாம் உலகப் போரில் வெளிப்படுவதற்கு ஜப்பானின் படையெடுப்பு ஓர் வாய்ப்பைத் தோற்றுவித்தது. ஜப்பான் இவற்றை 1942–44 வரை கைப்பற்றியிருந்தபோது, இவை ஐரோப்பிய ஆட்சியாளருக்கெதிராகச் சுதந்திர அரசாங்கங்களை அமைத்தும், சில தேசீயப் படைகளை அமைத்தும், சுதந்திரம் பெற ஆயத்தமாக இருந்தன,

(3) மேலும், போர்க்காலத்தில், இந்நாடுகளின், மக்கள் தமது ஆட்சியாளரின் பக்கம் சேர்ந்து, அச்சு நாடுகளுக்கெதிராகப் போர்புரியும் மனநிலையில் பொதுவாக இல்லை; அவர்கள் எந்நாட்டினாலும் ஆளப்படாமல் சுதந்திரமாகவே இருக்க விரும்பினர். இந்நிலையில் இக் குடியேற்ற நாடுகளையெல்லாம் மீட்டுத் தங்களுடைய ஆட்சியில் தொடர்ந்து வைத்துக்கொண்டு, அவற்றைப் பாதுகாப்பதில் உள்ள சிரமங்களை மேலை நாட்டினர் நன்கு உணர்ந்தனர். எனவே குடியேற்ற நாடுகளின் பாதுகாப்புக்கு ஆகும் பொருட் செலவையும், ஆள் தேவையையும் மேலை நாட்டவர் ஏற்க விரும்பவில்லை. போர்களின் காரணங்களில் ஒன்று குடியேற்ற நாட்டு முறையைத் தொடர்ந்து வைத்திருப்பதுதான். எனவே குடியேற்ற நாடுகளைப் பாதுகாக்கும் பொறுப்பை, அவற்றைச் சுதந்திரமாக ஆக்கி, அவற்றிடமே விட்டு விடுவதே சிறந்ததென மேலை நாடுகள் எண்ணின.

(4) பொதுவாக இரண்டாம் உலகப் போருக்குப் பின் பேரரசு முறைக்கு அல்லது ஏகாதிபத்தியக் கொள்கைக்கு (Imperialist policy) உலகமெங்கிலும் எதிர்ப்புத் தோன்றிற்று. இவ்வெதிர்ப்பு பலவகையாக வெளிப்படவும் சூழ்நிலைகள் இருந்தன.

இவ்வாறு இரண்டாம் உலகப் போருக்குப்பின் ஏற்பட்ட புதிய சூழ்நிலையின் காரணமாக ஆசியாவிலுள்ள ஐரோப்பியக் குடியேற்ற நாடுகள் சுதந்திரம் பெற்றன.

3. சுதந்திர நாடுகள் (1) இந்தியா: இந்தியா, 1947-ம் ஆண்டு, ஆகஸ்டு 15-ம் நாள் சுதந்திர நாடாக ஆயிற்று. (இதன் தேசிய இயக்க வளர்ச்சியைப்பற்றிய வரலாறு விரிவாக முன்னரே கூறப்பட்டது). சுதந்திர இந்தியா, குடியரசாக ஆயிற்று. அது ஆங்கிலப் பாராளுமன்ற அரசாங்க முறையை ஒட்டியும், சில அம்சங்களில் ஐக்கிய அமெரிக்க நாட்டின் கூட்டாட்சிமுறையை ஒட்டியும், ஒரு அரசியலமைப்பை 1950-ல் ஏற்படுத்திற்று. அது பிரிட்டிஷ் காமன்வெல்த்தில் உறுப்பு நாடாக இருக்கிறது. அதில் முன்பு இருந்த சிறு சுதேச அரசுகளெல்லாம் இந்திய யூனியனோடு இணைக்கப்பட்டன. 1956-ல் மொழிவாரியாக அதன் மாகாணங்கள் அமைக்கப்பட்டன. 1951லிருந்துதிட்டமிட்டபொருளாதாரவளர்ச்சி என்ற கோட்பாட்டை அது கையாண்டு வருகிறது. ஐ. நா. சபையிலும், வேறு பல கூட்டு அமைப்புக்களிலும், இந்நாடு, உலக அமைதிக்கும், பாதுகாப்புக்கும் தனக்குரிய பொறுப்பை நிறைவேற்றி வருகிறது.

(2) பாகிஸ்தான்: முன்பு பிரிட்டிஷ் ஆட்சியில் ஒரே நாடாக இருந்த இந்திய துணைக்கண்டம், பாகிஸ்தான் எனவும், இந்தியா எனவும் இரு சுதந்திர நாடுகளாகப் பிரிக்கப்பட்டது. பிரிவினையை இன்றியமையாததாகச் செய்த நிகழ்ச்சிகளைச் சுருக்கிக் கூறுவோம்.

முஸ்லிம் லீக் (Muslim League), 1906-ம் ஆண்டில் அரசர் ஆகாகான் என்பவரால் தோற்றுவிக்கப்பட்டது. முந்திய நாட்களில் இதனுடைய நோக்கம், முஸ்லீம்களுடைய உரிமைகளுக்கு ஆதரவு தேடி, அவற்றைப் பாதுகாப்பது என்பதாகும். இது நடத்திய கிளர்ச்சிகளின் பயனாக, 1909-ம் ஆண்டின் இந்திய ஆலோசனை மன்றங்களின் சட்டத்தில் (Indian Councils Act), இந்திய முஸ்லிம்களுக்குப் பொதுத் தேர்தல்களில் தனித்தொகுதிகள் நிறுவப்பட்டன. இந்திய தேசீய காங்கிரசும், முஸ்லிம் லீக்கும், 1916-ல் இந்திய அரசியலமைப்புச் சீர்திருத்தத்துக்காக, 19 இந்தியச் சட்ட மன்ற உறுப்பினர் எழுதிய ஒரு திட்டத்தை ஏற்றுக் கொண்டன. இரண்டும் செய்து கொண்ட இலட்சுமணபுரி ஒப்பந்தத்தின் மூலமாக (1916), முஸ்லிம்களுக்குச் சட்ட மன்றங்களில் வகுப்பு வாரிப் பிரதிநிதித்துவக்கொள்கை ஒப்புக்கொள்ளப்பட்டது. 1920-ல் முஸ்லிம் பல்கலைக் கழகம் ஒன்று அலிகாரில் தொடங்கப்பட்டது.

முதல் உலகப்போர் முடிந்ததும், காங்கிரசும், முஸ்லிம் லீக்கும் ஒன்றுபடுவதற்கு வேறொரு வாய்ப்புத் தோன்றிற்று. போரில் நேசநாடுகளுக்கெதிராக ஜெர்மனியின் பக்கம் சேர்ந்து, போரிட்டுத் தோற்ற துருக்கிக்குச் சொந்தமானதும், முஸ்லிம்களுக்குப் புனிதமானதுமான இடத்தை, நேச நாட்டினர் துருக்கிக்கே திருப்பிக்கொடுத்தல் வேண்டுமென, காங்கிரசும், லீக்கும் சேர்ந்து இந்தியாவில் கிளர்ச்சி செய்தன. இதற்குக் கிலாபத் இயக்கம் என்று பெயர். துருக்கி சுல்தான் காலிப் (Caliph) ஆகவும் இருந்தவர். துருக்கியில் கமால் என்ற தேசியக்கட்சித் தலைவர் ஆட்சியைக் கைப்பற்ற, 1924-ல் துருக்கிய சட்டமன்றம் காலிப்பின் அலுவலையே நீக்கி விட்டது; எனவே இந்தியாவில் மேற்படி இயக்கம் தொடர்ந்து நடைபெறக் காரணமில்லை.

முதலுலகப்போரை அடுத்துக் காங்கிரசுக்கும், முஸ்லிம் லீக்குக்கும் ஏற்பட்ட ஒற்றுமை நீடித்திருக்கவில்லை. காங்கிரஸ் 1927லும், 1929லும் இந்தியா முழுமைக்கும், முழுச்சுதந்திரம் வேண்டுமெனக்கூறித் தீர்மானங்களைச்செய்தது. 1935-ம் ஆண்டின் இந்திய அரசாங்கச் சட்டத்தைச் செயல்படுத்தக் காங்கிரஸ் தீர்மானித்தது. பொதுத்தேர்தல்களில் அது பெரும்பான்மைக் கட்சியாகச் சில மாகாணங்களிலும், லீக், சில மாகாணங்களிலும் வந்தன. லீகின் புதியதலைவர், முகமதுஅலி ஜின்னு என்பவர். இவர் முன்பு காங்கிரசில் உயரிய பொறுப்பான அலுவலில் இருந்தவர். 1937-ல் காங்கிரசும், லீக்கும் கூட்டு அமைச்சரவைகளை ஏற்படுத்தலாமென இவர் கூறினார்; ஆனால் இவருடைய திட்டம் ஏற்றுக் கொள்ளப்படவில்லை. காங்கிரஸ் ஆட்சியில் முஸ்லிம்களின் உரிமைகள் காப்பாக இருக்க இயலாதென இவர் கருதி, இந்துக்களும், முஸ்லிம்களும் இரு வேறு தேசீய இனங்களைச் சேர்ந்தவரென ஒரு கோட்பாட்டைத் தோற்றுவித்து, அதனைப் பரப்பினார். அக் கோட்பாடு வலுவடைந்தது.

இந்தியாவில் முஸ்லிம்களுக்குத் தனிநாடு வேண்டும் என்ற கருத்தைத் தோற்றுவித்தவர் சர். முகமது இக்பால் என்ற புலவர் ஆவார்; பின்னர் 1933-ல் தான் இக்கருத்துக்குத் திட்டவட்டமான வடிவமும், பாகிஸ்தான் என்ற பெயரும் ரஹ்மத்அலி என்பவரால் கொடுக்கப்பட்டன. முஸ்லிம்கள் பெரும்பான்மையாக வாழ்ந்த இந்திய மாகாணங்களின் பெயர்களில் சில எழுத்துக்களை ஒன்று சேர்த்தால், பாகிஸ்தான் என்ற பெயர் தோன்றுகிறது:- Punjab, Afghan Province (or North west Frontier Province), Kashmir, Sindh, Baluchistan இப்பகுதிகளில் இப்பொழுது (1940-ல்)

ஏறக்குறைய 30 மில்லியன் முஸ்லிம்கள் இருந்தனர், ஜின்னா இவற்றோடு கிழக்கு வங்காளத்தையும் சேர்த்து, பாகிஸ்தான் அமைக்கப்படுதல் வேண்டுமென உறுதியாகக்கூறிவந்தார். 1940-ல் முஸ்லீம்லீக், பாகிஸ்தானை அடைவதே தனது குறிக்கோள் என, ஓர் தீர்மானத்தை நிறைவேற்றிற்று. இரண்டாம் உலகப்போர் முடிந்ததும், இந்திய அரசியல் கேள்விகளுக்குத் தீர்வுகாண, பிரிட்டிஷ் அரசாங்கம் மூவரடங்கிய ஓர் காபினெட் குழுவை அனுப்பிற்று. அதன் திட்டங்களை நிறைவேற்றுவதைப்பற்றி, காங்கிரசுக்கும், லீக்குக்கும் கருத்து ஒற்றுமை ஏற்படவில்லை. 1946, ஆகஸ்டில், முஸ்லிம் லீக் நேரடி நடவடிக்கைகளில் இறங்கிற்று. இந்து, முஸ்லிம் சமுதாயத்தினர் பல இடங்களில் கடுமையாகமோத, பொருள் அழிவும், உயிர் அழிவும் ஏற்பட்டன. காந்தியும், ஜின்னாவும் வகுப்பு மோதல் நீங்க வேண்டுமெனக் கூறினர்.

1946—47-ல் ஜவஹர்லால் நேருவின் தலைமையில் இந்தியா முழுவதற்கும் ஏற்படுத்தப்பட்ட இடைக்கால அரசாங்கத்தில், சில முஸ்லிம் லீக் உறுப்பினர்கள் இருந்தனர். எனினும் காங்கிரஸ்—லீக் உறுப்பினர்களுக்கிடையில் வேறுபாடுகள் தோன்றின. பீகாரிலும், மற்றும் சில மாகாணங்களிலும் கொடிய வகுப்புக் கலகங்கள் தோன்றின. 1946-ல் அமைக்கப்பட்ட அரசியலமைப்புச் சட்ட மன்றத்தில்(Constituent Assembly) லீக் கலந்துகொள்ள மறுத்தது. இந்திய ஆட்சியை இந்தியரிடம்விட்டுவிட்டுத்,தான் விலகிவிடப்போவதாகப் பிரிட்டிஷ் அரசாங்கம் 1947 பிப்பிரவரியில் அறிவித்தது. மார்ச்சில் வைசிராயாக வந்த மௌண்ட்பாட்டன்பிரபு, 'இந்திய அரசியல் பிரச்சினைதீர வழி, இந்தியாவை இரண்டு சுதந்திர நாடுகளாகப் பிரிப்பதுதான்,' என்று

ஜூனில் கூறினர். காங்கிரஸ் மௌண்ட்பாட்டனின் தீர்ப்பை ஏற்றுக்கொள்ளவும், இந்தியாவைப் பாகிஸ்தான் எனவும், இந்தியா எனவும் இரு சுதந்திர நாடுகளாகப் பிரித்து, இந்திய சுதந்திரச் சட்டத்தை (Indian Indepandence Act), பிரிட்டிஷ் பாராளுமன்றம், 1947, ஜூலையில் நிறைவேற்றிற்று. இச்சட்டத்தை ஒட்டி இந்தியாவும், பாகிஸ்தானும், 1947, ஆகஸ்டு 15-ம் நாள் சுதந்திர நாடுகளாகத் தோன்றின.

பாகிஸ்தானில் மேற்கு பஞ்சாப், வடகிழக்கு எல்லை மாகாணம், சிந்து, பிரிட்டிஷ் பலூச்சிஸ்தான், கிழக்கு வங்காளம், அஸ்ஸாமிலுள்ள சில்ஹெட் மாவட்டம் முதலிய நிலப்பகுதிகள் சேர்ந்துள்ளன. *

3. பர்மா: முன்பு சுதந்திர நாடாக இருந்த பர்மா, 1824–26, 1852, 1885-ம் ஆண்டுகளில் பிரிட்டனுடன் அது நடத்திய போர்களினிறுதியில், சுதந்திரத்தை இழந்து, பிரிட்டிஷ் மாகாணமாக 1886-ல் இந்தியாவுடன் இணைக்கப்பட்டிருந்தது. தேர்ந்தெடுக்கப்பட்ட மாகாணச்சட்டமன்றம் 1922-ல் இதில் ஏற்படுத்தப்பட்டது. 1937-ல் இது இந்தியாவினின்றும் பிரிக்கப்பட்டது. 1942-ல் இது ஜப்பானால் கைப்பற்றப்பட்டு, 1945-ல் பிரிட்டனால் மீட்கப்பட்டது. பிரிட்டிஷ்காமன்வெல்த்துக்கு வெளியே சுதந்திரமாக இருப்பதற்கு, பர்மியர் தமது விருப்பத்தை பிரிட்டிஷ் தொழிற்கட்சி அரசாங்கத்துக்குத் தெரிவிக்கவே, 1948-ம் ஆண்டு ஜனவரி 4–ல் சுதந்திர பர்மா யூனியனை பிரிட்டிஷ் அரசாங்கம் நிறுவிற்று. யூநூ என்பவர் முதலமைச்சர் ஆயினர். அதே ஆண்டில் பர்மா ஐ. நா. சபையில் உறுப்பு நாடாக ஆயிற்று.

*Professor R. Sathianathaier's A Political and Cultural History of India, Volume III page 575

4. **இலங்கை:** பண்டைக்காலத்தில் இலங்கையிலிருந்த, சிங்கள அரசு, தென்னிந்தியாவிலுள்ள தமிழரசர்களுடன் போரிட்டது; கி.பி. 14-ம் நூற்றாண்டில் வட இலங்கையில் தமிழரசு ஒன்று தோன்றிற்று. 1505-ல் போர்ச்சுகீசியரும், 1658-ல் டச்சுக்காரரும் இலங்கையைக் கைப்பற்றினர். பிரிட்டன் 1796-லிருந்து இலங்கையைக் கைப்பற்றத் தொடங்கி, 1802-ல் இத்தீவு முழுவதையும் தனது நேரடியான ஆட்சியில் கொண்டுவந்தது. 1948-ம் ஆண்டு பிப்ரவரியில் இலங்கை பிரிட்டிஷ் காமன்வெல்த்தில் சுதந்திர டொமீனியனாக வந்தது. பொருளியலிலும், தொழில் நுட்ப இயலிலும், ஆசிய நாடுகள் ஒன்றுக்கொன்று உதவி செய்வதற்கு வழிசெய்கின்ற கொழும்புத் திட்டத்தை (Colombo Plan) 1950-ல் உருவாக்கிய நாடுகளுள் இது ஒன்று. 1955-ல் ஐ. நா. சபையில் இது உறுப்பு நாடாக ஆயிற்று.

5. **மலேயா:** பிரிட்டிஷ் காப்புநாடாக (Protectorate) 19-ம் நூற்றாண்டில் அமைந்த மலேயா 1957-ம் ஆண்டு, ஆகஸ்டில் சுதந்திர நாடாக ஆயிற்று. இது வட போர்னியோவில் சிலபகுதிகளுடனும், சிங்கப்பூருடனும் சேர்ந்து, மலேஷியாவாக ஆயிற்று. இப்பொழுது சிங்கப்பூர் தனியாக உள்ளது.

6. **இந்தோசீனா,** 7, **இந்தோனேஷியா** 8, **பிலிப்பைன்ஸ்** முதலியவை முறையே 1954, 1949, 1946-ம் ஆண்டுகளில் சுதந்திர நாடுகளாயின. (விவரங்கள் முன்னர்க் கூறப்பட்டன)

9. **கொரியா:** கொரியா 1905-ல் ஜப்பானின் குடியேற்ற நாடாக வந்தது. இரண்டாம் உலகப்போரினிறுதியில் இதன் வடபகுதி ரஷ்யாவினாலும், தென்பகுதி ஐக்கிய அமெரிக்க நாட்டினாலும், கைப்பற்றப்

பட்டு, வடகோரியா எனவும், தென்கோரியா எனவும் (1945ல்) பிரிக்கப்பட்டது. இரண்டும் 1950–52ல் போரிட்டன; ஐ. நா. சபை தலையிட்டது; போர் பரவாமல் தடுக்கப்பட்டுப் பின் நிறுத்தப்பட்டது. இரண்டும் இணையாமல் தனிநாடுகளாக இருக்கின்றன.

## (9) உலக வல்லரசுகளான சோவியத் ரஷ்யாவும் ஐக்கிய அமெரிக்க நாடும்

1. முன்னுரை 2. ஐக்கிய அமெரிக்க நாட்டின் எழுச்சி 3. சோவியத் ரஷ்யாவின் எழுச்சி 4. இரண்டாம் உலகப் போருக்குப் பின் இரு நாடுகளுக்குமுள்ள தொடர்புகள் 5. ஒத்துழைப்பின் இன்றியமையாமையும், அது நடைமுறையில் இருக்கும் நிலையும்.

1. இந்த நூற்றாண்டின் பிற்பகுதியில் இரு உலக வல்லரசுகளாக விளங்கும் நாடுகள் ஐக்கிய அமெரிக்க நாடும், சோவியத் ரஷ்யாவும் ஆகும். சமுதாயம், பொருளியல், அரசியல் முதலிய துறைகளில் வேறுபட்ட அமைப்புக்களை உடைய இவ்விரு வல்லரசுகளுக்கு மிடையே நல்லுறவும், ஒத்துழைப்பும் இருந்தால்தான், பெருமளவில் உலகத்தில் அமைதியும், பாதுகாப்பும், வளமும் பெருக்கத்தக்க சூழ் நிலைகள் தோன்றும். எனவே வருங்காலத்தில் உலகத்தில் ஏற்படக்கூடிய நிலைமைகளை, ஓரளவேனும் சரிவர முன்னதாக உணருவதற்கு, இவ்விரு வல்லரசுகளுக்கு மிடையே இந் நூற்றாண்டின் தொடக்கத்தில், முக்கியமாக, இரண்டாம் உலகப் போருக்குப் பிற்பட்ட காலத்தில் நிலவிவரும் உறவுகளைச் சீர்தூக்கிப் பார்க்க வேண்டியது இன்றியமையாததாகிறது.

2. ஐக்கிய அமெரிக்கநாடு 1783-ம் ஆண்டில் ஒரு சுதந்திர நாடாகத் தோன்றிய பின், அது உள்நாட்டிலும், உலக அரசியலிலும் முதலிடம் பெறுவதற்குரிய வாய்ப்புக்கள்பல அடுத்தடுத்துவந்தன. (a) அதனுடைய பொருளாதார வளர்ச்சியும், (b) அது இந்த நூற்றுண்டில் நடந்தஇரண்டுஉலகப்போர்களிலும் நேசநாட்டினர் வெற்றிபெறுதற்காக அளித்த உதவியும்,(c) போருக்குப் பிற்பட்டகாலத்தில் (1945க்குப் பின்)அது பொருளாதார வளர்ச்சியில் பின்தங்கிய நாடுகளுக்கு அளித்துவரும் பெரும்பொருளுதவியும், அதற்குவல்லரசாகும் வாய்ப்புக் களைக் கொடுத்துள்ளன. (a) அமெரிக்காவின் பொருளாதார வளர்ச்சியே, அது 1861–65ல் தனது உள்நாட்டுப் போரை முடித்து, அதன் விளைவாக நாட்டில் ஒற்றுமையை நிலைநாட்டிய பின்னர்தான் ஏற்பட்டது என்று நாம் கூறலாம். அதன் இயற்கைச் செல்வ வளங்கள் அளவிடற்கரியன; அதன் மக்கள் தொகையும் அளவிற் சிறியது; ஆயினும் அம்மக்கள் தனி மனித உரிமை உணர்ச்சியும் (individual freedom), குடியாட்சி உணர்வும், தன் முயற்சிப் பண்பும் நிரம்பப் பெற்றவர்கள்; இவற்றுக் கேற்பவே அவர்களுடைய சமுதாய, அரசியல், பொருளியல் அமைப்புக்களும் உருவாயின. தனிமனித சுதந்திரத்தினடிப்படையில் இவை அமைக்கப்பட்டன. தொழிலிலும், வாணிபத்திலும் தனியார் துறையே அங்கு ஈடுபட்டுள்ளது. அரசாங்கத்துக்கு இவற்றில் இருக்கும் பங்கு மிகவும் குறைவு. ஒவ்வொருவரும் தத்தம் உழைப்புக்கும் முயற்சிக்கும் ஏற்ப உயர்ந்த வாழ்க்கைத் தரத்தைப் பெறுவதற்கு இடம் கொடுக்கும் வகையில்,அந்நாட்டின் இம் மூன்று அமைப்புக்களும் தொன்றுதொட்டு இருந்து வருகின்றன. அறிவியற்கலையிலும், தொழில் நுட்பக் கலையிலும் (science and technology), இந்நாடு

முன்னேறி வந்துள்ளது. அங்கே சிறந்த குடியரசுத் தலைவர்களாகிய ஜார்ஜ் வாஷிங்டன் (1789 – 1797), ஜான் ஆடம்ஸ் (1797 – 1801), ஜெபர்சன் (1801 – 1809), ஆண்ட்ரூஜாக்சன் (1829–1837) ஆகியோரின் ஆட்சியில் சமுதாய, அரசியலமைப்புக்கள் தனிமனித சுதந்திரத்தி னடிப்படையில் செம்மையாக அமைக்கப்பட்டன. தொழிலும், வாணிபமும் வளர்ந்தன. ஐரோப்பாவிலிருந்து ஜெர்மனியர், ஆஸ்திரியர், ஐரிஷார், ஸ்காண்டிநேவியர், இத்தாலியர், ரஷ்யர் முதலிய இனத்தார் சிலர் அங்கு வந்து குடியேறி, தொழில்செய்து, கலந்து வாழவும், அமெரிக்க தேசியஇனம் தோன்றிற்று. இரயில், அஞ்சல் முதலிய துறைகள் தோன்றி நாட்டை இணைத்தன. வேளாண்மைத் தொழிலும், ஆலைத்தொழிலும் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் சமவிகிதத்தில் வளர்ந்தன. எண்ணெய் எடுத்தல், இரும்பு,எஃகுத் தொழில்,நிலக்கரி எடுத்தல், இரயில் போன்ற போக்குவரவு நிறுவனங் களை இயக்குதல் ஆகிய தொழில்களைப் பெரும் தொழிற்கழகங்கள் (great corporations and trusts) நடத்தின. தொழிலாளர் சங்கங்கள் தோன் றின; காப்புவரி முறையின் (Protection) மூலம் பெரும் தொழில்கள் ஊக்கம்பெற்றன. நாட்டினுடைய எல்லையும் விரிவடைந்தது; புளாரிடா (1819), டெக்ஸாஸ் (1840), நியூமெக்சிகோ, கலிபோர்னியா முதலியவை அமெரிக்கக் கூட்டரசில் மாகாணங்களாகச் சேர்ந்தன; 1867-ல் ரஷ்யாவிடமிருந்து அலாஸ்க்கா மாகாணம் வாங்கப் பட்டது; 1898-ம் ஆண்டில் ஸ்பெயின்மீது கிடைத்த வெற்றியின் விளைவாக அமெரிக்காவுக்கு குவாம், போர்ட்டோரிக்கோ, பிலிப்பைன்ஸ் முதலியவை கிடைத் தன. ஹவாய் தீவுகள் இணைக்கப்பட்டன. 1903-ல் பனமா கால்வாய்ப் பகுதி வாங்கப்பட்டது. இவ்வாறு தேசிய உணர்வும், குடியாட்சி முறையும், பொருளியல்

வளர்ச்சியும் அமெரிக்கிடையே பேரரசுக் கொள்கையைத் (imperialism) தோற்றுவித்தன. கியூபா, நிகராகுவா, ஹெய்ட்டி முதலிய நடு அமெரிக்கக்குடியரசுகளில் படைகளை அனுப்பி அமைதியை நிலைநாட்டும் பொறுப்பை ஐக்கிய அமெரிக்கநாடு கையாண்டது; கியூபாவில் கப்பல் தளத்தை அது பெற்றது; இச் சிறு குடியரசுகளின் நிதிநிலைமையைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தையும் அமெரிக்கா கையாண்டது. இவ்வாறு பொருள் வளர்ச்சியே இந்நாடு வல்லரசாக விளங்குவதற்குப் பெருங்காரணமாயிற்று.

(b) தன்னைச் சுற்றிலும் தன்னைச் சார்ந்துள்ள நாடுகளை ஐக்கிய அமெரிக்கநாடு உண்டாக்கியபின், 1914–18ல் நடைபெற்ற முதல் உலகப்போரில் பிரிட்டன், பிரான்ஸ் முதலிய நேசநாடுகளின் பக்கம் அது சேர்ந்து, போரை வெற்றியான முடிவுக்குக் கொண்டுவந்தது. அதனுடைய தலைவர் உட்ரோ வில்சன், வெர்செய்ல்ஸ் அமைதி உடன்படிக்கை வரையப்படும்போது, தேசிய சுய நிர்ணய உரிமையை வகுத்தார். பதினான்கு குறிப்புக்களை வரைந்து, சர்வதேச சங்கத்தையும் அவர் நிறுவினார். இவ்வாறு உலக அமைதிக்கும், பாதுகாப்புக்கும் ஏற்ற நல்ல சில திட்டங்களை அவர் வகுத்தார். இரு உலகப் போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தில், அமெரிக்க நாட்டின் உதவி எவ்வளவுக்கு உலக அமைதிக்கும், பாதுகாப்புக்கும் இன்றியமையாதது என்பதைச் சில நிகழ்ச்சிகள் தெளிவாக எடுத்துக்காட்டின. அது சர்வதேச சங்கத்தில் சேரவில்லை; அது சேர்ந்திருந்தால் அதனுடைய துணைகொண்டு, சங்கம் மீண்டும் போர் மூளாதபடி செயலாற்றியிருக்கக்கூடும். அமெரிக்காபெருமளவில்முதலீடுசெய்து,முதல் உலகப்போரில் சிதைந்து

போன ஜெர்மன் தொழிலுக்குப் புத்துயிர் அளித்தது; இவ்வாறு அமெரிக்கப் பொருள்வளம் இருக்கும்வரை, ஜெர்மனியில் ஹிட்லரின் சர்வாதிகார ஆட்சி தோன்றாம லிருந்தது; அமெரிக்க முதலீடு ஜெர்மனியிலிருந்து எடுக்கப்பட்ட பிறகு (1929), பொருள் வளத்தை இழந்த ஜெர்மனியில் நாசிச சர்வாதிகாரம் தோன்றிற்று. இரண்டாம் உலகப்போரில் ஐக்கிய அமெரிக்க நாடு பெருமள வில் போர்ப் பொருள்களையும், மக்கள் நுகர்வுப் பொருட்களையும் (Civil Supplies) உற்பத்தி செய்து, பிரிட்டன், ரஷ்யா, சீனு முதலிய நாடுகளுக்களித்து, ஜப்பானைப் பணியவைத்தது.

(c) 1945-ம் ஆண்டுக்குப் பின்னர் ஐக்கிய அமெரிக்க நாடு, தனது அரசியல் சூழ்வலியையும் (Diplomatic Strength), இராணுவ வலிமையையும் (Military Strength) பெருக்கி வந்துள்ளது. பிரிட்டிஷ் பேரரசு 1945-க்குப் பின்னர் ஆசியாவிலும் ஆப்பிரிக்கா விலும் மறையத் தொடங்கியதும், அமெரிக்கா புதிய சுதந்திர நாடுகளின் நண்பனுக இருப்பதற்கு முயன்று வந்துள்ளது. தனி மனித சுதந்திரத்தையும், அதனடிப் படையில் அமைந்த சமுதாய, அரசியல் முறைகளையும் ஏற்றுக்கொள்ளும் நாடுகளாகிய பிரிட்டன், பிரான்ஸ், மேற்கு ஜெர்மனி முதலியனவும், மற்ற மேற்குஐரோப்பிய நாடுகளும் அமெரிக்காவின் தலைமையை ஏற்று, அதன் வாயிலாகத் தமது கொள்கைகளைப் பெரும்பாலும் வகுத் துள்ளன. மேற்கு ஜெர்மனி இன்று தொழில் முன் னேற்றமடைந்திருப்பதும், மற்ற மேற்கு ஐரோப்பிய நாடுகளில் பொருளாதார வளர்ச்சி சீராக இருப்பதும், இவற்றுக்கு அமெரிக்கா பல ஆண்டுகளாகத்தொடர்ந்து "மார்ஷல் திட்ட உதவி", "ட்ரூமன் திட்ட உதவி" முதலியவற்றின் மூலமாகப் பெருமளவில் பொருளுதவி செய்து வந்திருப்பதனுல்தான்.

3, ரஷ்யா உலகத்தில் வல்லரசாகத் தோன்றியது 1917-ம் ஆண்டுப் புரட்சிக்கப்புறமும், பெருமளவு 1945-ம் ஆண்டில் இரண்டாம் உலகப்போர் முடிந்ததற்குப் பிற்பட்ட காலத்திலும்தான் நடைபெற்றது. அதனுடைய வளர்ச்சியைக் காட்டும் நிலைகளைப் பின்வருமாறு பிரித்துக் கூறலாம்: (a) பொருளாதார வளர்ச்சி; (b) இரண்டாம் உலகப்போரில் அதன் பங்கு; (c) சோஷலிசம் அல்லது பொதுவுடைமைக்கு இப்பொழுதுள்ள மதிப்பு; (d) அறிவியல் துறைகளில் முன்னேற்றம்,

(a) ஐக்கிய அமெரிக்க நாட்டுக்கு இருப்பதைப் போல சோவியத் ரஷ்யாவுக்குப் பெருமளவில் இயற்கை வளங்கள் இல்லாவிட்டாலும், கிடைக்கக்கூடிய வளங்களை உழைத்துப் பயன்படுத்தக்கூடிய திறன் அதன் மக்களிடம் உண்டு என்பதை, அது பல ஐந்தாண்டுத் திட்டங்களை நிறைவேற்றியிருப்பதன் மூலம் அறியலாம். எல்லாத் தொழில்களையும் அரசாங்கமே அந்நாட்டில் ஏற்று நடத்துகிறதாகையால், தனியார் துறை அமெரிக்காவில் இருப்பதைப்போல, அங்கு இயங்க இயலாது; இத்தகைய அரசாங்கக் கட்டுப்பாட்டினடிப்படையில் தான் அந்நாட்டின் அரசியலமைப்பும், சமுதாய அமைப்பும் வளர்ந்துள்ளன. எனவே இவ்வகையில் அதற்கும் ஐக்கிய அமெரிக்க நாட்டுக்கும் நேர்மாறான அமைப்பு இருக்கிறது, ஒன்று தனி மனித சுதந்திரத்தையும், மற்றொன்று சமுதாயத்தின் சார்பாக அரசாங்கக் கட்டுப்பாட்டையும் பின்பற்றுகின்றன. சோவியத் ரஷ்யாவில் கட்சி சர்வாதிகார ஆட்சி (Party Dictatorship) முறை நடைபெறுகிறது. திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சி முறை என்பதனைச் செயல்படுத்திக் காட்டியதனால், சோவியத் ரஷ்யா, பின்தங்கிய ஆசிய, ஆப்பிரிக்க நாடுகள் பலவற்றில் செல்வாக்குடையதாக இருக்கிறது.

(b) இரண்டு உலகப் போர்களுக்கும் இடைப்பட்ட காலத்தில், சோவியத் ரஷ்யாவுக்கு இப்போதுள்ளதைப் போல் பெருமளவில் ஆதரவில்லை; ஸ்டாலினின் ஆட்சியில், அது உலகப் பொதுவுடைமைப் புரட்சி என்ற முயற்சியைக் கைவிட்டுவிட்டது; அதற்கெதிராக அருகில் ஜெர்மனி நாசி சர்வாதிகாரமும், தெற்கே பாசிச சர்வாதிகாரமும் இருக்க, அது சர்வதேச சங்கத்தில் சேர்ந்தது. இரண்டாம் உலகப் போரில் ஜெர்மனி ரஷ்யாவைத் தாக்கும்வரை (1941). அதனை ஐயுறவுடனும், அச்சத்துடனும் நோக்கிய மேற்கத்திய நாடுகள், போரில் ஜெர்மனியைத் தோற்கடிக்கும் வரை, ரஷ்யாவுடன் ஒத்துழைப்பும், நட்பும் காட்டின. போரில் ஜெர்மனி தோற்கடிக்கப்படுவதற்கு ரஷ்யா செய்த தியாகமும், பங்கும் அளவிடற்கரியவை; இதனால் போருக்குப் பின்னர் அதன் வலிமையும், செல்வாக்கும்ஓங்கிவரலாயிற்று. மீண்டும் அதனை ஐயப்பாட்டுடனும், அச்சத்துடனும் மேற்கத்திய நாடுகள் நோக்கினாலும், சோவியத் ரஷ்யா ஓர் வல்லரசுதான் என்று உணர்ந்து, அவை அதனை மதித்து வருகின்றன.

(c) முன்னர் பொதுவுடைமை என்ற கருத்தின் மீது பல நாடுகளுக்கிருந்த வெறுப்பு ஓரளவு மாறி, இப்போது அதன் மீது மதிப்பும் ஏற்பட்டிருக்கிறது. இதற்கு இந்நெறியைக் கடைப்பிடித்த ரஷ்யா, இரண்டாம் உலகப் போரில் வெற்றிபெற்றதும், பொருள் வளத்தில் பின் தங்கிய பல ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளுக்கு இந் நெறியின் மூலமாகத்திட்டமிட்ட பொருளாதார வளர்ச்சிக்குவழிஉண்டு,என சோவியத்ரஷ்யா நடத்திக்காட்டியதும் காரணங்களாம். எனவே இந் நெறியும் இந்நாடு வல்லரசாகத் தோன்றுவதற்கு வழி செய்ததெனக் கூறலாம். கிழக்கு ஐரோப்பாவில் கிழக்கு ஜெர்மனி,

போலந்து, செக்கோஸ்லோவேகியா, ருமேனியா, ஹங்கேரி, பல்கேரியா, அல்பேனியா, யூகோஸ்லேவியா முதலியவையும், ஆசியாவில் சீனுவும், சோவியத் முறையை அரசியல், பொருளியல், சமுதாய அமைப்பு முதலியவற்றில் பின்பற்றி, அதற்கு ஆதரவளிக்கின்றன. மற்ற நாடுகள் பெரும்பாலானவற்றில், சோவியத்ரஷ்யா வின் படைவலிக்கும், பொருள் வளர்ச்சிக்கும் மதிப்புக் கொடுக்கப்படுகிறது. இச் சூழ்நிலையில் அது வல்லரசாக வெகு விரைவில் தோன்றிற்று.

(d) முன்பு அறிவியலிலும், தொழில் நுட்பத் துறையிலும் பின்தங்கியிருந்த சோவியத் ரஷ்யா, வெகு விரைவாக, இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர், உலகம் வியக்கத்தக்க வண்ணம் முன்னேற்றமடைந் துள்ளது. அதுவே முதன் முதலில் ராக்கெட்டுகளையும் (rocket), ஸ்புட்னிக்குகளையும் (Sputniks) கையாண்டு, சூரியனையும், சந்திரனையும்,விண்வெளியையும் ஆராய்ச்சி செய்து, பயனுள்ள செய்திகளை உலகுக்குஅளித்துள்ளது இம்முன்னேற்றமும் அதற்கு வல்லரசு என்ற நிலையை அடைய உதவிற்று.

4. இரண்டாம் உலகப்போருக்குப் பின்னர் இவ்விரு வல்லரசுகளுக்குமிடையே முன் இருந்த பிளவும்,பகையும் வளர்ந்தன. வெற்றிக்கு உதவிய சோவியத் ரஷ்யாவின் முயற்சியினல் பொதுவுடைமைக் கருத்து பரவுவதைத் தடுப்பதற்காக,ஐக்கிய அமெரிக்கநாடு வட அட்லாண்டிக் இராணுவ ஒப்பந்த அமைப்பை (N.A T.O.) ஏற்படுத்தி, மேற்கு ஐரோப்பிய நாடுகளை கம்யூனிசச் சர்வாதிகாரத் தினின்றும் காக்கமுயன்றது. இதே நோக்கத்துடன் மத்திய கிழக்கு நாடுகளில் பாக்டாட் ஒப்பந்தம் என்ற ஒரு ஒப்பந்தம் செய்யப்பட்டிருந்தது. (ஆனல் இப்போது

இவ்வொப்பந்தம் மறைந்துவிட்டது). கிழக்கே கம்யூனிசம் சீனுவின் மூலம் பரவுவதைத் தடுக்க அமெரிக்காவும் வேறுசில நாடுகளும் தென்கிழக்கு ஆசிய இராணுவ ஒப்பந்த அமைப்பை (S. E. A. T. O.) ஏற்படுத்தியுள்ளன. இதற்கெதிராக சோவியத் ரஷ்யாவும், கிழக்கு ஐரோப்பிய நாடுகளும், கம்யூனிச சீனுவும், வார்சா ஒப்பந்த அமைப்பை (Warsaw Pact) ஏற்படுத்தியுள்ளன. ஐக்கிய அமெரிக்காவும், சோவியத் ரஷ்யாவும் போட்டி போட்டுக் கொண்டு இராணுவ வலியைப் பெருக்குவதும், அணுக்கருவிகளைச் செய்வதுமாக இருந்தன. உலகத்திலேயே மிகப்பெரிய நீர்மூழ்கிப் படை ரஷ்யாவின் வசம் உள்ளது. ஐக்கிய நாடுகள் சபையின் மூலமாகப் படைக் குறைப்புக்காகச் செய்யப் பட்ட முயற்சிகளெல்லாம், இரு நாடுகளும் ஒத்துவராததால் பயனளிக்கவில்லை. பல உலக அரசியல் பிரச்சினைகளிலும் (கொரியா, சூயஸ்கால்வாய், இந்தோ சீனு, காங்கோ, ஜெர்மனிய இணைப்பு) இரண்டுக்கும் வேறு பட்ட கருத்துக்கள் இருந்து வருகின்றன.

5. இவ்வாறு இருப்பினும், இரண்டும் தமக்குள்ள பகையை நீக்கினுல்தான் தங்களுக்கும், உலகத்துக்கும் நன்மை உண்டு என்பதை நன்ருக உணர்ந்துள்ளன. எனவே பல முக்கியமான துறைகளில் அவை ஒத்துழைத்தும் வருகின்றன. 1955–ல் அமைதிக்கு உகந்தமுறையில் அணு ஆற்றலைப் பயன்படுத்துவதற்காக ஒரு சர்வதேச நிறுவனத்தை அவை நிறுவியுள்ளன. 1963ல் அணுக்கருவிச் சோதனை நிறுத்த ஒப்பந்தத்தை இரண்டும் ஏற்று, அதன்படி நடந்து வருகின்றன. இரண்டின் தலைநகரங்களுக்குமிடையே நேரான செய்திப் போக்குவரவு இருக்கின்றது. அண்மையில், இரண்டும் தத்தம் படை அளவை ஓரளவு குறைத்து

வருகின்றன. விண்வெளி ஆராய்ச்சிக்குரிய சில பொது விதிகளை ஏற்றுக்கொண்டு, அவற்றை ஓர் தீர்மானமாக ஐ நா. கழகத்தில் இரண்டும் நிறைவேற்றியுள்ளன. இரண்டிற்கும் பல வேற்றுமைகள் இருந்தாலும்; இரண்டும் ஒத்துழைத்தால்தான் உலகம் வாழ வழி உண்டு.

— x —

## (10) ஏனைய வல்லரசுகள்

## (Other World Powers)

1. முன்னுரை, 2. பிரிட்டன், 3. பிரான்ஸ், 4. எகிப்து, 5. கனடா.

1. இரண்டாம் உலகப் போருக்குப்பின் உலகத்தில் இருபெரும் வல்லரசுகளாகக் கருதப்படுபவை ஐக்கிய அமெரிக்க நாடும், சோவியத் ரஷ்யாவும் ஆகும். இன்றைய உலகில் ஓர் நாடு வல்லரசாக ஆவதற்கு, அது பொருள்வளம், இராணுவ வலிமை முதலியவற்றில் ஏதேனுமொன்றிலாவது வளர்ச்சிபெற்று, அதன் விளைவாக உலக அரசியற் பிரச்சினைகளுக்குத் தீர்வு காண்பதில் ஓரளவு பங்கு அல்லது பொறுப்பு பெற்றிருத்தல்வேண்டும். இவ்வகையில் பார்க்கும்போது,

ஐக்கிய அமெரிக்க நாடும், சோவியத் ரஷ்யாவுமே மற்ற நாடுகளெல்லாவற்றிலும் வலிமைமிகுந்து இருக்கின்றன. எனினும், இவற்றைத்தவிர வேறுசில நாடுகளும் ஓரளவேனும் செல்வாக்கை உடையனவாக இருக்கின்றன.

2. பிரிட்டன் :— இரண்டாம் உலகப்போர் முடியும் வரை, உலகத்திலேயே மிகப்பெரிய ஏகாதிபத்திய

நாடாக இருந்துவந்த பிரிட்டன், தனது பேரரசிலுள்ள நாடுகளுக்கெல்லாம், இப்போது சுதந்திரம் வழங்கி விட்டு, ஏகாதிபத்திய நாடாக இல்லாமல், ஓர் சாதாரண நாடாக இருக்கிறது. எனினும், அது நெடுங்காலமாகப் பேணிக்காத்து, உலக நாகரிக மக்களுக்கெல்லாம் வழங்கியுள்ள அரசியல் உரிமை, பாராளுமன்றக் குடியாட்சி அரசாங்கம், சட்டவகைகள் ஆகியவற்றைப் பற்றிய நல்ல கருத்துக்களெல்லாம், இந்நாட்டை மற்றவை பலதுறைகளில் பின்பற்றும்படியாக ஆக்கி யுள்ளன. அரசியல், பொருளியல், சமுதாயம் முதலிய துறைகளில் இந்நாடு அழிவைத்தரும் தீவிரமான கருத்துக்களிலோ, செயல்களிலோ ஈடுபட்டது கிடை யாது. வெளிநாட்டு உறவுகளிலும் இதுசக்தி சமநிலைக் கோட்பாட்டை நெடுங்காலமாக நிலைநிறுத்தி வந்துள் ளது. நிதானமான போக்கும், எதிர்காலநோக்கும் உடைய இந்நாட்டுஅரசியல் வல்லுநரின் கருத்துக்களுக்கு, உலக அமைதியையும், பாதுகாப்பையும்விரும்பும்நாடுகள் மதிப் புக்கொடுத்துவருகின்றன. அணுஆராய்ச்சியிலும், வேறு விஞ்ஞான, தொழில் நுட்பத் துறைகளிலும் இது முன்னேறியுள்ளது. பேரரசை இழந்தாலும், இது பொருளாதாரத் துறையில் தன் நிலையைக் காத்துக் கொள்ளக்கூடிய ஆற்றலுடையதாக இருக்கிறது. பொருளாதார வளர்ச்சியில் பின்தங்கிய இந்தியா போன்ற நாடுகளுக்கும் இது உதவிசெய்துவருகிறது.

3. பிரான்ஸ்:- பிரான்சும் பிரிட்டனைப் போல் அண்மைக்காலம் வரையில் ஒரு சிறிய பேரரசை வைத் திருந்து, பின் அதைச் சுதந்திர நாடுகளாக ஆக்கி யுள்ளது. ஆனால் பிரிட்டனைப்போல் இது பொருளா தாரத்துறையில் தன் நிறைவு அடையக்கூடிய ஒற்றுமை யும், ஆற்றலும் இல்லாமலிருந்திருக்கிறது. நிலையான

அரசாங்கமும், சீரான பொருளாதார அமைப்பும் இதற்கு இன்னும் ஏற்படவில்லை. எனினும் கூரிய அறிவாற்றலுடைய பிரஞ்சு மக்கள் முன்னேற்றத்துக்குரிய முயற்சிகளில் ஈடுபட்டுள்ளனர். அணு ஆற்றலை அறிந்த நாடுகளில் ஒன்ருக இது இருக்கிறது. பெருகு வியலில் இது பின்தங்கிய நாடுகளுக்கு உதவியும் செய்துவருகிறது.

4. எகிப்து: வடகிழக்கு ஆப்பிரிக்காவிலும், மேற்கு ஆசியாவிலும், அரசியல் செல்வாக்கு உள்ள நாடாக இது இருக்கிறது. இது சில ஆண்டுகளுக்கு முன்பு குடியரசாக ஆயிற்று. 1956-ல் இது தனது உரிமையான சூயஸ் கால்வாயைத் தன்வசம் எடுத்துக்கொள்ளவே, இக்கால்வாயை நிர்வாகம் செய்துவந்த பிரிட்டனும், பிரான்சும்; யூதநாடாகிய இஸ்ரேலோடு சேர்ந்து, சிலவாரங்கள் எகிப்தைத் தாக்கிப்போரிட்டன. இதில் இந்நாடு ரஷ்யா, மற்றும் பல உலகநாடுகள், ஆகியவற்றின் ஆதரவைப்பெற்றது. யூதர்களுக்கெதிராக, அராபியரின் தேசிய உணர்வைக்காப்பாற்றும் காவலனுக, இதுதனது அயல்நாட்டுக்கொள்கைகளை வகுத்துச் செயலாற்றுகிறது. பெரும் வல்லரசுகளுக்கிடையில் நல்லுறவை ஏற்படுத்துவதற்கும், அவ்வப்போது தோன்றும் சில சிக்கல்களைத் தீர்ப்பதற்கும், கூடும் உச்சகட்ட மாநாடுகளில் இது பங்குகொண்டுள்ளது. பொதுவாக ஆப்பிரிக்க நாடுகளிடையேயும், மற்ற பின் தங்கிய நாடுகளிடையேயும் இதற்கு அரசியல் செல்வாக்கு உண்டு. இது தீவிரமான சர்வாதிகாரப் போக்குகளை ஆதரித்ததில்லை.

5. கனடா: புதிய உலகமாகிய அமெரிக்கக்கண்டங்களில், ஐக்கிய அமெரிக்கக் கூட்டரசு நாட்டுக்கு அடுத்தபடியாகக் கனடா நாடு வளமும், வலிமையும்

பெற்று விளங்குகிறது. பிரிட்டிஷ் பாராளுமன்றக் குடியாட்சி மரபையொட்டிய அரசியலமைப்பில் இந் நாடு வளர்ந்து, முதல் பிரிட்டிஷ் டொமீனியனாக அமைந்தது. இது தொழிலிலும், வாணிபத்திலும், விஞ்ஞானத்திலும், கல்வியிலும் மற்ற முன்னேற்றமடைந்துள்ள நாடுகளோடு ஒப்பிடத்தக்க வகையில் வளர்ச்சி பெற்றுள்ளது. இதன் இராணுவ பலமும் பாராட்டத் தக்கது. இரு உலகப்போர்களிலும் இது பிரிட்டனுக்குப் பேருதவி செய்தது அணு ஆராய்ச்சியும் இது செய்துள்ளது. இதுவும் பொருளாதார வளர்ச்சியில் பின் தங்கிய நாடுகளுக்கு உதவிசெய்து வருகிறது.

## (11) ஐக்கிய நாடுகள் சபை

### (The United Nations Organisation)

1. முன்னுரை; 2. சபையின் நோக்கங்கள்; 3. சபை உறுப்புக்களின் அமைப்பும், அலுவல்களும்; 4, கழகம் செய்துவந்துள்ள செயல்கள்; 5. முடிவுரை: எதிர்காலத்தைப்பற்றிய நம்பிக்கை.

1. ஐக்கிய நாடுகள்சபை என்ற நிறுவனமானது, உலகத்தில் அமைதியும் பாதுகாப்பும் நிலைபெறுதல் வேண்டுமென்ற, மக்களுடைய உள்ளார்ந்த நெடு நாளைய விருப்பத்தை யாவருக்கும் வெளிப்படையாகக் காட்டும் ஒரு அறிகுறியாக இன்று விளங்குகிறது. உலக நாடுகளிடையே நல்லுறவையும், அமைதியையும், பாதுகாப்பையும் ஏற்படுத்தும் பொருட்டுப் பண்டைக் காலத்தில், அவ்வப்போது பல இறைமை நாடுகள் சேர்ந்த கழகங்கள் தோன்றியதுண்டு. ஜெர்மனி, இத்தாலி, ஜப்பான் முதலிய அச்சு நாடுகளுக்கு எதிராக

பிரிட்டன், பிரான்ஸ், சோவியத் ரஷ்யா, ஐக்கிய அமெரிக்கநாடு, சீனு முதலிய நேசநாடுகள் 1939 முதல் 1945 வரை போரிட்டு வெற்றியடைந்தபின், இக்கழகம் தோன்றிற்று. போர்க் காலத்திலேயே நேச நாடுகளுக்கிடையே போரை வெற்றியாக நடத்துவதற்கு இணைப்பை ஏற்படுத்தும் நோக்கத்தோடு, இந் நாடுகளின் தலைவர்களும், அமைச்சர்களும் பலதடவைகள் பேச்சுவார்த்தைகள் நடத்தினர்; போருக்குப் பிற்பட்ட காலத்திலும் இந் நாட்டினர் ஒன்றுபட்டு, அமைதியை ஏற்படுத்துவதற்காக அரசியல் கேள்விகளையும், மற்றவற்றையும் தீர்த்தல் வேண்டுமென இவர்கள் முடிவு செய்தனர். இவ்வாறு ஒன்றுபட்ட நாட்டினரையே United Nations என அப்பொழுதைய அமெரிக்கக் குடியரசுத்தலைவர் ரூஸ்வெல்ட் அழைத்தார். இப்பெயரே விரிவடைந்துள்ள இக்கழகத்திற்குப் பெயராக இன்றும் நிலைத்து நிற்கிறது. இப்பொழுது இதில் 118 உறுப்பு நாடுகள் சேர்ந்திருக்கின்றன. இதனுடைய பட்டயம் (Charter) இதில் முதலில் சேர்ந்த நாடுகளினுல் ஒப்புக்கொள்ளப்படவும், 1945-ம் ஆண்டு அக்டோபர் மாதம் 24-ம் நாள் இக்கழகம் தோன்றிற்று.

2. உலக நாடுகளிடையே அமைதியையும், பாதுகாப்பையும் ஏற்படுத்துவதும்; எல்லா நாடுகளுடைய ஒத்த உரிமைகளுக்கும் மதிப்புக்கொடுப்பது என்ற அடிப்படைக் கொள்கையின்பேரில் நாடுகளிடையே நட்பு உறவுகளை வளர்ப்பதும்; பொருளாதார, சமுதாய, நாகரிகத்துறைகளிலும், மற்றவற்றிலும் எழும் கேள்விகளையெல்லாம் தீர்ப்பதில் அனைத்துலக நாடுகளிடையேஒத்துழைப்புமனப்பான்மையை வளர்ப்பதும்; இந்த நோக்கங்களை நிறைவேற்றப் பாடுபடும் நாடுகளின் செயல்களையெல்லாம் முரண்பாடு இல்லாமல்

இணைப்பதற்கு ஒரு நிறுவனமாகச் செயலாற்றுவதும்; ஆகிய நான்கும் இக்கழகத்தின் பொதுவான குறிக்கோள்கள் ஆகும்.

3. சபையின் உறுப்புக்கள். (1) பொதுமன்றம் (General Assembly): அளவில் பெரியதும், உலக மனிதரின் பாராளுமன்றம் (Parliament of Man) என்று, அழைக்கப்படுவதுமான பொதுமன்றத்தில் கழகத்தின் உறுப்பு நாடுகளனைத்தும் உறுப்பினரே; ஒவ்வொரு உறுப்பு நாடும் ஐந்து பிரதிநிதிகளை இதற்கு அனுப்புகிறது; ஆனால் ஒவ்வொன்றுக்கும் ஒரே வாக்குத்தான் (Vote) உண்டு. இதன் பொதுக்கூட்டம் ஆண்டுக்கு இருமுறை நடைபெறும்; தேவைப்பட்டால் சிறப்புக் கூட்டம் நடைபெறும். உலக அமைதி, பாதுகாப்பு ஆகியவைபற்றி எழும் கேள்விகளையும், சிக்கல்களையும் இது ஆய்வு செய்கிறது; ஆயினும் இத்தகைய கேள்விகள் ஏற்கனவே பாதுகாப்புச் சபையின் ஆய்வுக்கு வைக்கப்பட்டிருந்தால், பொதுமன்றம் இக் கேள்விகளின்மீது எத்தீர்மானத்தையும் நிறைவேற்றாது. இதில் நிறைவேற்றப்படும் தீர்மானம் ஒவ்வொன்றுக்கும், இதில் கூட்டத்திற்கு வந்திருந்து, தீர்மானத்தின்மீது நடைபெறும் வாக்கெடுப்பிலும் கலந்துகொள்ளும் மொத்த உறுப்பு நாடுகளில்,மூன்றில் இரண்டு பங்கு உறுப்பினரின் ஆதரவாவது இருத்தல் வேண்டும். இக்கழகத்தின் மற்றெல்லா உறுப்புக்களிடமிருந்தும் அவற்றின் ஆண்டு அறிக்கைகளை இது வாங்கி, ஆய்வுசெய்து, முடிவெடுக்கிறது. இதன் மூன்றில் இரண்டுபங்கு உறுப்பினரின் வாக்குகளின் பேரில், இந்தமன்றம், பாதுகாப்புச் சபையின் நிரந்தரமல்லாத உறுப்பினர்களையும் (10 உறுப்பினர்), பொருளியல் சமுதாயச் சபையின் (Economic and Social

Council) எல்லா உறுப்பினரையும், சபையின் பொறுப்பாளர், மன்றத்தின் (Trusteeship Council) சிலஉறுப்பினரையும், உலக நாடுகளின் நீதிமன்றத்தின் நீதிபதிகளையும்,கழகத்தலைமைச்செயலாளரையும்தேர்ந்தெடுக்கிறது.

(2) பாதுகாப்புச் சபை (Security Council): இச் சபையில்,அண்மையில் பட்டயத்தில் செய்யப்பட்ட திருத்தத்தின் விளைவாக இப்பொழுது 15 உறுப்பினர் இருக்கின்றனர்; இவருள் சோவியத் ரஷ்யா, ஐக்கிய அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ், தேசிய சீனு முதலிய ஐவரும் நிரந்தர உறுப்பினர் (Permanent members), மற்றவர் ஒவ்வொருவரும் இரண்டாண்டு காலத்திற்கு உறுப்பினராக இருக்கின்றனர். உலகத்தில் போரைத் தடுத்து, அமைதியையும், பாதுகாப்பையும் நிலை நிறுத்தும் பெரிய பொறுப்பு இப்பாதுகாப்புச் சபைக்கே அளிக்கப்பட்டிருக்கிறது; எனவே இது எப்பொழுதும் கூடியிருந்து, செயல்படுகின்ற உறுப்பு ஆகும் மேற்கூறிய கேள்விகளைப் பற்றி, இச்சபைநிறைவேற்றும் தீர்மானம் ஒவ்வொன்றுக்கும், இதன் உறுப்பினர்களில், ஐந்து நிரந்தர உறுப்பினரின் வாக்குகளையும் சேர்த்து, ஒன்பது உறுப்பினரின் வாக்குகள் ஆதரவாக இருத்தல் வேண்டும்; எனவே எந்த முக்கியக் கேள்வியின் மீதும், ஐந்துநிரந்தர உறுப்பினருள் எவரேனும், விரும்பினுல், ஆதரவு அளிக்க மறுத்து, அக்கேள்வியின்மீது தனது தள்ளுரிமையைக் (Veto power) கையாளலாம்; அவ்வாறு தள்ளப்பட்ட தீர்மானத்துக்குச் சபையின் மற்றெல்லா உறுப்பினரின் ஆதரவு இருந்தாலும், அது நிறைவேற முடியாமல் போய்விடும். இத்தள்ளுரிமையை நிரந்தர உறுப்பினருக்குக் கொடுத்த நோக்கம் யாதெனில், உலக அமைதிக்கும், பாதுகாப்புக்கும் இவ்வைந்து நாடுகளின் ஒத்துழைப்பும் இன்றியமை

யாததென்பதை வலியுறுத்துவதற்காகவே. மேலும், மறைந்துபோன சர்வதேச சங்கத்துக்கு இல்லாத ஒரு புது அதிகாரம் இச்சபைக்கு உண்டு; வன்முறையைக் கையாண்டுதான் உலக அமைதியையும், பாதுகாப்பையும் நிறுவமுடியுமென்ற நிலைமை தோன்றினால், அதற்காக இது உறுப்பு நாடுகளிடமிருந்து தரை, கடல், விமானப்படைகளைத் திரட்டுவதற்கு அதிகாரம் பெற்றிருக்கிறது—இதற்கும் நிரந்தர உறுப்பினரான வல்லரசுகளின் ஒருமித்த ஆதரவு இருத்தல் வேண்டும்.

3. பொருளாதார சமுதாய நலச்சபை: இதில் இப்பொழுது 25 உறுப்பினர்கள் உள்ளனர். கழகத்தின் அரசியலல்லாத அலுவல்களையெல்லாம் இது நிறைவேற்றுகிறது; எனவே இது உலக அமைதிக்கும், பாதுகாப்புக்கும் இன்றியமையாத நல்ல சூழ்நிலைகளை அரசியலல்லாத மற்றெல்லாத்துறைகளிலும் தோற்றுவிக்கிறது என்று நாம் கூறலாம். இதனுடைய பல குழுக்கள் ஆசிய தூரக்கிழக்கு நாடுகளுக்கான பொருளியல் குழு (E. C. A. F. E.), ஐரோப்பாவுக்கான பொருளியல் குழு (E. C. E.), தென் அமெரிக்காவுக்கான பொருளியற் குழு (E. C. L. A.) முதலியவை. இதன் ஆதரவில் நூற்றுக்கணக்கான சர்வதேச விசேட நிறுவனங்கள் (International specialised agencies) பணியாற்றுகின்றன. அவற்றுள் சில: அனைத்துலகத் தொழிலாளர் நிறுவனம்(I.L.O.) உணவு, வேளாண்மை நிறுவனம் (F. A. O.), உலக சுகாதார நிறுவனம் (W. H. O.),அனைத்துலக நிதிநிறுவனம்(I. M.F.),உலக நாடுகளின் சீரமைப்புக்கும், வளர்ச்சிக்குமான பாங்கு (I. B.R.D.), உலக வானப்பயண நிறுவனம் (I.C.A.O.), ஐக்கிய நாடுகளின் கல்வி, விஞ்ஞான, கலாச்சார நிறுவனம் (U. N. E. S. C. O.) அனைத்துலகத் தொலைச்

செய்தி அனுப்பு நிறுவனம் (I.T . O.) முதலியவை.

4. பொறுப்பாட்சிச்சபை (Trusteeship Council): இது இரண்டாம் உலகப்போரினிறுதியில் பகை நாடு களிடமிருந்து எடுக்கப்பட்ட நாடுகளை ஐ. நா. கழகத் தின், சார்பில் அதற்குப்பொறுப்பாகஇருந்துஆளுகிறது. அத்தகைய நாடுகளெல்லாம் நாளாவட்டத்தில் சுய ஆட்சி பெறுவதற்குத் தகுதி அடையும் வகையில் இது அவற்றை ஆளுகிறது.

5. அனைத்துலக நிரந்தர நீதிமன்றம் (Permanent Court of Inter-national Justice): இதன் நீதிபதிகள் அனைத்துலக நாடுகளின் சட்டத்தை(International Law) விளக்கி, அவற்றின் கோட்பாடுகளுக்கிணங்க உறுப்பு நாடுகளுக்கிடையே எழும் வழக்குகளை ஆய்ந்து,தீர்ப்புக் கூறுகின்றனர். ஆனால் வழக்கிடும் நாடுகள் தாமாகவே இதனுடைய தீர்ப்புக்களை ஏற்றுக்கொண்டு, செயல்பட் டால்தான் இத்தீர்ப்புக்கள் செல்லுபடியாகும்; இவற்றை வழக்கிடும் நாடுகள் ஏற்றுக்கொள்ளும்படி அவற்றை இந்த நீதி மன்றமோ, வேறு எவருமோ கட்டாயப் படுத்த முடியாது; எனவே இதன் தீர்ப்புக்கள் தேசீய நீதிமன்றங்களின் தீர்ப்புக்களைப்போல வழக்காளிகளைக் கட்டுப்படுத்தும் வலியற்றவை (Coercive power) என் பதை நாம் கவனிக்கவேண்டும்.

6. செயலாளர் அலுவலகம் (Secretariat): இதில் ஒரு தலைமைச் செயலாளரும்,பல உதவிச் செயலாளரும், பல கீழ்த்தர அலுவலரும் இருக்கின்றனர். செயலர் 5 ஆண்டுக்கு அலுவலை ஏற்றிருக்கிறார். இவர்களே ஐ. நா. கழகத்தின் அன்றாட அலுவல்களையும், பெரும் பொறுப்புக்களையும் நிறைவேற்றி வைப்பதில் பணி செய்கின்றனர். கழகத்தின் ஆண்டு வரவுசெலவுத்

திட்டம் வரையப்படுகிறது. இதற்கு ஆகும் செலவை உறுப்பினர் யாவரும் தரும் ஆண்டுச் சந்தாவிலிருந்து செய்கின்றனர்.

4. இக்கழகமானது இருபது ஆண்டுகளுக்கு மேலாக இருந்து வந்துள்ளது. இதனுடைய செயல்களை மதிப்பிட்டு நாம் கூறலாம். ஐ. நா. கழகம் உலகத்தில் அமைதியையும், பாதுகாப்பையும் நிறுவுவதில் ஓரளவுதான் வெற்றி அடைந்துள்ளது. அதனுடைய தூண்டுதலின் பேரில் ரஷ்யா தனது படைகளை இரான் நாட்டின் வட எல்லைகளிலிருந்தும், சிரியா, லெபனன் ஆகிய நாடுகளிலிருந்து பிரிட்டனும், பிரான்சும் தமது படைகளையும் விலக்கிக்கொண்டன; 1949-ல் ஐ. நா. கழகம் இந்தோனேஷியாவுக்கு, ஹாலண்டினிடமிருந்து சுதந்திரம் கிடைக்கச்செய்தது. ஆனால் பெரும் கேள்விகளைப் பொறுத்தமட்டில், கழகமானது, ஒன்றுக்கொன்று நேர்முரணான சோவியத் ரஷ்யா, ஐக்கிய அமெரிக்கா ஆகிய இருபெரும்வல்லரசுகளின் போட்டி, பூசல் மனப்பான்மையினால் செயலற்று நின்றிருக்கிறது. இவை இரண்டும் சமுதாயம், பொருளியல், அரசியல் முதலியவற்றில் வேறுபட்டிருப்பனவாகையால், அனைத்துலகக் கேள்விகளிலும் இவற்றின் வேறுபட்ட கருத்துக்கள் காணப்படுகின்றன. அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் முதலிய மேற்கத்திய நாடுகளும், ரஷ்யாவும், அதனுடைய கூட்டாளிகளும், ஒன்றையொன்று ஐயப்பாட்டுடனும், அச்சவுணர்வுடனும் நோக்கி, ஒன்றையொன்று அடக்கமுயலுகிறது. எனவே பாதுகாப்புச் சபையில் இவ்விருவல்லரசுகளில்,ஒவ்வொன்றும் மற்றது கொண்டுவரும் தீர்மானத்தின்மீது தள்ளுபடி (Veto) அதிகாரத்தைக் கையாண்டு வந்துள்ளது. ஆகையால் 1950-52ல்(1) வடகொரியாவும் தென் கொரியாவும் போரி

ட்டபோதும்; (2) 1948-ல் பாலஸ்டைனில் அராபியரும் யூதர்களும் போரிட்டபோதும்; (3) 1956-ல் சூயஸ்கால் வாயை எகிப்து தன் ஆதிக்கத்தில் கொண்டுவரவும், அப்போது அதை பிரிட்டனும், பிரான்சும், இஸ்ரேலும் ஒன்றுசேர்ந்து தாக்கியபோதும்; பாதுகாப்புச் சபையில் இரு வல்லரசுகளும் ஒன்றோடொன்று மாறுபட, ஒரு தீர்மானங்கூட நிறைவேறாமல் போயிற்று. இவற்றிலெல்லாம் ஐ. நா. சபையின் தலையீடு இல்லாமல்தான் போர்கள் நிறுத்தப்பட்டன. வேறுசில அரசியல் கேள்விகளில் இதனுடைய நடவடிக்கைகளுக்கு ஆதரவு இல்லை. 1946-ம் ஆண்டிலிருந்து இந்தோசீனாவில் பெரும்போர் நடைபெற்றது. 1954-ல் பிரான்ஸ், இந்தோசீனாவில் லாவோஸ், கம்போடியா, வடவியட்னாம், தென்வியட்னாம் முதலிய சுதந்திர அரசுகளை நிறுவிவிட்டு வெளியேறிற்று. வட, தென் வியட்னாம்கள் குடியாட்சிக்கு ஒத்த சூழ்நிலையில் இணைவதற்கு வழிதோன்றவில்லை. ஆப்பிரிக்காவில் பெல்ஜியக்குடியேற்ற நாடாகிய காங்கோ 1959-ல் சுதந்திரம் பெற்றாலும், வல்லரசுகளின் தலையிடுதலால், அங்கு பல்வேறு கட்சிகளுக்கு இடையே உள்நாட்டுப் போர் நடைபெற்றது. அங்கு அமைதியை நிலைநிறுத்த ஐ. நா. சபை அனுப்பும் படைக்கு ஆகும் செலவில் தனது பங்கை சோவியத் ரஷ்யா கொடுக்க மறுத்தது. அமெரிக்காவின் முயற்சி ஒன்றினாலேயே, காங்கோவில் நடைபெற்ற கடும்போர் ஓய்ந்தது.

இவையெல்லாவற்றையும்விட மிகப்பெரியதும், மேற்கு கிழக்குவல்லரசுகளிடையேஐயப்பாட்டையும் அச்சவுணர்வையும்வளர்ப்பதும், தீர்க்கமுடியாத அளவுக்குக் குழப்பத்தை உண்டாக்குவதுமான அரசியற்கேள்வி, ஜெர்மனியஇணைப்புப்பற்றிய கேள்விதான். போரில்தோற்கடிக்கப்பட்ட ஜெர்மனியின் கிழக்குப்பகுதியையும், பெர்லின்

நகரத்தின் கிழக்குப்பகுதியையும் சோவியத் ரஷ்யாவும், மற்றவற்றை அமெரிக்கா, பிரிட்டன், பிரான்ஸ் ஆகிய வையும் 1945-ல் வைத்துக்கொண்டன; பிற்கூறப்பட்ட மூன்றின் கைவசமிருந்த ஜெர்மனி இணைக்கப்பட்டுச், சுதந்திர மேற்கு ஜெர்மனி கூட்டரசுக் குடியரசு என ஆகி, அமெரிக்க உதவியால் தொழிலில் வளர்ந்து வருகிறது. அதன் வளர்ச்சியை ஐயப்பாட்டோடு நோக்கும் சோவியத் ரஷ்யா, அதற்கெதிராகக் கிழக்கு ஜெர்மனியின்மீது, தனது கட்டுப்பாட்டை வலுவாக்கு கிறது. ரஷ்யாவின் செல்வாக்கை ஐரோப்பாவில் பரவ விடாமல் தடுக்க, மேற்கத்திய வல்லரசுகள் மேற்கு ஜெர்மனிக்கு ஆதரவு தருகின்றன: இதுவரை நிலைமையில் நல்ல மாறுதல் தோன்றவில்லை; எதிர்காலத்தில் நல்ல நிலைமை ஏற்படலாம்.

அரசியல் கேள்விகளில் ஐ. நா. கழகம் வெற்றி பெருவிட்டாலும், அது சமுதாய, பொருளியல், மனித இயல் (humanitarian) முதலிய துறைகளில் கணிசமான அளவுக்கு அரும்பணிகள் செய்துள்ளதென்பதை மறுக்க இயலாது. அது, எல்லா நாடுகளாலும் கடைப் பிடிக்கப்படத்தக்க அடிப்படையான மனித உரிமை களை ஓர் சாசனமாக வெளியிட்டு, எல்லா நாடுகளும் அவற்றை ஏற்று நடக்கும்படி தூண்டுகிறது. பொது சுகாதாரம் பற்றிய அரிய ஆலோசனைகளை அது வழங்கி, தொழிலாளர் நிலைமைகளை உலகம் முழுவதிலும் அறி ந்து, புள்ளி விவரங்கள் சேர்த்து வெளியிட்டிருக்கிறது. ஆனால் தென்னுப்பிரிக்க அரசாங்கத்தைத் தனதுநிற வெறிக் கொள்கையைக் கைவிடும்படி செய்ய, அதனுல் முடியவில்லை. விஞ்ஞானக்கல்வியும். தொழில்நுட்பக் கல்வியும் வளர அது உதவுகிறது. அனைத்துலக அணு ஆற்றல் நிலையத்தை அது நிறுவியும், விண்வெளி

ஆராய்ச்சிக்குரிய பொதுக்கோட்பாடுகளை வகுத்து, அவற்றை யாவரும் ஒப்புக்கொள்ளும்படி செய்தும், நல்ல நிலைமையை அது தோற்றுவித்திருக்கிறது.

5 இவ்வாறு ஐ. நா. சபை அரசியலில் வெற்றி பெறவிட்டாலும், அதனுடைய முக்கியத்துவத்தை எவரும் மறுக்க முடியாது. ஐ. நா. இல்லாவிட்டால், இருவல்லரசுகளின் மோதலைத் தவிர்ப்பதற்கு, வேறு வழியே உலகத்துக்குக் கிடைத்திருக்காது. மேலும் ஐ. நா. வின தோல்விகளுக்கு அதனைப் பொறுப்பாகக இயலாது; அது முழுச்சுதந்திரம் அல்லது இறைமை உடைய பலநாடுகள் தாமாக விரும்பிச சேர்ந்த ஒரு நிறுவனமே தவிர, அவற்றையெல்லாம் கட்டுப்படுத்தும் செயலைச் செய்யவல்ல ஒரு உலக அரசாங்கம் அன்று; அத்தகைய அரசாங்கம் தோன்றககூடிய அளவுக்கு நாடுகள் இன்னும் பக்குவமடையவில்லை. ஆனல் அணு ஆற்றலின்ல் போரில விளையக்கூடிய பெருங்கேடுகளை நன்கு உணர்ந்தும், அணு ஆற்றலை நன்கு அறிந்தும் வைத்திருக்கின்ற வல்லரசுகள், போரைத் தவிரப்பதற் காக ஐ. நா. வையே நேரடியாக நம்பியுள்ளன எனவே அவை அதற்குத் தரும ஆதரவைப பொறுத்தே, அது வெற்றியாகத் தன் பொறுப்புக்களை நிறைவேற்ற முடியும்.

வருங்காலத்தில ஐ. நா. சபை தனது பணிகளைச் செவ்வனே செய்ய நல்ல சூழ்நிலைகள் தோன்றும், என நாம் நம்பலாம்; எவ்வாறெனில்—எல்லா நாடுகளுக்கும் அவை சிறியவையாயினும், பெரியவையாயினும், பொருள்வளமும்,விஞ்ஞான வளர்ச்சியும் உடையவை யாயினும், இல்லாதவையாயினும்,—உலக அமைதியை யும், பாதுகாப்பையும் நிலைநிறுத்துவதில் பங்கு உண்டு. அவை தமது பங்கைச் செவ்வனே நிறைவேற்ற

வேண்டுமாயின், பொருளியலில் பின்தங்கிய நாடுகளுக்கு வளர்ச்சி இன்றியமையாதது; முன்னேற்றமடைந்தவை பின்தங்கியவற்றுக்கு உதவியளித்தால்தான் நல்லுறவு வளர்ந்து, உலகம் செழித்து, அமைதி காக்கப்படும்.

"உண்டாலம்ம இவ்வுலகம் ......
... ... ... ... ... ... ... ... ... ...
தமக்கென முயலா நோன்றாள்
பிறர்க்கென முயலுநர் உண்மை யானே"

(புறநானூறு 182)

எனக் கூறினர் இரண்டாயிரமாண்டுகட்கு முன்வாழ்ந்த தமிழக அரசர் கடலுள் மாய்ந்த இளம் பெருவழுதி என்பவர். பொருள்வளம் பெருகினும், 'மக்கட்பண்பு' என்பதும் இருந்தால்தான் நல்லுறவு வளரும். இந்த நல்லநிலை— உலகப் பொதுநோக்கு—ஏற்படுவதற்கு இன்றியமையாத மனிதப் பண்புகளைக் கீழ்வரும் புறநானூற்றடிகளில் சுட்டிக்காட்டுகிறார் கணியன் பூங்குன்றன் என்ற இன்னொரு நல்ல புலவர்:-

"யாதும் ஊரே; யாவரும் கேளிர்;
தீதும் நன்றும் பிறர்தர வாரா......
..............................வாழ்தல்
இனிதென மகிழ்ந்தன்றும் இலமே, முனிவின்
இன்னா தென்றலும் இலமே........
.............................................
பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே"

(புறம், 192)

இம்மனிதப் பண்புகள் உலகெங்கும் வளர்க! வாழ்க இவ்வையகம்!